# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

*கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.*

*இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.*

*அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.*



***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

# முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ.எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## வழிகாட்டல்

**டபிள்யூ.ஏ. நிர்மலா பியசீலி**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## இணைப்பாக்கம்

**ஆர். டீ. விஜேவிக்ரம**
பிரதி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**அ. ஞானேஸ்வரன்**
அபிவிருத்தி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## ஆலோசனை

**அருட்பணி. டப்ளிவ். பீ.எபனேசர் ஜோசப்**
பொது செயலாளர்
தேசிய கிறிஸ்தவ மன்றம்.

**அருட்பணி. கலாநிதி ரியன்சி பெரேரா**
குருமுதல்வர், காலி பிரதேசம்

## பதிப்பாசிரியர் குழு

**மகேஸ்வரி சபாரஞ்ஜன்**
பணிப்பாளர்
தோட்ட பாடசாலைகளின் அபிவிருத்தி பிரிவு
கல்வி அமைச்சு

**எம். ஹேமசந்திர பெரேரா**
உதவி பணிப்பாளர் - கிறிஸ்தவம் (ஓய்வு பெற்ற)
கல்வி அமைச்சு

**பியுலா ரோசா**
விரிவுரையாளர்,
கல்வியல் கல்லூரி (ஓய்வு பெற்ற)

## எழுத்தாளர் குழு

**அருட்பணி. மிகிரி டீ. சில்வா சல்காது**
செயலாளர், கிறிஸ்தவ கல்வி மன்றம்
தேசிய கிறிஸ்தவ மன்றம்

**நிலந்தி தீபா டீ சில்வா**
ஆசிரியர்
மெதடிஸ்த உயர் கல்லூரி
புவக் அரம்ப, மொரட்டுவ.

**எம். ரதீகா சமந்தி மென்டிஸ்**
ஆசிரியர்
தூய தோமையர் கல்லூரி
கல்கிசை.

**வினிதா எம். த. சில்வா**
செயலாளர், கிறிஸ்தவ கல்வி மன்றம், (ஓய்வு பெற்ற)
தேசிய கிறிஸ்தவ மன்றம்.

**எம். ரேனுகா தமயந்தி**
ஆசிரியர்
மாவத்தகம மத்திய வித்தியாலயம்
மாவத்தகம.

**அருட்பணி. சி. டப்ளிவ். சி.பால்ராஜ்**
அதிபர்
பரி. தோமஸ் கல்லூரி,
பண்டாரவளை.

**டி. குளோரி எப்சிபா**
கிறிஸ்தவ ஆசிரியர்
இந்து கல்லூரி
கம்பளை.

**ஏ. ஜே. தயாமலர்**
கிறிஸ்தவ ஆசிரியர்
தோப்பு றோமன் கத்தோலிக்க தமிழ் மகா வித்தியாலயம்
கொச்சிக்கடை, நீர்கொழும்பு.

## கணினி வடிவமைப்பு

**நாகரட்ணம் சந்திரப்பிரியா**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## சித்திர அட்டைப்படம்

**சஜித் இஷான் ஹெட்டியாராச்சி**

# பொருளடக்கம்

# 1 இறைவாக்கும் இயேசுவின் பிறப்பும்

**கடவுள் மக்களுக்கு தமது செய்தியைக் கொடுப்பதற்கு வெவ்வேறு காலங்களில் சிலரைத் தெரிவுசெய்தார். இறைவாக்கினர்கள் என்று அழைக்கப்பட்ட அவர்கள் மக்களுக்கு கொடுத்த இறைவாக்கில் எதிர்காலத்தைக் குறித்த முன்னுரைப்பும் காணப்பட்டது.**

**எசாயா** 7:14, 11:1, 9:2, 6, 7, **மீக்கா** 5:2

***இறைவாக்கினர் என்போர்,***

*இறைவனால் அழைக்கப்பட்டு இறை ஏவுதலால் வெளிப்படுத்தப்பட்ட இறை செய்தியை மக்களுக்கு அறிவிப்பவர்களாவார்.*

***இறைவாக்குப் பணிஎன்பது,***

*இறைமக்கள் கடவுளைவிட்டு தூரச் சென்று தீயவாழ்வை வாழும்போது, அவ்வாறான தீமைக்கு காரணமானவற்றை ஆராய்ந்து பார்த்து, தீமையிலிருந்து மக்களைக் காப்பாற்றி, மீண்டும் இறைவனிடம் கொண்டுவருதலாகும்.*

*எதிர்வு கூறல் எனப்படும் இறைவாக்குரைத்தல் மூலம், இயேசுகிறிஸ்துவின் பிறப்பிற்கு பலவருடங்களுக்கு முன்னரே அப்பிறப்பு அறிவிக்கப்பட்டிருந்தது.*

*ஆன்மீக ரீதியிலும் சமூக ரீதியிலும் மக்கள் பல துன்பங்களை எதிர்நோக்கிய காலத்தில் இயேசுவின் பிறப்புபற்றிய இறைவாக்கு இறைவாக்குரைப்போரால் அறிவிக்கப்பட்டது.*

***அவ்வாறான சில இறைவாக்குகளாவன,***

**ஆதலால் ஆண்டவர் தாமே உங்களுக்கு ஒரு அடையாளத்தை அருள்வார். இதோ, கருவுற்றிருக்கும் அந்த இளம் பெண் ஓர் ஆண்மகவைப் பெற்றெடுப்பார், அக்குழந்தைக்கு அவர் 'இம்மானுவேல்'என்று பெயரிடுவார்.**
**எசாயா** 7:14

**இதோ! கன்னி கருவுற்று ஓர் ஆண்மகவைப் பெற்றெடுப்பார். அக்குழந்தைக்கு இம்மானுவேல் என்று பெயரிடுவார்.**
**மத்தேயு** 1:22-23

மரியா என்னும் ஆசிர்பெற்ற பெண் கருத்தரித்து குமாரனைப் பெற்றெடுத்தல், இயேசு பிறப்பதற்கு பலவருடங்களுக்கு முன்னரே கூறப்பட்ட இறைவாக்கின் நிறைவேற்றமாகும். அவ்வாறு பிறக்கும் குழந்தைக்கு ''இம்மானுவேல்'' என்று பெயரிடுமாறு கூறப்பட்டது. இம்மானுவேல் என்பதன் பொருள் ''கடவுள் நம்முடன் இருக்கின்றார்'' என்பதாகும். இயேசுவின் இவ்வாறான பிறப்பு முழு மனுக்குலத்திற்குமே நற்செய்தியாகும். அது மாத்திரமல்ல மீட்பைப் பெற்றுத்தரும் இறை செயற்பாடுமாகும்.

**ஈசாய் என்னும்**
**அடிமரத்திலிருந்து தளிர்**
**ஒன்று துளிர்விடும், அதன்**
**வேர்களிலிருந்து கிளை ஒன்று**
**வளர்ந்து கனிதரும்.**
**எசாயா** 11:1

**அவர் பெரியவராயிருப்பார், உன்னத**
**கடவுளின் மகன் எனப்படுவார்.**
**அவருடைய தந்தை தாவீதின்**
**அரியணையை ஆண்டவராகிய**
**கடவுள் அவருக்கு அளிப்பார்.**
**லூக்கா** 1:32

கடவுள் தாவீதுக்கு கொடுத்த வாக்குறுதியானது இறைவாக்கின் மூலம் தெரியப்படுத்தப்பட்டது. அன்றைய யூதேய நாட்டில், பெத்தலகேம் என்னும் தாவீதின் நகரத்தில், தாவீதின் வழிமரபில் நிகழ்ந்த இயேசுவின் பிறப்பு அந்த இறைவாக்கின் நிறைவேற்றமாகும். இறைவனின் திட்டம் ஆரம்பத்தில் இருந்தே செயல்பட்டது என்பதையும் அது நிறைவேறியது என்பதையும் இயேசுவின் பிறப்பு எடுத்துக் காண்பிக்கின்றது.

**காரிருளில் நடந்துவந்த மக்கள்**
**பேரொளியைக் கண்டார்கள்,**
**சாவின் நிழல் சூழ்ந்துள்ள நாட்டில்**
**குடியிருப்போர் மேல் சுடர் ஒளி**
**உதித்துள்ளது.**
**எசாயா** 9:2

**காரிருளில் இருந்த மக்கள்**
**பேரொளியைக் கண்டார்கள்.**
**சாவின் நிழல் சூழ்ந்துள்ள**
**நாட்டில் குடியிருப்போர் மேல்**
**சுடரொளி உதித்துள்ளது.**
**மத்தேயு** 4:16

**இருளிலும் இறப்பின் பிடியிலும்**
**இருப்போர்க்கு ஒளிதரவும், நம்முடைய**
**கால்களை அமைதிவழியில்**
**நடக்கச் செய்யவும் நம் கடவுளின்**
**பரிவுள்ளத்தாலும் இரக்கத்தாலும்**
**விண்ணிலிருந்து விடியல் நம்மைத்**
**தேடிவருகிறது.**
**லூக்கா** 1:79

இயேசுவின் பிறப்பின்போது யூதமக்கள் ஏழ்மை என்னும் இருளால் சூழப்பட்டு இருந்தனர். நீண்ட நாட்களாக வேறு பேரரசுகளின் ஆட்சிக்குட்பட்டு இருந்ததன் விளைவாக ஏழ்மையும் விரக்தியும் வளர்ந்து மக்கள் பெரும் இன்னல்களை சந்தித்துக்கொண்டு இருந்தனர். மேலும் பெண்கள், சிறுவர்கள், நோயுற்றோர்,

*வயோதிபர், பிற இனத்தவர் ஆகியோர் சமூகத்தில் ஒதுக்கிவைக்கப்பட்டிருந்தனர். அதனால் அவர்களும் பல இன்னல்களை சந்தித்தனர். இவ்வாறாக இருள் சூழ்ந்த தேசத்தில் வாழ்ந்தவர்களுக்கு ஒரு பேரொளியாக இயேசு பிறந்ததன் மூலம் இறைவாக்கினரின் முன்னுரைப்பு நிறைவேறிற்று.*

**ஏனெனில், ஒரு குழந்தை நமக்குப் பிறந்துள்ளார், ஓர் ஆண்மகவு நமக்குத் தரப்பட்டுள்ளார், ஆட்சிப் பொறுப்பு அவர் தோள்மேல் இருக்கும், அவர் திருப்பெயரோ வியத்தகு ஆலோசகர், வலிமைமிகு இறைவன், என்றுமுள்ள தந்தை, அமைதியின் அரசர் என்று அழைக்கப்படும்.**
**எசாயா** 9:6

**இதோ, கருவுற்று ஒருமகனைப் பெறுவீர், அவருக்கு இயேசு என்னும் பெயரிடுவீர். அவர் பெரியவராயிருப்பார், உன்னத கடவுளின் மகன் எனப்படுவார். அவருடைய தந்தை தாவீதின் அரியணையை ஆண்டவராகிய கடவுள் அவருக்கு அளிப்பார்.**
**லூக்கா** 1:31-32

*வரப்போகின்றவரின் மேன்மையைக் குறித்து முன்னுரைக்கப்பட்ட ஏசாயா இறைவாக்கினரின் வாக்கு, பின்னர் இயேசுவின் பிறப்பைக் குறித்து வானதூதர் மரியாவுக்கு கொடுத்த அறிவித்தலில் உறுதிப்படுத்தப்பட்டது. அவ்வாறே இயேசுவின் வாழ்வின் முன்மாதிரியிலும் பணியிலும் இந்த இறைவாக்கு பொருள் உள்ளதாக்கப்பட்டது.*

**நீதியோடும் நேர்மையோடும் ஆட்சிபுரிந்து அதை நிலைபெயராது உறுதிப்படுத்துவார்,**
**எசாயா** 9:7

**அவர் யாக்கோபின் குடும்பத்தின்மீது என்றென்றும் ஆட்சிசெலுத்துவார். அவருடைய ஆட்சிக்கு முடிவே இராது.**
**லூக்கா** 1:33

*இதற்கமைய வருகின்றவரின் அரசில் காணப்படும் விழுமியங்கள் (பெறுமதிகள்) இயேசுவின் குணாதிசயங்களில் வெளிப்படுத்தப்படும். நீதியும் நேர்மையும் அவற்றுள் பிரதானமானவையாகும். அவர் அனைத்து மக்களின் அரசனாக இருப்பது அதிகாரத்தினால் அன்றி நீதியினால் ஆகும். அனைவரினதும் ஆலோசகராக அவர் அமைவது நேர்மையினால் ஆகும். இவ்வாறாக அவர் உலகில் அமைதியின் குமாரனாக என்றென்றும் விளங்குவார்.*

**நீயோ, எப்ராத்தா எனப்படும்**
**பெத்லகேமே! யூதாவின் குடும்பங்களுள்**
**மிகச் சிறியதாய்**
**இருக்கின்றாய்! ஆயினும், இஸ்ரயேலை**
**என் சார்பாக ஆளப்போகின்றவர்**
**உன்னிடமிருந்தே தோன்றுவார், அவர்**
**தோன்றும் வழி மரபோ ஊழிக்காலமாய்**
**உள்ளதாகும்.**
**மீக்கா** 5:2

**ஆக மொத்தம் ஆபிரகாம் முதல்**
**தாவீதுவரை தலைமுறைகள்**
**பதினான்கு. தாவீது முதல்**
**பாபிலோனுக்குச் சிறைப்பிடித்துச்**
**செல்லப்பட்டவர்கள் வரை**
**தலைமுறைகள் பதினான்கு.**
**பாபிலோனுக்குச் சிறைப்பிடித்துச்**
**செல்லப்பட்டவர்கள் முதல்**
**கிறிஸ்துவரை தலைமுறைகள்**
**பதினான்கு.**
**மத்தேயு** 1:17

மீக்கா இறைவாக்கினரின் இந்த இறைவாக்கு இஸ்ரயேலரை ஆட்சி செய்ய வருபவரின் பிறப்பைக் குறித்தும் அவருடைய சந்ததியைக் குறித்ததுமாகும். அதற்கமைய இஸ்ரயேல் என்று அழைக்கப்பட்ட யாக்கோபின் சந்ததியைச் சேர்ந்த, இறைவனால் தெரிவு செய்யப்பட்ட மக்களில் இருந்து ஆளுகை செய்ய ஒருவர் தோன்றுவார் என்று எதிர்பார்த்தனர். இந்த எதிர்பார்ப்பை நிறைவேற்றும் விதத்தில் இயேசுவின் பிறப்பு நடைபெற்றது. இவ்வாறாக இறை திட்டத்தை நிறைவேற்றிய இயேசுவின் பிறப்பின் மூலம் இஸ்ரயேல் மாத்திரமல்ல முழு மனுக்குலமும் விடுதலையைப் பெறவும் அதன் மூலம் புதிய உலகை அமைக்கவும் வாய்ப்பு ஏற்பட்டது.

### செயற்பாடு

1. இறைவாக்கினர்களின் பணிகளைக் குறிப்பிடுக.
2. இறைவாக்கினர்கள் முன்னுரைத்த
   - i) இயேசுவின் பிறப்பு, வழிமரபு
   - ii) இயேசுவின் பணி என்பவற்றை விளக்குக.

# 2 சிறப்புப் பணி

**இறை திட்டத்திற்கு அமைய முழு மனுக்குலத்தினதும் விடுதலைக்காக இயேசு இவ்வுலகம் வந்தார். இயேசு கருவில் உருவானது முதல் அவர் ஆற்றிய பணிகள், அவருடைய சிலுவை மரணம், உயிர்ப்பு இவ்வனைத்தும் இறைவாக்கினர்கள் முன்னுரைத்தப்படி நடந்தன. மனிதரை பாவத்தில் இருந்து மீட்டு எடுப்பதற்காக இயேசு ஆற்றிய சிறப்புப் பணிகளைக் குறித்த இறை வாக்கு முன்னுரைப்புகள் சிலவற்றை இப்பாடத்தில் நாம் கற்போம்.**

**எசாயா** 40:3-4, 42:4, 53:4-5, **மலாக்கி** 3:1

பலஸ்தீனா தேசம் உரோம ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தில், உரோமையர்களின் கொடிய ஆட்சிக்கு எதிராக செயல்பட்ட வெவ்வேறு சமூக குழுக்களை அடக்குவதற்காக உரோம ஆட்சியாளர்கள் மிகவும் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டனர். இப்போராட்டத்தில் சிக்குண்ட குற்றமற்ற மக்கள் பெரும் சிக்கல்களை சந்தித்தனர். தமது தேசத்தில் அமைதியும் விடுதலையும் உருவாகும் நாளை எதிர்பார்த்து மிகவும் பொறுமையுடன் காத்திருந்தனர். இவ்விடுதலையைப் பெற்றுத்தரும் ''மெசியா''வின் வருகையை இறைவாக்கினர்கள் முன்னுரைத்ததை அறிந்து அதற்காக அவர்கள் எதிர்பார்ப்புடன் காத்திருந்தார்கள். அவர்கள் எதிர்பார்த்தபடி அருட்பொழிவு பெற்றவர் எனப் பொருள்படும் மெசியாவின் வருகை. இயேசுவின் பிறப்பின் மூலம் நிறைவேறியது. இவ்வாறாக இறைவாக்கினர்களின் முன்னுரைப்பு நிறைவேறியது.

இயேசுவின் பணிக்கு வழியை ஆயத்தம் செய்ய இயேசுவுக்கு முன்னோடியாய் வந்த திருமுழுக்கு யோவான் பற்றியும்; திருமுழுக்கு யோவான், இயேசுவைப் பற்றி கூறிய முன்னுரைப்பு பற்றியும் நாம் இங்கு பார்ப்போம்.

**திருமுழுக்கு யோவான் பற்றிய இறைவாக்கினர் மலாக்கியின் முன்னுரைப்பு**

**''இதோ நான் என் தூதனை அனுப்புகிறேன்.**
**அவர் எனக்கு முன் வழியை ஆயத்தம் செய்வார்,**
**அப்பொழுது, நீங்கள் தேடுகின்ற தலைவர் திடீரெனத்**
**தம் கோவிலுக்கு வருவார். நீங்கள் ஆவலுடன்**
**எதிர்பார்க்கும் உடன்படிக்கையின் தூதர்**
**இதோ வருகிறார்''.**
**மலாக்கி 3:1**

மலாக்கி இறைவாக்கினாரின் இந்த முன்னுரைப்பு இயேசுவின் வருகைக்கு முன்னோடியாக வந்து, மக்கள் இறை அரசை ஏற்றுக்கொள்வதற்கான ஆயத்தத்தை செய்த திருமுழுக்கு யோவானைப் பற்றியது.

**இறைவாக்கினர் எசாயா திருமுழுக்கு யோவானைக் குறித்து கூறிய முன்னுரைப்பு**

**குரலொன்று முழங்குகின்றது:**
**பாலை நிலத்தில் ஆண்டவருக்காக**
**வழியை ஆயத்தமாக்குங்கள்,**
**பாழ்நிலத்தில் நம் கடவுளுக்காக**
**நெடுஞ்சாலை ஒன்றைச் சீராக்குங்கள்.**
**பள்ளத்தாக்கு எல்லாம் நிரப்பப்படும்**
**மலை,குன்று யாவும் தாழ்த்தப்படும்**
**கோணலானது நேராக்கப்படும்**
**கரடுமுரடானவை சமதளமாக்கப்படும்.**
**எசாயா 40:3-4**

திருமுழுக்கு யோவானின் காலத்தில் யூத சமூகத்தில் அநீதிகளும் ஊழல்களும் நிறைந்திருந்தது. ஏழைகளையும் பாவிகள் என்று கருதப்பட்டு ஒதுக்கப்பட்டவர்களையும் அன்றைய சமூகத்தின் செல்வந்தர்கள் ஒடுக்கி துன்பப்படுத்தினார்கள். இவ்வாறான அநீதியை எடுத்துரைத்து, அனைவரையும் சமமானவர்களாக ஏற்றுக்கொள்ளச் செய்யும் வழிகாட்டலைக் கொடுக்கும் பணி யோவானுக்கு உரித்தானது என்பதையும் இயேசுவுக்கு முன்னோடியாக யோவான் செயற்படுவார் என்பதையும் இவ்விறை வாக்கு எடுத்துரைக்கின்றது.

திருமுழுக்கு யோவானின் சிறப்பான பணி மூலம் மேலே கூறப்பட்ட இறைவாக்கு நிறைவேறியதை நாம் காணலாம். அவர் அன்றைய சமூகத்தில் இருந்த எல்லா மக்கள் கூட்டத்தாரையும் அவதானித்து அவர்களிடம் காணப்பட்ட தீயபழக்கங்களைச் சுட்டிக்காட்டினார். அவருடைய சவால் மிகுந்த உரையின் மூலம் இதை நாம் அறிந்துகொள்ளலாம்.

இயேசுவின் பணி குறித்த இறைவாக்கு

**உலகில் நீதியை நிலை நாட்டும்வரை**
**அவர் சோர்வடையார்**
**மனம் தளரமாட்டார்**
**அவரது நீதிநெறிக்காகத்**
**தீவு நாட்டினர் காத்திருப்பர்.**
**எசாயா 42:4**

மேற்படி இறைவாக்கின் மூலம் இறைமகன் இயேசு எதிர்நோக்கும் சவால்களும், அவற்றை அவர் எவ்வாறு எதிர்நோக்குவார் என்பதும் தெளிவாகின்றது. இயேசு எப்போதும் நீதியை நிலைநாட்டினார். நீதியை நிலைநாட்டத் தவறிய உரோமப் பேரரசையும், அவர்களுக்கு சார்பாக கடமை ஆற்றிய வரிதண்டுவோர், பரிசேயர், மறைநூல் அறிஞர்கள் போன்ற யூதமதக் குழுக்களை நீதி தவறாமல் நடப்பதற்கு வழி காட்டிய அவர் எப்போதும் அன்புடனும் பொறுமையுடனும் நீதியாகவும் செயல்பட்டார். இயேசுவில் காணப்பட்ட குணவியல்புகள் எமக்கு சிறந்த முன் மாதிரியாகும். பல்வேறு சவால்களை சந்திக்கும்போது மனம் தளராது, இயேசுவின் அர்ப்பணிப்பையும் தியாகத்தையும் தியானித்து தைரியத்தோடு கொடுக்கப்பட்ட பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கு நமக்கு கொடுக்கப்படும் வழிகாட்டலுமாகும்.

**துன்புறும் ஊழியர் எமக்காக துன்புற்றார்.**

**மெய்யாகவே அவர் நம் பிணிகளைத்**
**தாங்கிக்கொண்டார், நம் துன்பங்களைச் சுமந்து**
**கொண்டார், நாமோ அவர் கடவுளால்**
**வதைக்கப்பட்டு நொறுக்கப்பட்டவர்**
**என்றும் சிறுமைப்படுத்தப்பட்டவர்**
**என்றும் எண்ணினோம்.**
**அவரோ நம் குற்றங்களுக்காகக்**
**காயமடைந்தார்,**
**நம் தீச் செயல்களுக்காக நொறுக்கப்பட்டர்,**
**நமக்கு நிறைவாழ்வை அளிக்க**
**அவர் தண்டிக்கப்பட்டார்**
**அவர்தம் காயங்களால் நாம்**
**குணமடைகின்றோம்.**
**எசாயா** 53:4-5

இறைவாக்கினர் எசாயாவின் இந்த இறைவாக்கின் மூலம், மனிதர்களின் பாவத்திற்காக இயேசு நிறைவேற்றப் போகும் மகா தியாகப் பலியை முன்னறி வித்துள்ளார். தமக்காகவன்றி பிறருக்காக துன்புற்ற இயேசு, பாவத்தின் கிரயத்தை செலுத்திய ஆட்டுக்குட்டியானார். அதன் மூலம் அனைவரதும் பாவங்களைத் தம்மீது ஏற்றுக்கொண்டார். திருமுழுக்கு யோவான் ''உலகின் பாவத்தைப் போக்கும் ஆட்டுக்குட்டி'' என்று இயேசுவை தமது சீடர்களுக்கு அறிமுகப்படுத்தினார். (யோவான் 1:29) நமது பாவங்களுக்காக இயேசு மரித்து நம்மை பாவத்தில் இருந்து விடுவிப்பதனாலேயே இவ்வாறு அறிமுகப்படுத்தினார். அநீதிக்கு முகம் கொடுத்து, நிராகரிக்கப் பட்டு ''பாவிகள்'' என்று அழைக்கப்பட்டவர்கள் சார்பாக இயேசு நின்றார். அதனால் அன்றைய யூத சமூகத்தின் அதிகாரத்தில் இருந்து பல சலுகைகளை அனுபவித்தவர்கள் இயேசுவை தங்களுக்கு அச்சுறுத்தலாகக் கருதினர். அதன் விளைவாக அவர்கள் இயேசுவைக் குற்றஞ்சாட்டி, வழக்கு மன்றத்தின் முன் நிறுத்தினர்.

இயேசு குற்றமற்றவராக இருந்த போதிலும், யூத வழக்கு மன்றத்தினால் அவர் குற்றம் சாட்டப்பட்டு, வேதனைக்குட்படுத்தப்பட்டு சிலுவையில் கொடூரமாக கொலை செய்யப்பட்டார். இவை அனைத்தையும் இயேசு தாங்கியது மாத்திரமல்ல அவர்களுக்கு மன்னிப்பும் ஈந்தார்.

மேலும் இயேசுவின் சேவகத்தன்மையைக் குறித்து எத்தியோப்பிய நிதி அமைச்சருக்கு பிலிப்பு விளக்கியதைக் குறிக்கும் திருவிவிலியப் பகுதி இயேசுவின் தியாகத்தை எடுத்துக் காண்பிக்கின்றது.

**''அடிப்பதற்கு இழுத்துச் செல்லப்பட்ட ஆட்டுக்குட்டி போலும்,**
**உரோமம் கத்தரிப்போர் முன்னிலையில் கத்தாத செம்மறிபோலும்**
**அவர்தம் வாயைத் திறவாதிருந்தார்.**
**தாழ்வுற்ற நிலையில் அவருக்கு நீதிவழங்கப்படவில்லை''.**
**தி.ப.** 8:32-33

இந்த தியாகப் பலி மூலம் இயேசு இறைவனுக்கும் மனிதருக்கும் இடையில் முறிந்த உறவைப் புதுப்பித்துள்ளார்.

இறை திட்டத்துக்கு அமைய இயேசு பல நோக்கங்களை நிறைவேற்ற மனுவுரு ஏற்றார்.

**ஆண்டவராகிய என் தலைவரின் ஆவி என் மேல் உள்ளது;**
**ஏனெனில், அவர் எனக்கு அருள் பொழிவு செய்துள்ளார்;**
**ஒடுக்கப்பட்டோருக்கு நற்செய்தியை அறிவிக்கவும்,**
**உள்ளம் உடைந்தோரைக் குணப்படுத்தவும்,**
**சிறைப்பட்டோருக்கு விடுதலையைப் பறை சாற்றவும்,**
**கட்டுண்டோருக்கு விடிவைத் தெரிவிக்கவும்**
**என்னை அனுப்பியுள்ளார்.''**
**எசாயா** 61:1

இயேசுவின் பிறப்பிற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் இயேசுவின் பணி குறித்து எசாயா இறைவாக்கினர் முன்னறிவித்துள்ளார். நாசரேத்து தொழுகைக் கூடத்தில் இம் முன்னறிவிப்பை இயேசு பகிரங்கமாக வாசித்து தமது பணிக்கான ஆரம்பப் படியை எடுத்துவைத்தார். ஏழைகளுக்கு நற்செய்தியை அறிவிப்பதற்காக இயேசு அருள்பொழிவு செய்யப்பட்டதாக கூறியுள்ளார். இங்கு ஏழைகள் என்னும் போது அடிமைகள், துன்புறுத்தப்பட்டவர்கள் போன்றோரைக் குறிக்கும். அன்றைய மதத் தலைவர்கள், ஏழைகள் என்று கருதப்பட்டவர்களை மத அனுட்டானங்களில் ஈடுபடுவதை தடுத்தார்கள். ஆனாலும் இயேசு எல்லா சந்தர்ப்பங்களிலும் ஏழைகளுக்கு நற்செய்தியைக் கூறினார். தொழுநோயாளர் போன்றோர் சமூகத்தில் இருந்து ஒதுக்கப்பட்டு இருந்த நிலையில் இயேசு அவர்களுக்கு சுகமளித்தார். தனது தவறை உணர்ந்து பாவத்தில் இருந்து விடுதலை அடைவதற்காக இயேசுவின் உதவியைத்

தேடிய பெண்ணுக்கு விடுதலையைக் கொடுத்தார். பணத்துக்கு அடிமையாகி தவறான வழியில் பணம் சேகரித்த சகேயு என்ற வரிதண்டுபவருக்கும் விடுதலையைப் பெற்றுக்கொடுத்தார். இவ்வாறாக தனது வாழ்வின் முன்மாதிரிகள் மூலம் சேவை செய்த இயேசு நம்மையும் சேவையைப் பெற அல்ல சேவையை செய்ய அழைக்கின்றார்.

### செயற்பாடு

1. திருமுழுக்கு யோவானின் பணியைக் குறித்த இறைவாக்கு நிறைவேறிய 3 சந்தர்ப்பங்களைக் குறிப்பிடுக.

2. இயேசுவைக் குறித்து பழைய ஏற்பாட்டில் தரப்பட்டுள்ள இறைவாக்கு புதிய ஏற்பாட்டில் நிறைவேறிய சந்தர்ப்பங்ளை விளக்குக.

# 3 இறை திட்டத்திற்கு கீழ்ப்படிந்தோர்

**இறைமைந்தன் மனுவுரு ஏற்று பிறந்த சம்பவமும், அவருக்கு முன் சென்று அவர் வரும் வழியை ஆயத்தம் செய்த திருமுழுக்கு யோவான் பிறந்த சம்பவமும், இறை திட்டத்துக்கு அமையவே நடைபெற்றன. இந்த சிறப்பான பிறப்புச் சம்பவங்களைக் குறித்து நாம் சிந்திக்கும்போது இறைதிட்டத்துக்கு அமைய அனைத்தும் நடைபெறும் விதத்தை நன்கு அறிந்துகொள்ளலாம்.**

***லூக்கா*** 1:5-56

*இயேசுவின் பிறப்பையும், திருமுழுக்கு யோவானின் பிறப்பையும் அறிவித்தவர் காபிரியேல் வானதூதர் ஆவார்.*

**"நான் காபிரியேல், கடவுளின் திருமுன் நிற்பவன்:**
**உம்மோடு பேசவும் இந்த நற்செய்தியை உமக்கு**
**அறிவிக்கவும் அனுப்பப்பட்டேன்.''**
**லூக்கா** 1:19

*இந்தப் பிறப்பின் நற்செய்தியை அறிவித்தது கடவுளின் திட்டத்துக்கு அமைய என்பது இங்கு தெளிவாகின்றது.*

*இறையரசின் நிமித்தம் ஆண்டவராகிய இயேசுவின் பணிக்கு வழியை ஆயத்தம் செய்யுமுகமாக முன்னோடியாய் வந்த திருமுழுக்கு யோவானின் பிறப்பைக் குறித்து காபிரியேல் வானதூதர் செக்கரியாவுக்கு அறிவித்ததைக் குறித்து நாம் பார்ப்போம்.*

**''செக்கரியா, அஞ்சாதீர், உமது மன்றாட்டு கேட்கப்பட்டது.**
**உம் மனைவி எலிசபெத்து உமக்கு ஒரு மகனைப் பெற்றெடுப்பார்,**
**அவருக்கு யோவான் எனப் பெயரிடுவீர்.**
**நீர் மகிழ்ந்து பேருவகை கொள்வீர்.**
**அவரது பிறப்பால் பலர் மகிழ்ச்சியடைவர்.**
**அவர் ஆண்டவர் பார்வையில் பெரியவராய் இருப்பார்.**
**திராட்சை மதுவோ வேறு மதுவோ அருந்தமாட்டார்,**
**தாய் வயிற்றில் இருக்கும் போதே தூய ஆவியால் முற்றிலும்**
**ஆட்கொள்ளப்படுவார்.**
**அவர், இஸ்ரயேல் மக்களுள் பலரைத் தம்**
**கடவுளாகிய ஆண்டவரிடம் திரும்பிவரச் செய்வார்.**
**எலியாவின் உளப்பாங்கையும் வல்லமையையும் உடையவராய்**
**அவருக்குமுன் செல்வார்,**

**தந்தையரும் மக்களும் உளம் ஒத்துப்போகச் செய்வார்,**
**நேர்மையாளர்களின் மனநிலையைக் கீழ்ப்படியாதவர்கள் பெறச் செய்வார்,**
**இவ்வாறு ஆண்டவருக்கு ஏற்புடைய ஒரு மக்களினத்தை ஆயத்தம் செய்வார்.**
**லூக்கா** 1:13-17

திருமுழுக்கு யோவான் இறைசித்தத்தை தனது பணிக்கூடாக நிறைவேற்றினார் என்பதை மேற்குறிப்பிட்ட அறிக்கை மூலம் நாம் அறிந்து கொள்கின்றோம். அவர் தூய ஆவியாரினால் ஆட்கொள்ளப்பட்டு, மக்களுக்கு மனந்திரும்புதலின் திருமுழுக்கைக் கொடுத்து, அநேகரைக் கடவுளிடம் திருப்பினார்.

இயேசுவின் பிறப்பு பலநூற்றாண்டு காலமாக மக்களின் உள்ளத்தில் இருந்த எதிர்பார்ப்பின் நிறைவேற்றமாகும். இறைமைந்தன் மனுவுரு ஏற்றல் இந்த சம்பவத்தின் மூலம் முழுமை பெற்றது.

இயேசுவின் பிறப்பை முன்னறிவித்தல்

அவர் பெரியவராயிருப்பார்,
உன்னத கடவுளின் மகன் எனப்படுவார்.
அவருடைய தந்தை தாவீதின் அரியணையை
ஆண்டவராகிய கடவுள் அவருக்கு அளிப்பார்.
அவர் யாக்கோபின் குடும்பத்தின் மீது என்றென்றும்
ஆட்சி செலுத்துவார். அவருடைய
ஆட்சிக்கு முடிவே இராது."
**லூக்கா** 1:32-33

இவ்வாறு இறையரசு சார்பாக இயேசு செய்த அனைத்துப் பணிகளும் இறைதிட்டத்துக்கு அமையவே நடைபெற்றது. அவருடைய பிறப்பு, பணி, பாடுகள், மரணம், உயிர்ப்பு போன்ற அனைத்து சம்பவங்கள் மூலம் இது தெளிவாகின்றது. இயேசுவைக் குறித்த இறைவாக்கினர்களின் முன்னறிவிப்பு நிறைவேறியது என்பதையும் நாம் காணலாம்.

இயேசுவினதும், திருமுழுக்கு யோவானினதும் பிறப்புடன் தொடர்புற்ற மிகவும் முக்கியமானவர்கள் என செக்கரியா, யோசேப்பு, மரியா, மற்றும் எலிசபெத்து ஆகியோரை நாம் குறிப்பிடலாம். பிறப்பு பற்றிய செய்தியைக் கேள்வியுற்றதும், அவர்கள் இறை கட்டளைக்கு காண்பித்த மாறுத்தரத்தையும், கீழ்ப்படிவையும் பற்றி இங்கு ஆராய்வோம்.

செக்கரியா, தாழ்மை உள்ளம் கொண்டவரும் இறைகட்டளைகளின்படி நடந்தவொரு யூதமதகுரு ஆவார். அவரது தளராத இறை நம்பிக்கையினால் நீண்ட நாட்களாக இறைவேண்டலில் ஈடுபட்டவராவார். வயது முதிர்ந்தவர்களாக

இருந்தாலும் செக்கரியாவும் எலிசபெத்தும் தமக்கு குழந்தை பிறக்க வேண்டுமென மன்றாடினார்கள். அவர்களது வேண்டுதலுக்கு கடவுள் ஏற்ற பதிலளித்தார். ஆனாலும் எருசலேம் கோவிலில் காபிரியேல் வானதூதரின் செய்தியைக் கேள்வியுற்றதும் செக்கரியா சந்தேகத்துடனே பதிலுரை கொடுத்தார். அதனால் குழந்தை பிறக்கும் வரை செக்கரியா பேசமுடியாதவராக இருந்தார். ஆனாலும் வானதூதர் அறிவித்தபடி அனைத்தும் நடைபெற்றது.

யோசேப்பு இறை நம்பிக்கையும் இறை பற்றும் நிறைந்தவராக காணப்பட்டார். இறை திட்டத்தை விளங்கி, இறை கட்டளைக்கு கீழ்ப்படிந்து வானதூதர் அறிவித்ததை ஏற்றுக்கொண்டார். இறை மைந்தனின் தாயாவதற்கு நியமிக்கப்பட்டிருந்த மரியாவை தன் மனைவியாக ஏற்றுக்கொண்டு நன்கு பராமரித்தார்.

இவ்வாறாக செக்கரியாவும் யோசேப்பும் பெற்ற வானதூதரின் அறிவிப்பை ஒவ்வொருவரும் வெவ்வேறு விதத்தில் ஏற்றுக்கொண்டதை நாம் காணக்கூடியதாக இருந்தாலும் அவர்கள் இருவரும் எப்போதும் இறைகட்டளைக்கு ஏற்ப செயற்பட்டனர்.

மரியாவினதும் எலிசபெத்தினதும் வகிபங்கு, மீட்பரின் பிறப்பு தொடர்பில் மிகவும் முக்கியமானது. வயது முதிர்ந்தவராகவும் பிள்ளை இன்றியும் இருந்த எலிசபெத்தின் நிலைமாற்றப்படுவதற்கு கடவுள் இதன்மூலம் வழி அமைத்தார். நீண்ட காலமாக இறைவேண்டல் செய்த எலிசபெத்து இறை அருளால் பலன் பெற்றார். இறைதிட்டம் நிறைவேற காலம் வயது போன்றவை தடையாக அமைவதில்லை என்பதை இந்த சம்பவம் எடுத்துக் காண்பிக்கின்றது.

இறைதிட்டம் மிகவும் சிறப்பு வாய்ந்தது என்பதை எடுத்துக்காட்ட மரியா செயல்பட்டவிதம் மிகவும் சிறப்பானதாகும். இதன் மூலம் அன்றைய பெண்கள் மத்தியில் மதிப்பையும் கௌரவத்தையும் மரியா பெற்றுக்கொண்டார்.

இறைசெய்தியை எடுத்து வந்த காபிரியேல் வானதூதர்,
**''கடவுளால் இயலாதது ஒன்றுமில்லை''**
என்று அறிவித்ததும் மரியா தாழ்மையுடன்
**''நான் ஆண்டவரின் அடிமை, உம் சொற்படியே எனக்கு நிகழட்டும்''**
என்று கூறி அதற்கு கீழ்ப்படிந்தார்.

இறைவிருப்பை அறிந்து அதற்கு கீழ்ப்படிவுடன் செயல்படுவதற்கு மரியா உடன்பட்டார். இறைமைந்தனின் பிறப்புக்காக தான் தெரிவு செய்யப்பட்டதை மரியா தாழ்மையுடன் ஏற்று கடவுளைப் புகழ்ந்தார்.

சிலநாட்களுக்குப் பின் மரியா தனது உறவினரான எலிசபெத்தை சந்திக்க சென்றார். எலிசபெத்தை மரியா வாழ்த்தியதும் அவர் தூய ஆவியினால் ஆட்கொள்ளப்பட்டு மரியாவை வாழ்த்தினார்.

**"பெண்களுக்குள் நீர் ஆசிபெற்றவர்,**
**உம் வயிற்றில் வளரும் குழந்தையும் ஆசிபெற்றதே!"**

இதன் அடிப்படையில் பார்க்கும்போது இறை அழைப்பை ஏற்று செயல்படுவதற்கு எமக்கும் அழைப்பு கிடைக்கும் என்பது தெளிவாகின்றது. அதற்கு ஏற்ற பிரதி நடத்தையைக் காண்பிப்பதற்கு நாம் தயாராக இருக்கவேண்டும். சுயநலம் மறந்து இறை அழைப்பிற்கு மரியா கீழ்ப்படிந்தது போல நாமும் இறை அழைப்பை ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கவேண்டும்.

## செயற்பாடு

செக்கரியா, யோசேப்பு, எலிசபெத்து, மரியா ஆகிய இவ்வொவ்வருவரும்

1. இறைசித்தத்திற்கு காண்பித்த பிரதி நடத்தை
2. இறைஅழைப்பிற்கு கீழ்ப்படிந்த விதத்தில் காணப்படும் ஒற்றுமை, வேற்றுமைகள் என்பவற்றை விளக்குக.

# 4 சிறப்புப் பிறப்புகள்

மனுக்குலத்தின் உலகியல், மற்றும் ஆன்மீக விடுதலைக்காக மனுவுரு ஏற்று இவ்வுலகம் வந்தவர் இறை மைந்தனான இயேசு கிறிஸ்து. இயேசு பிறந்தகாலத்தில் யூதர்கள் பெரும் இன்னல்களை சந்தித்து தம்மை விடுவிக்க ஒருவர் வருவார் என்ற எதிர்பார்ப்புடன் இருந்தார்கள். அவர்களுடைய எதிர்பார்ப்பை நிறைவேற்றிய "மெசியா" இந்த இயேசு கிறிஸ்துவே. அவ்வாறே மனிதரின் பாவத்தினிமித்தம் முறிந்த இறைவனுடனான தொடர்பை மீண்டும் நிலை நாட்டுவதற்காகவே இயேசு இவ்வுலகம் வந்தார்.

இயேசுவின் பணிக்கு வழியை ஆயத்தம் செய்த "முன்னோடி தூதர்" திருமுழுக்கு யோவானின் பிறப்பு தொடர்பான முன்னறிவிப்பும், அதன் வழியாக வெளிப்படுத்தப்பட்ட அவரின் பணிபற்றியும் கடந்த பாடங்களில் நாம் கற்றோம்.

இயேசுவினதும் யோவானினதும் பிறப்பு, சிறப்புமிக்கதாக அமைந்த விதம் பற்றியும், அதன் மூலம், நமதுவாழ்வு பெற்றுக் கொள்ளும் ஒளியின் செய்தி என்ன என்றும் இப்பாடத்தில் நாம் ஆராய்வோம்.

***லூக்கா*** 1:5-25, 1:57- 2:20

*இவ்விரு பிறப்புகள் பற்றி காபிரியேல் வானதூதர் முன்னறிவிப்பு கொடுத்தது இப்பிறப்புகள் சிறப்புமிக்கவை ஆவதற்கு காரணமாகின. யூதர்களின் கருத்துப்படி காபிரியேல் வானதூதர் எப்போதும் நற்செய்தியையே அறிவிப்பார். அவ்வாறான தூதரினால் இயேசுவின் பிறப்புப்பற்றி மரியாவுக்கும் யோவானின் பிறப்புப்பற்றி அவரின் தந்தை சக்கரியாவுக்கும் கொடுக்கப்பட்ட அறிவித்தலானது நிச்சயமாக நற்செய்தியாக அமைந்தது.*

*மத்தேயு நற்செய்தியில் இயேசுவின் பிறப்பு தொடர்பாக குறிப்பிடப்படும் வழிகாட்டியான ஒளிரும் விண்மீன், கிழக்கில் இருந்து வந்து பொன், சாம்பிராணி, வெள்ளைப்போளம் ஆகிய பரிசில்களைக் கொடுத்த ஞானிகளிக்கு வழிகாட்டிய சம்பவமும் இயேசுவின் பிறப்பின் சிறப்புத் தன்மையை எடுத்துக்காண்பிக்கின்றது.*

## திருமுழுக்கு யோவானின் பிறப்பு சிறப்பானது என்பதை அப்பிறப்பு அறிக்கை வாயிலாக நாம் அறிந்துகொள்ளலாம்.

### லூக்கா 1:5-25
### திருமுழுக்கு யோவானின் பிறப்பு

எலிசபெத்து வயது முதிர்ந்த பருவத்திலும் குழந்தையைப் பெற்றெடுத்தார். எலிசபெத்து, செக்கரியா ஆகிய இருவரது தாழ்மையும் இறை நம்பிக்கையின் வேண் டலும் அதற்கு ஒரு முக்கியமான காரணமாகும். அதுதொடர்பாக எலிசபெத்து மிகவும் மகிழ்ச்சியோடு கடவுளைப் புகழ்ந்தார். ஆனாலும் செக்கரியா ஆரம்பத்தில் கடவுள் செய்யப்போவதைக் குறித்து முழு நம்பிக்கை அற்றவராக காணப்பட்டதால் பிள்ளை பிறக்கும் வரை ஊமையாக இருந்தார்.

முழு நம்பிக்கையோடும் விசுவாசத்தோடும் இறைவேண்டல் செய்யவேண்டும் என்பதையும், நமது இறைவேண்டலுக்கு இறைவன் பதில் தரும்வரை பொறுமை யோடும் நம்பிக்கையோடும் காத்திருக்கவேண்டும் என்பதையும் இச்சம்பவம் நமக்கு வலியுறுத்துகின்றது. பிள்ளை பிறந்ததும் செக்கரியா மீண்டும் பேசும் ஆற்றலைப் பெற்று, தூய ஆவியால் ஆட்கொள்ளப்பட்டு பாடிய புகழ் பாடலானது, இயேசு மற்றும் யோவானின் பிறப்பால் நமது வாழ்வு பெறும் ஒளியைக் குறித்து நன்கு வெளிப்படுத்துகிறது.

### லூக்கா 1:67-80
### செக்கரியாவின் புகழ்ப்பா

செக்கரியா தனது பாடலில் குறிப்பிடும் விடயங்களை பின்வருமாறு நாம் சுருக்கமாகப் பார்க்கலாம்.

- ★ இந்த பிறப்பின் மூலம் கடவுள் மனுக்குலத்தின் விடுதலைக்கான வழியை ஏற்படுத்தியுள்ளார்
- ★ இயேசுவின் பிறப்பின் மூலம் யூதர்களின் எதிர்பார்ப்பு நிறைவேறும் அதாவது இறைவாக்கினர்கள் முன்னுரைத்தபடி தாவீதின் வழிமரபில் இந்தபிறப்பு நடைபெறும்
- ★ இயேசுவின் பணிக்கு முன் அதற்கான வழியை தனது குமாரனாகிய யோவான் ஆயத்தம் செய்வார்
- ★ மக்களை மனம் திரும்பச் செய்யும் பணியில் தனது குமாரன் ஈடுபடுவார்
- ★ இயேசுவில் நம்பிக்கை வைப்பவர்கள் பாவமன்னிப்பின் மூலம் இரட்சிப்பைப் பெறுவார்கள்
- ★ இருளிலும் மரணத்திலும் இருப்பவர்கள் ஒளியைக் காண்பார்கள்

## இயேசுவினதும் யோவானினதும் பிறப்பின் பின்னணி நமக்கு சிறப்பான செய்தியைத் தருகின்றது.

**லூக்கா 2:1-7**
**இயேசுவின் பிறப்பு**

அன்று உரோமைப் பேரரசினால் நடத்தப்பட்ட குடிசனமதிப்பிற்காக அனேகர் பெத்லகேம் நகருக்கு வந்தனர். அதனால் தங்குமிடங்களில் இடமில்லாத நிலையும் ஏற்பட்டிருந்தது. யோசேப்புக்கும் மரியாவுக்கும் சத்திரத்தில் தங்குவதற்கு இடம் இருக்கவில்லை. இறுதியில் சத்திரத்துக்கு வருவோரின் மந்தைகள் தங்கும் தொழுவத்தில் அவர்களுக்கு இடம் கிடைத்தது. அங்கு பிறந்த இயேசு பாலகனை மந்தையின் உணவுவைக்கும் தீவனத் தொட்டியில் கிடத்திவைத்தார்கள். தாவீதின் நகரில் பிறந்த உலக மீட்பரான இயேசு பிறந்துள்ளதற்கான அடையாளமாக குழந்தையைத் தீவனத் தொட்டியில் கிடத்தி வைத்திருக்கக் காண்பார்கள் என்று வானதூதர்கள் இடையர்களுக்கு அறிவித்தார்கள். இவ்வாறாக துன்பப்படுவோரின் விடுதலைக்காக செயற்பட்ட இயேசு ஏழையாகப் பிறந்து தன்னை அடையாளப்படுத்தினார்.

### யூதர்களின் அரசனாகவும் மக்களின் மீட்பராக ஏழ்மையாகப் இயேசுவின் பிறப்பு நிகழ்ந்த விதத்தையும் யோவானின் பிறப்பு நிகழ்ந்த விதத்தையும் நாம் இங்கு பார்ப்போம்.

- ★ ''இந்த யோவான் ஒட்டக முடியாலான ஆடையை அணிந்திருந்தார், தோல் கச்சையை இடையில் கட்டி இருந்தார், வெட்டுக்கிளியும் காட்டுத் தேனும் உண்டு வாழ்ந்தார்''. மத்தேயு 3:4
- ★ ''குழந்தையாய் இருந்தயோவான் வளர்ந்து மனவலிமை பெற்றார். இஸ்ரயேல் மக்களுக்குத் தம்மை வெளிப்படுத்தும் காலம்வரை அவர் பாலை நிலத்தில் வாழ்ந்துவந்தார்''. லூக்கா 1:80

இயேசுவைப் போலவே திருமுழுக்கு யோவானும் கடினமான வாழ்வை வாழ்வதற்கே அழைக்கப்பட்டார் என்பது இங்கு நமக்குத் தெளிவாகின்றது. திருமுழுக்கு யோவான் தனது பணியை ஆரம்பிக்கும் முன் பாலைநிலத்தில் எளிமையான வாழ்வை வாழ்ந்து, தியானத்தோடு பணிக்கு தன்னை ஆயத்தப்படுத்தினார் என்று நாம் கருதலாம். இயேசுவும் தனது பணியை ஆரம்பிக்கும் முன் தியானத்திலும் இறைவேண்டலிலும் ஈடுபட்டார் என்பதை நாம் அறிவோம்.

அக்கால யூதர்கள் தமக்கு விடுதலையைப் பெற்றுத்தரும் மெசியாவின் வருகையை எதிர்பார்த்திருந்தனர் என்பதையும், அந்த மெசியா தாவீதின் சந்ததியிலும்,

தாவீதின் ஊரிலும் தோன்றுவார் என்றும் எதிர்பார்த்திருந்தனர் என்பதையும் நாம் ஏற்கனவே அறிந்துள்ளோம். இது தொடர்பான இறைவாக்கின் முன்னறிவிப்பையும் நாம் கடந்த பாடத்தில் பார்த்துள்ளோம். அவ்வெதிர்பார்ப்பு பின்வருமாறு நிறைவே றியது: கலிலேயாவில் நாசரேத்து என்னும் ஊரில் வசித்த தாவீதின் வழிமரபினரான யோசேப்பும் அவருக்கு மண ஒப்பந்தமான மரியாவும் மக்கள் தொகை கணக்கெ டுப்புக்காக 85 மைல்கள் கடந்து, யோசேப்பின் ஊராகிய பெத்லகேம் என்னும் தாவீதின் ஊருக்கு சென்றார்கள். தாவீதின் வழித்தோன்றல், தாவீதின் அரியணை, தாவீதின் நகரம் போன்ற இயேசுவின் பிறப்புடன் தொடர்புடைய இவை அனைத்தும் கடவுளால் முன் னறிவிக்கப்பட்டவையே. இதன் மூலம் கடவுளின் திட்டமும் யூதர்களின் எதிர்பார்ப்பும் நிறைவேறியது.

துன்பப்படுகின்றவர்களின் விடுதலைக்காக இவ்வுலகம் வந்த இயேசுவின் பிறப்பின் நற்செய்தியானது வான தூதர்களினால் முதன் முதலில் மிகவும் ஏழைகளாக காணப்பட்ட இடையர்களுக்கே அறிவிக்கப்பட்டது.

## லூக்கா 2:8-20
## இடையர்களும் வானதூதர்களும்

யூத மத வழிபாடுகளில் தொழுகைக் கூடங்களில் பங்குபெறுவதற்கு, இடை யர்களின் தொழில் நிமித்தம் வாய்ப்பு இல்லாதிருந்ததினால் அவர்கள் யூத சமூகத்தில் தாழ்ந்தவர்களாகக் கருதப்பட்டனர். இவ்வாறு சமூகத்தில் ஒதுக்கப்பட்டிருந்தவர்க ளுக்கு முதன் முதலாக இயேசுவின் பிறப்பு பற்றிய செய்தி வானதூதரினால் அறிவிக் கப்பட்ட சம்பவம் இயேசுவின் பணி எவர்களைச் சார்ந்து இருக்கும் என்பதை அடை யாளப்படுத்துகின்றது.

இயேசு பிறந்த காலத்தில் பலஸ்தீனாவில் வசித்த யூதர்கள் உரோம பேரரசின் ஆட்சியில் அரசியல் கைதியாக பெரும் இன்னல்களை அனுபவித்தனர். உரோம அரசினால் விதிக்கப்பட்டிருந்த பெரும் வரிச்சுமையாலும், பலஸ்தீனாவில் அரசியல் சலுகைகளைப் பெற்றுக் கொள்வதற்காக முயற்சிக்கும் யூதசமயத் தலை வர்களாலும், வரி தண்டுபவர்களாலும் இந்த யூதர்கள் பெரும் இன்னல்களுக்கு தள்ளப்பட்டிருந்தனர்.

அத்தோடு யூதமத நீதிசட்டங்களை தமது சுயலாபத்தின் பொருட்டு விளக்கம் கொடுத்த பரிசேயர், சதுசேயர் ஆகியோராலும் சமய ரீதியிலும் அம்மக்கள் பெரும் துன்பத்தை அனுபவித்தனர். அன்று நிலவிய சமூக ஏற்றத்தாழ்வு நிமித்தமாகவும் சாதாரணமக்கள் பயத்தோடும் பீதியோடும் வாழ்ந்தனர். சிறப்பாக ''பாவிகள்'' என்று கருதப்பட்டு சமூகத்தினால் நிராகரிக்கப்பட்டவர்களும் இருந்தார்கள். இவ்வாறு ஒதுக்கப்பட்டவர்களுள் சிலநோயுற்றோர், விதவைகள், பிறஇனத்தவர் போன்றோர் அடங்குவார்கள். இவ்வாறாக நிராகரிக்கப்பட்டவர்களின் உள்ளத்தில் அமைதி

காணப்பட்டிருக்காது. இயேசுவின் சீடர்களுமே ஒரு சந்தர்ப்பத்தில் சிறுவர்களையும் இயேசுவிடம் கொண்டுவரப்படுவதைத் தடுத்தார்கள்.

இவ்வாறான நிலையில் இயேசு அவர்களின் விடுதலையை உறுதிப்படுத்தும் விதத்தில் பணியாற்றினார். பாவிகள் என்று கருதப்பட்டவர்களுக்கு மன்னிப்பை வழங்கி அவர்களுக்கு புது வாழ்விற்கான வழியை அமைத்தார். சிறுவர்களை தன்னிடம் வரவிடும்படி கட்டளையிட்டதுடன் இறையரசு சிறுவர்களுக்கு எனக் கூறினார். ஓரங்கட்டப்பட்டிருந்த நோயாளரைத் தொட்டு குணப்படுத்தினார். பிற இனத்தவர், பெண்களுக்கு இறைவார்த்தையைக் கேட்பதற்கு விதிக்கப்பட்டிருந்த தடையை நீக்கி அவர்களை ஏற்றுக் கொண்டார். அவர்களின் முக்கியத்துவத்தையும் எடுத்துக் காண்பித்தார்.

இதன் மூலம் ஒதுக்கப்பட்டு ஓரங்கட்டப்படிருந்தவர்களின் உள்ளத்தில் பெரும் அமைதி தோன்றியிருக்க வேண்டும். இயேசு பாவியை அல்ல, மாறாக பாவச் செயலையே வெறுத்தார். எனவே இயேசுவின் பிறப்பு சமாதானத்தை உறுதிப்படுத்தும் ''சமாதானப் பிரபுவின்'' பிறப்பு எனப்படுகின்றது.

இவ்வாறாக இயேசு தனது வாழ்வின் முன்மாதிரியாலும் போதனையாலும் விடுதலையை எதிர்பார்த்து வாழ்ந்தவர்களுக்கு ஒரு நற்செய்தியாக அமைந்த இயேசுவின் பிறப்பு, அம்மக்களுக்கு ஒரு புதிய ஒளியைக் கொடுக்கும் ஒன்றாகவும் அமைந்தது.

நாம் உலகில் சிறப்பான வாழ்வு வாழ்ந்து நிலையான வாழ்வை உரிதாக்க, இயேசுவைப் பின்பற்றி வாழ வேண்டும். இயேசுவின் நற்செய்தியை ஏற்று, அதற்குப் பொருத்தமான மாறுத்தரம் காட்டி, பிறருக்கு நற்செய்தியை அறிவித்தல் நாம் செய்யவேண்டிய பணியாகும்.

**செயற்பாடு**

1. இயேசு தனது பணியை ஆரம்பித்த காலத்தில் நிலவிய சமூகப் பின்னணியை சுருக்கமாக விளக்குக.

2. இயேசு மக்களுக்கு எவ்வாறு ஒளியாய் விளங்கினார் என்பதை விளக்குக.

# 5 இயேசுவும் யூத சம்பிரதாயங்களும்

**இயேசுவின் பிள்ளைப்பராயம் குறித்து சமநோக்கு நற்செய்தி நூல்களில் கூறிய குறிப்புகளையே நாம் காணக்கூடியதாக உள்ளது. அவற்றுள் இயேசுவின் சார்பாக அவரின் பெற்றோர் நிறைவேற்றிய சில சம்பிரதாயங்களை லூக்கா நற்செய்தி நூல் குறிப்பிடுகின்றது. யூத சம்பிரதாயங்களை அவர்கள் கடைபிடித்ததுபோல நாமும் இலங்கையர் என்ற ரீதியில் நமது தேசத்திற்குப் பொதுவான சில சம்பிரதாயங்களைக் கடைபிடிக்க வேண்டும் என்ற சவால் கிறிஸ்தவர்களாகிய எமக்கு இப்பாடத்தின் மூலம் கிடைக்கும்**

**லூக்கா** 2:21-52

இயேசு வாழ்ந்த காலத்தில் யூத சமுதாயத்தில் பல சமய விழாக்கள் காணப்பட்டதுடன், அவ்விழாக்களின் போது கடைபிடிக்க வேண்டிய சட்ட திட்டங்கள் யாவும் சட்ட நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. அச்சட்டங்களை நிறைவேற்றும்போது கடைபிடிக்க வேண்டிய சம்பிரதாயங்களும் காணப்பட்டன. இந்தச் சம்பிரதாயங்கள் அனைத்தும் அவர்களின் வரலாற்றுடன் தொடர்புற்றவை.

யூதர்கள் இந்தச் சம்பிரதாயங்களை மிகவும் பக்தியோடும், அர்ப்பணிப் போடும் சிறப்போடும் நடைமுறைப்படுத்தினார்கள். இதன் மூலம் சமூகத்தில் யூதர்கள் ''யூத அடையாளத்தோடு'' வாழும் சந்தர்ப்பம் கிடைத்தது. அத்தோடு அவர்கள் ஒருமக்கள் கூட்டமாக இருக்கும் நிலையும் ஏற்பட்டது.

யூதர்கள் பின்பற்றும் சட்டதிட்டங்களை மரியாவும் யோசேப்பும் தமது குமாரன் சார்பாக பின்பற்றினார்கள் என்பதற்கு விருத்தசேதனம் ஒரு உதாரணமாகும்.

## விருத்தசேதனம்

விருத்தசேதனம் இஸ்ரயேல் மக்களின் வரலாற்றில் மிக ஆழமான தொடர்புடையது. கடவுள் ஆபிரகாமுடனும் அவரின் வழிமரபினருடனும் ஏற்ப டுத்திய உடன்படிக்கையின் அடையாளமாக ஒவ்வொரு யூத ஆணும் விருத்தசே தனம் செய்துகொள்ள வேண்டும் என்ற கடவுளின் கட்டளைக்கு இணங்க இந்த சம்பிரதாயம் கடைபிடிக்கப்பட்டது.

விருத்தசேதனம் என்னும் அடையாளத்தின் மூலம் யூதர்கள் கடவுளுடன் நித்தியமாக இணைக்கப்பட்டவர்கள் என்று அறிவிக்கப்படுகின்றது. வெளிப்படையான இவ்வடையாளத்தை உடலில் தாங்கிக்கொள்வதன் மூலம் யூதர்கள் தம் இனத்தின் அடையாளத்தைக் காத்துக் கொள்கின்றார்கள் என்றும் நம்பப்பட்டது. இதன் அடிப்படையில் இயேசுவின் பெற்றோரும் இயேசுவுக்கு விருத்த சேதனம் செய்தார்கள்.

## இயேசுவின் விருத்தசேதனமும் பெயரிடலும்

இயேசு பிறந்து எட்டாம் நாள் வந்ததும் இயேசுவுக்கு விருத்தசேதனம் செய்து அவரின் பிறப்பிற்கு முன்னர் காபிரியேல் வானதூதர் அறிவித்தபடி இயேசு என்று பெயரிட்டார்கள். எல்லா யூத பெயர்களும் பொருள் உள்ளவை. இயேசு என்னும் பெயரிற்கு 'கடவுள் விடுவிக்கிறார்' என்பது பொருளாகும். இந்த பெயர் அவருடைய 'மெசியா' என்னும் பெயருடனும் நன்கு பொருந்தும் ஒன்றாகும்.

## *தலைமகன் அர்ப்பணமும் மீட்பும்*

விருத்தசேதனம் செய்யும் முறை ஆபிரகாமின் காலத்திலும் நடைமுறையில் இருந்துள்ளது. இதை ஒரு கட்டளையாக மோசே அறிவித்துள்ளார். இது இஸ்ரயேலர் எகிப்திய அடிமைத்தனத்தில் இருந்து மோசேயின் தலைமைத்துவத்தில் விடுதலை பெற்று, கானான் தேசத்தை அடைந்ததை மையமாகக் கொண்டுள்ளது. எகிப்திலிருந்து விடுதலைபெற்று பயணிப்பதற்கு முதல் இரவில் எகிப்தியரினதும் அவர்களின் அடிமைகளினதும் முதல்பேறு அனைத்தும் விலங்குகளின் ஆண்பால் தலையீற்று அனைத்தும் மரித்தன. ஆனால் இஸ்ரயேலரின் முதற்பேறு பிள்ளைகளோ மிருகங் களோ மரிக்கவில்லை. எனவே இவ்வாறு பாதுகாக்கப்பட்டதை நினைவுகூருமுகமாக முதல் ஆண் பிள்ளை அல்லது முதல் ஆண் மிருகம் கடவுளுக்குரியவையாக கருதப்பட்டன. பிறந்து 40 நாட்களில் கடவுளுக்கு அர்ப்பணிக்கப்பட்ட ஆண் பிள்ளைகளை மாத்திரம் மீட்டு எடுக்கலாம். அதற்காக எருசலேம் கோவிலில் பயன்படுத்திய செக்கேல் நிறைப்படி ஐந்து வெள்ளிக் காசுகளை மீட்புத்தொகையாக செலுத்தவேண்டும். அத்தோடு ஒவ்வொரு யூதத் தாயும் தனக்கு பிள்ளை பிறந்த பின் காணிக்கை ஒன்றையும் செலுத்தவேண்டும். அதற்காக ஆட்டுக்குட்டியை பலியாக செலுத்துவதற்கு வசதி இல்லாதவர்கள் இரு மாடப்புறாக்கள் அல்லது இரு புறாக்குஞ்சு களைக் கொடுக்கவேண்டும். தலைப்பேற்றை அர்ப்பணித்தலும் மீட்டலும், மரியாவின் காணிக்கையும் எருசலேம் ஆலயத்தில் ஒரே தருணத்தில் மேற்கொள்ளப்பட்டன.

கிறிஸ்தவர்களின் சம்பிரதாயங்களிலும் முறைமைகளிலும் தனி ஆள் முக்கியத்துவமும் கூட்டுஆட்களின் முக்கியத்துவமும் சிறப்பிக்கப்படுவதை நாம் அவதானிக்கலாம். (உதாரணம் - திருமுழுக்கு, அர்ப்பணிப்பு, திருவிருந்து போன்றவை)

இவற்றைத் தவிர இலங்கையர் என்ற ரீதியில் எமக்குரிய கலாசார சம்பிரதாயங்களும் இருக்கின்றன. அவை கிறிஸ்தவர்களுக்கு என்று உரியவையாக இல்லாவிட்டாலும், சமூக உறவிற்கும் அடையாளத்திற்கும் தேவைப்படுபவையாகும். (உதாரணமாக தமிழ், சிங்கள புதுவருடத்துடன் தொடர்புடைய சில நடைமுறைகள், ஏடு தொடக்குதல், பெயர் சூட்டுதல், பொங்கல் கொண்டாடுதல், புதுமனை புகுதல், அத்திவாரம் இடல், தொற்றுநோய் ஏற்பட்டதும் இலைகளைத் தொங்கவிடுதல் போன்றவை)

இவ்வாறான சம்பிரதாயங்களைக் கிறிஸ்தவர்கள் கடைபிடிக்கும்போது திருமறைக்கும் கிறிஸ்தவ போதனைக்கும் நம்பிக்கைக்கும் எதிராக நாம் செயற்படுவதைத் தவிர்த்துக் கொள்ளவேண்டும். கடவுளுக்கு முதலிடம் கொடுப் பதற்கும் கடவுளின் இடத்தை வேறும் பொருட்களுக்கு கொடுக்காமலும் இருக்க வேண்டும். இலங்கையர் என்ற ரீதியில் எல்லோருடனும் சமாதானத்துடன் வாழ்வதற்கு உதவியாக இச்செயற்பாடுகள் அமைந்திடவேண்டும்.

## இயேசுவை அர்ப்பணித்தல்

ஆத்மீகத்தில் நிறைந்த சிமியோன், அன்னா என்னும் இறைவாக்கினர் எருசலேம் கோவிலில் இயேசுவைக் காண்பதற்காகக் காத்திருந்தனர். பாலன் இயேசுவை எருசலேம் கோவிலில் இவர்கள் இருவரும் மெசியாவாக இனம் கண்டு கொண்டார்கள்.

| ஆன்மீக போசனைபெற்ற ஆண் ஒருவரினதும், பெண் ஒருவரினதும் அனுபவங்கள் | |
|---|---|
| **சிமியோன்:** **(கடவுள் கேட்கின்றவர்)**<br>* தாழ்மையும் நம்பிக்கையும் நிறைந்தவர்<br>* தூய ஆவியால் நிறைந்தவர்<br>* மரிப்பதற்கு முன்னர் மெசியாவைக் காண்பார் என்று அறிவிக்கப்பட்டிருந்தவர். | **அன்னா:** **(இறைவாக்கினர்)**<br>* திருக்கோவிலில் எப்போதும் மன்றாடிக் கொண்டிருந்தவர்.<br>* நோன்பு நோற்றல், மன்றாடல் என்பவற்றின் மூலம் கடவுளுடன் தொடர்பு கொண்டிருந்தவர்<br>* திருக்கோவிலில் வழிபாட்டில் ஈடுபட்டவர். |
| சிமியோன் பாடலில் முக்கியத்துவம்-<br>* இயேசுவை மெசியாவாக இனம் காணல்<br>* மெசியாதரும் விடுதலை சகல இனத் தவருக்கும் கிடைக்கக்கூடியது<br>* மெசியா இஸ்ரயேல்; மக்களின் மகிமையாவார்.<br>* மெசியா தரும் விடுதலை அனைத்துப் பிற இனத்தாருக்கும் உரியது.<br>* மெசியாவை ஏற்றுக் கொள்ளாதவர்களின் வீழ்ச்சி.<br>* இயேசுவின் வாழ்வில் அவர் எதிர் நோக்கும் தியாகத்தை நினைத்து அவரின் தாயாகிய மரியாவின் வேதனை | அன்னா அறிவித்தவை-<br>* மெசியாவுக்காக கடவுளுக்கு நன்றி கூறுதல்<br>* எருசலேமின் விடுதலையை எதிர்பார்த்திருந்த யூதரல்லா தோருக்கும் விடுதலையாளரான இயேசுவை அறிமுகம்செய்தல்<br><br>மெசியா - எபிரேயச் சொல்<br>கிறிஸ்டொஸ் - கிரேக்கச் சொல்<br>பொருள் - மீட்பர்,<br>அருள் பொழிவு பெற்றவர். |

எருசலேம் தேவாலயத்துள் சிமியோனும் அன்னாள் தீர்க்கதரிசியும் குழந்தை இயேசுவை மெசியாவாக அறிமுகப்படுத்துவதை நினைப்போம்.

## பன்னிரண்டு வயதில் இயேசு எருசலேம் கோவிலில்

யூதர்கள் ஒவ்வொருவரும் பாஸ்கா விழாவை (புளிப்பற்ற அப்பப் பண்டிகை) கொண்டாடுவதற்கு ஆண்டுதோறும் எருசலேமுக்குப் போவார்கள். பாஸ்காவைத் தவிர அறுவடை விழாவுக்காகவும், சேகரிப்பு விழாவுக்காகவும் எருசலேம் கோவிலுக்குப் போவார்கள்.

யூதசமூகத்தில் பன்னிரண்டு வயதை அடைந்த ஆண்பிள்ளைகளை வளர்ந்தோராகக் ஏற்றுக்கொள்வார்கள். அச்சந்தர்ப்பத்தில் அவர்களை எருசலேம் கோவிலுக்கு அழைத்து வருவதுடன் தோரா எனப்படும். யூத மத சட்ட நூலையும் கற்பதற்கு இடம் கொடுப்பார்கள். கோவிலில் கடவுளின் திருமுன் நிற்பது கட்டாயமாகும். ஆண்மகன் என்ற ரீதியில் யூதமதச் சட்டதிட்டங்களை அறிந்து கடைபிடிப்பது முக்கியமாகும்.

இறைவன் இஸ்ரயேல் எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து மீட்டு மோசேயின் தலைமைத்துவத்தின் கீழ் கானான் நாட்டிற்கு அழைத்த நிகழ்வு

இந்த யூத மதக்கட்டளையை நிறைவேற்ற மரியா, யோசேப்பு ஆகியோர் இயேசுவை அழைத்துக் கொண்டு அவர்களின் உறவினர்களுடன் எருசலேமுக்குப் போனார்கள். விழாவுக்காக வந்தவர்கள் தத்தம் ஊருக்கு புறப்பட்டுவிட்டாலும் இயேசு எருசலேம் கோவிலில் தங்கிவிட்டார். மரியாவும் யோசேப்பும் இயேசுவை தேடிவந்த போது மூன்று நாட்களுக்குப் பின் அவர் போதகர் நடுவில் அமர்ந்திருந்து அவர்களுக்கு செவிசாய்த்தும் கேள்விகள் கேட்டுக்கொண்டும் இருப்பதைக் கண்டார்கள். தாய் மரியா தன்னைத் தேடியதை அறிந்த இயேசு ''நீங்கள் ஏன் என்னைத் தேடினீர்கள்? நான் என் தந்தையின் அலுவல்களின் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா?'' என்று வினவினார்.

**(லூக்கா 2:49 )**

இயேசுவின் இவ்வினாவில் இருந்து வெளிப்படும் கருத்துகள் சில

1. கடவுளை இயேசு தனது பிதாவாக ஏற்றுக்கொண்டிருந்தார் என்பது
2. இயேசு தன்னைப் பற்றியும் சரிவர அறிந்திருந்தார் என்பது
3. கோவிலில் கடவுளை வழிபடுவதற்கு கோவிலில் தரித்திருக்க வேண்டும் என்பது

இந்த சம்பவத்தின் பின் இயேசு தமது பெற்றாரோடு தனது ஊராகிய நாசரேத்துக்கு திரும்பிச் சென்று பெற்றோருக்கு கீழ்ப்படிந்து வாழ்ந்தார். இயேசு அறிவிலும் உடல் வளர்ச்சியிலும் மிகுந்து கடவுளுக்கும் மனிதருக்கும் உகந்தவராய் வாழ்ந்தார். (லூக்கா 2:52) **இயேசுவின் இளமைப் பருவ நிகழ்வுகள் அனைத்தும் கிறிஸ்தவபிள்ளைகளிற்கும் கிறிஸ்தவ சமூகத்திற்கும் சிறந்த முன்மாதிரியாகும்.**

### செயற்பாடு

1. யூதமத சம்பிரதாயங்களையும் அவற்றிற்கான கடவுளின் கட்டளையையும் பட்டியல்படுத்துக.

2. ''நான் என் தந்தையின் அலுவல்களில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா?'' இயேசுவின் இந்தகேள்வியின் பொருள் என்ன? அதிலிருந்து நீர் விளங்கிக் கொள்வது என்ன?

3. நமது நாட்டில் காணப்படும் சம்பிரதாயங்களுள் கிறிஸ்தவ போதனைக்கு ஏற்புடைய மற்றும் முரணான சம்பிரதாயங்கள் பற்றி கலந்துரையாடவும்.

# 6 முன்னோடிப் பணி

**மனிதரை பாவத்தில் இருந்து விடுவிக்க இயேசு இவ்வுலகிற்கு வந்தார். இது கடவுளின் திட்டத்திற்கு அமைய நிறைவேறியது. பாவச்செயல்களைஇனம்கண்டு அதிலிருந்து விடுதலை அடைவதற்கு வழிகாட்டுதலும், மனந்திரும்புவதற்கு ஊக்கப்படுத்துவதும் திருமுழுக்கு யோவானின் பிரதான பணியாக காணப்பட்டது. யோவானின் பிறப்பும் வாழ்வும் கடவுளின் திட்டத்திற்கு அமைய நடந்தது என்பதை முந்திய பாடங்களில் கற்றிருக்கின்றோம். திருமுழுக்கு யோவானின் பணி இயேசுவின் பணிக்கு முக்கிய பின்னணியாக அமைந்தது. திருமுழுக்கு யோவானின் இம் முன்னோடிப் பணியைப் பற்றி இப்பாடத்தில் விரிவாகக் கற்போம்.**

**லூக்கா** 3: 1-20

யூதர்கள் மெசியாவின் வருகைக்காக காத்திருந்த வேளையில், அவர்களுடைய எதிர்பார்ப்பு கைகூடுவதை அறிவித்தவர் திருமுழுக்கு யோவான். இயேசுவின் பணிக் கான முன்னோடிப் பணியை ஆற்றி ஆயத்தம் செய்தவரும் அவரே.

உரோமரின் ஆட்சிக்குட்பட்ட பலஸ்தீனாவின் யூதேயா கலிலேயா, இத்துரேயா, திரக்கோனித்து, அபிலேன் போன்ற பிரதேசங்களில் வாழ்ந்தவர்களுக்கு திருமுழுக்கு யோவான் தனது செய்தியை வழங்கினார்.

திருமுழுக்கு யோவானின் காலத்தில் யூதர்களின் தலைமைக் குருவாக அன்னாவும் கய்பாவும் கடமையாற்றினார்கள். மதத்தலைவர்களும் யூதமதத்தை வலுப் படுத்துவதைப் பார்க்கிலும், உரோம அரசின் நன்மதிப்பைப் பெற்ற தமது பதவியைக் காத்துக்கொள்வதையே நோக்காகக் கொண்டு செயல்பட்டனர். உரோம ஆட்சியைக் கொண்டு நடத்துவதற்குத் தேவையான பணம், வரிதண்டுதல் மூலம் பெறப்பட்டது. இந்த வரிச்சுமையாலும் மக்கள் வெகுவாகப் பாதிக்கப்பட்டு இருந்தார்கள். இவ்வாறான தலைமைத்துவத்தால் பல்வேறு இன்னல்களை சுமந்த மக்களின் வாழ்வில் மாற்றத்தை ஏற்படுத்தும் விதத்தில் திருமுழுக்கு யோவான் போதித்துப் பணியாற்றினார்.

திருமுழுக்குயோவானின் பிறப்பைப் போன்றே அவரது வாழ்வும் பணியும் இறைதிட்டத்திற்கு ஏற்பவே நடைபெற்றது.

கடவுளின் விருப்பிற்கு ஏற்ப வாழ்வதற்கு, மக்களின் வாழ்வில் மாற்றம் தேவை என்பதை அவர் வலியுறுத்தினார். அம்மாற்றத்தின் வெளியார்ந்த அடையாளமாக மக்களுக்கு திருமுழுக்கு வழங்கினார்.

மனந்திரும்புதலுக்கு அடையாளமாக இருந்த திருமுழுக்கை யூதர்களுக்கு மாத்திரம் கட்டுப்படுத்தாமல், யோர்தான் நதியில் எல்லோருக்கும் வழங்கினார்.

இயேசுவை மெசியாவாக ஏற்றுக் கொள்வதற்குத் தேவையான சூழலை உருவாக்குவதே திருமுழுக்கு யோவானின் பிரதான நோக்கமாக காணப்பட்டது. அதற்தகாக மக்களின் வாழ்வில் மாற்றத்தை ஏற்படுத்தலாயினார். அதற்காக மக்களுக்கு அவர் கொடுத்த சவால்களையும் அறிவுரைகளையும் இங்கு ஆராய்வோம்.

## 1. பொதுமக்களுக்கு

*மக்கள்* - ***''அப்பொழுது நாங்கள் என்ன செய்யவேண்டும்?''***

திருமுழுக்கு யோவான் - **''இரண்டு அங்கிகளை உடையவர் இல்லாதவரோடு பகிர்ந்து கொள்ளட்டும் உணவை உடையவரும் அவ்வாறே செய்யட்டும்.**
**லூக்கா** 3:10-11

எசாயா இறைவாக்கினர் கூறியுள்ளதின்படி எமது வாழ்வின் பள்ளங்களையும் மேடுகளையும் இனம் கண்டு அவற்றை சீர்செய்து கொள்ள வேண்டும். அவ்வாறானவை இயேசுவை ஏற்றுக்கொள்வதற்குத் தடையாக அமையும். எனவே இயேசுவின் பணிக்காக வழியை முன்ஆயத்தம் செய்ய வந்த திருமுழுக்கு யோவான் மக்களின் வாழ்வை சீர்செய்வதற்கான வழிகாட்டலை முன்வைத்தார். தம்மிடமுள்ளதைப் பகிர்த்தல் பாதுகாத்தல், பராமரித்தல் சிறப்பான பண்புகள் ஆகும்.

சுயநலம் மிகுந்தவர்களாக தம்மைப் பற்றி மாத்திரம் சிந்திக்காது. பிறரைக் குறித்த சிந்தனை உள்ள புதிய சமூகம் உருவாக வேண்டும்.

## 2. அரசபணியில் ஈடுபட்டிருந்தோருக்கு

*வரிதண்டுவோர்* - ''போதகரே நாங்கள் என்ன செய்ய வேண்டும்?''

திருமுழுக்குயோவான் - **''உங்களுக்கு குறிக்கப்பட்ட தொகைக்கு அதிகமாக எதையும் தண்டாதீர்கள்''**
**லுக்கா** 3:12-13

திருமுழுக்கு யோவானின் மனந்திரும்புதலுக்கான செய்தி சமூகத்தில் வெவ்வேறு தளங்களில் பணியாற்றியவர்களின் வாழ்வை மாற்றிக்கொள்ள நல்ல சவாலாக அமைந்தது. உரோம அதிகாரிகளின் சார்பில் வரி தண்டியவர்கள் மக்களின் நல்லெண்ணத்தைப் பெற்றிருக்கவில்லை. குறிக்கப்பட்ட தொகைக்கு அதிகமான தொகையை வரியாக பெற்றுக்கொண்டதை திருமுழுக்கு யோவான் அறிந்திருக்கலாம். எனவே, நீதியோடும் நியாயத்தோடும் பணியாற்ற மக்களை வழிநடத்தி மெசியாவாகிய

இயேசுவின் பணிக்கு வழியை ஆயத்தம் செய்தார். இவ்வாறு மனம் மாறியோருக்கு மனம் திரும்புதலுக்கான திருமுழுக்கைக் கொடுத்து நாட்டில் நல்ல மாற்றத்தை ஏற்படுத்தினார்.

## 3. உரோமப் படைவீரர்களுக்கு

படைவீரர் - **''நாங்கள் என்ன செய்யவேண்டும்?''**

திருமுழுக்கு யோவான் - **''நீங்கள் எவரையும் அச்சுறுத்திப் பணம் பறிக்கா தீர்கள், யார் மீதும் பொய்க் குற்றம் சுமத்தாதீர்கள், உங்கள் ஊதியமே போதும் என்றிருங்கள்'' லூக்கா 3: 13-14**

உரோம படைவீரர் உரோம பேரரசுக்காக பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டவர்களாவார். மேற்படி சவால் நிறைந்த அறிவுரையில் அன்றைய ரோமப்போர் வீரரின் பொருத்தமற்ற இரு செயற்பாடுகள் யோவானால் எடுத்துக் காட்டப்படுகிறது. தமது அதிகாரங்களைப் பாவித்து பலாத்காரத்தினாலும், பலத்தினாலும் மக்களின் உடைமைகளைப் பெற்றனர். தமது சம்பளத்தில் திருப்தி அடையாமல் தமது பதவிப்பலத்தை பாவித்து மக்களின் பிரதான அடிப்படை உரிமைகளைப் பெற்றனர். திருமுழுக்கு யோவான் இதனை எதிர்த்தார். உரோமப் படை வீரர் தமது தொழிலால் மக்களுக்கு மனம் நிறைந்த பணியாற்ற வேண்டும் என்பதை எடுத்துக் காட்டினார்.

அதிகாரம் இருக்கும்போது அதை சரியாகவும் நீதியோடும் பயன்படுத்த வேண்டும். அப்போது சமூகத்தில் எல்லோரும் பயமின்றி பாதுகாப்பாக வாழலாம். அவ்வாறான சமூகத்தைக் கட்டி எழுப்புவதற்கு, மனந்திரும்புதலுடன் புதிய சிந்தனையோடு தத்தம் தொழிலில் ஈடுபடுவோரைக் கொண்ட சமூகம் உருவாக வேண்டும் என்பது இங்கு முன்வைக்கப்படுகிறது.

## 4. யூதமதத்தவருக்கு

**“ஆபிரகாம் எங்களுக்குத் தந்தை என உள்ளத்தில் சொல்லத் தொடங்காதீர்கள். இக்கற்களில் இருந்தும் ஆபிரகாமுக்குப் பிள்ளைகளைத் தோன்றச் செய்யக் கடவுள் வல்லவர் என உங்களுக்குச் சொல்கிறேன்.” லூக்கா 3:8**

யூதர்கள் ஆபிரகாமை தம் தந்தை என்று அழைத்தார்கள். ஆனாலும் அது சொல் சொல்லளவில் மாத்திரம் அல்ல செயல்பாட்டிலும் காட்டப்படவேண்டும் என்பதை இங்கு திருமுழுக்கு யோவான் சுட்டிக் காட்டுகிறார். அதாவது ஆபிரகாம் கடவுளுடன் கொண்டிருந்த நம்பிக்கையின் உறவைப் போன்ற உறவை யூதர்களும் கொண்டிருக்க வேண்டும் என்பதாகும்.

மெசியாவின் வருகையை எதிர்பார்த்து இருந்த யூதர்கள் திருமுழுக்கு யோவானை மெசியா என்று கருதினார்கள். அவர், இயேசு தன்னைவிட மேன்மை யானவர் என்று தெளிவாகக் கூறி, இயேசுவை மெசியா எனக் காட்டியுள்ளார். ''நான் தண்ணீரால் உங்களுக்கு திருமுழுக்கு கொடுக்கிறேன். ஆனால் என்னைவிட வலிமைமிக்க ஒருவர் வருகிறார். அவருடைய மிதியடிவாரை அவிழ்க்கக்கூட எனக்குத் தகுதியில்லை. அவர் தூய ஆவி என்னும் நெருப்பால் உங்களுக்கு திருமுழுக்கு கொடுப்பார்'' (லூக்கா 3:16) திருமுழுக்கு யோவானின் மனம் திரும்புதலுக்கான திருமுழுக்கை தண்ணீரால் கொடுப்பதாகவும், தனக்குப் பின்வரும் இயேசு தூய ஆவி என்னும் நெருப்பால் திருமுழுக்கு கொடுப்பார் என்றும் கூறியதன் மூலம் திருமுழுக்கு யோவான் தனது முன்னோடிப் பணியை நன்கு அறிந்திருந்தார் என்பதையும் அதை மிகுந்த தாழ்மையோடு நிறைவேற்றினார் என்பதையும் வெளிப்படுத்துகிறார்.

''அவர் சுளகைத் தம் கையில் கொண்டு கோதுமையையும் பதரையும் பிரித்தெடுப்பார். கோதுமையைத் தம் களஞ்சியத்தில் சேர்ப்பார். பதரையோ அணையா நெருப்பிலிட்டுச் சுட்டெரிப்பார்'' (லூக்கா 3:17). மனிதவாழ்வைக் குறித்த இறுதித் தீர்மானத்தை எடுப்பவர் இயேசு. கருணையும் கிருபையும் நிறைந்த இயேசு நியாயம் தீர்ப்பவராகவும் வருவார். அவ்வாறு நியாயம் தீர்க்கப்படும் மக்களை மனந்திரும்பச் செய்து வாழ்வை மாற்றச் செய்வது மாத்திரமே தமது பணி என்பதை திருமுழுக்கு யோவான் இங்கு தெளிவுபடுத்துகிறார்.

அவர் தூய ஆவி என்னும் நெருப்பால் உங்களுக்குத் திருமுழுக்குக் கொடுப்பார். (லூக் 3:16) திருமுழுக்கு யோவானின் மறைதிரும்புதலின் திருமுழுக்கானது தண்ணீரால் வழங்கப்பட்டது. கிறிஸ்துவால், தூய ஆவியாவியாலும் நெருப்பாலும் திருமுழுக்கு வழங்கப்படும் என்பது யோவானின் செய்தியாகும். பழைய ஏற்பாட்டில் ''நெருப்பு'' இறை பிரசன்னத்தை அடையாளப்படுத்துகின்றது. மோசேயின் அழைப்பில் ''எரியும் தீப்பிழம்பு'' இறை பிரசன்னத்தை தெளிவுபடுத்துகின்றது. தூய ஆவியானவர் மனித உள்ளங்களைத் தூய்மைப்படுத்தி வாழ்வைப் புதுப்பிக்கிறார்.

திருமுழுக்கு யோவானின் மனந்திரும்புதலுக்கான அழைப்பையும் அறிவு ரையையும் நிராகரித்தவர்களும் இருந்தனர். ஏரோது அரசன் தனது சகோதரனின் மனைவியாகிய ஏரோதியா தொடர்பாக செயல்பட்ட விதத்தை திருமுழுக்கு யோவான் அங்கீகரிக்காது, ஏரோது அரசனைக் கடிந்துகொண்டார். ஏரோது அரசன் அதை ஏற்றுக்கொள்ளாது திருமுழுக்கு யோவானை சிறையில் அடைத்து கொலை செய்வதற்கும் கட்டளையிட்டான். யோவான் போதித்த மனந்திரும்புதலின் செய் தியே அவரின் மரணத்திற்கு காரணமாகியது. யோவான் பயமற்றவராக மனந் திரும் புதலின் செய்தியைப் பறைசாற்றினார் என்பது இதிலிருந்து புலனாகின்றது. அவர் மக்களின் மனந்திரும்புதலுக்கு அந்த அளவு முக்கியத்துவம் கொடுத்துள்ளார். மனந் திரும்புதலுக்கான அவரின் அழைப்பு அவ்வளவு சக்திவாய்ந்ததும், இயேசுவின் பணிக்கு வழியை சிறப்பாக ஆயத்தம் செய்த ஒன்றுமாக காணப்பட்டது.

இன்றைய சமூகத்திற்கு திருமுழுக்கு யோவானின் அறிவுரையும் கடிந்துரையும் மிகவும் பொருத்தமாக அமையும். அவை தரும் சவால்களை ஏற்று சிறந்த சகோதரத்துவத்துடன், சுயநலமற்றவர்களாக, தம்மிடமுள்ளவற்றைப் பிறருடன் பகிர்ந்து, ஒருவரை ஒருவர் தாங்கி, வாழ்வில் மாற்றத்தை ஏற்படுத்தி வாழச் சிறந்த வழிகாட்டியாகவும் அவை அமையும்.

சமூகத்தில் நாம் செய்யும் எந்த காரியத்திலும் உண்மையோடும், மிகுந்த செயல்திறனுடனும், தராதரபாகுபாடுகளை நோக்காது, கொள்ளை லாபம் தேடாது, நீதி நியாயத்துடன் பணியாற்றுவது அவசியமாகும். தவறுகள் காணப்படும் போது அவற்றை சரிப்படுத்துவதற்கு முயற்சித்து, நற்பண்புகள் கொண்ட சமூகத்தை வளர்ப்பது நற்பிரஜைகளின் கடமையாகும்.

பாடசாலையில் கற்று பயின்று வளரும் உங்களுக்கு சமூகத்தில் புதிய மாற்றங்களை ஏற்படுத்துவதற்கு திருமுழுக்கு யோவானின் மனந்திரும்புதலின் செய்தி பெரும் சவாலாக அமையலாம். தீய செயல்களில் ஈடுபட உந்தப்படும்போது திருமுழுக்கு யோவானின் அறிவுரையை நினைவுபடுத்திக்கொள்ளவும். அப்போது சவால்களின் மத்தியிலும் நல்வழியில் செல்வதற்கான வழிகாட்டல் கிடைக்கும்.

**செயற்பாடு**

1. திருமுழுக்கு யோவான் வெவ்வேறு மக்கள் கூட்டத்திற்கு கொடுத்த அறிவுரைகள் இன்றைய சமூகத்திற்கு எவ்வளவு பொருத்தமுடையதாகும் என்பதை ஒப்பிட்டு முன்வைக்கவும்.

2. உமது வாழ்வில் மாற்றம் அடையவேண்டிய பழக்கவழக்கங்களை அடையாளம் கண்டு, அவற்றை மாற்றுவதற்கு நீர் எடுக்கும் புதிய தீர்மானங்களைக் குறித்து சிந்தித்துப் பார்க்கவும்.

# 7 நாசரேத்து அறிக்கை

**திருமுழுக்கு யோவானிடம் திருமுழுக்குப் பெற்று, தூய ஆவியால் வழிநடத்தப்பட்ட இயேசு அலகையினால் சோதிக்கப்பட்டு, அதை மேற்கொண்டவராக கலிலேயாவில் நாசரேத்து ஊருக்கு வந்து தனது பணியைத் தொடர்ந்தார். அக்காலத்தில் பலஸ்தீனாவின் மக்கள் பொருளாதார, சமூக, அரசியல் மற்றும் சமய ரீதியில் பெரும் இன்னல்களை அனுபவித்துக் கொண்டு இருந்தனர். இயேசு போதித்த ''இறையரசு'' பற்றிய நற்செய்தி அக்காலத்தில் அவர்களுக்கு மாத்திரமல்ல எக்காலத்திலும் எல்லோருக்கும் பொருத்தமடைவதை இப்பாடத்தில் கற்போம்.**

**லூக்கா** 3:23, 4:14-30

இயேசு வளர்ந்த ஊராகிய நாசரேத்து, கலிலேயாவில் உள்ளது. பலஸ்தீனாவின் வடபகுதியில் அமைந்துள்ள கலிலேயாப் பிரதேசம், மக்களின் எண்ணிக்கை அதிகமான, யூதர்களும் யூதரல்லாதோரும் வாழ்ந்த பிரதேசமாகும். இப்பிரதேசத்திலேயே இயேசு தூய ஆவியின் வல்லமை உடையவராய், முப்பதாவது வயதில் தனது போதகப் பணியை ஆரம்பித்தார். இறையரசை மையமாகக் கொண்ட நற்செய்தியையே இயேசு போதித்தார்.

எருசலேம் ஆலயம் யூத மதத்தினதும், தேசியத்தினதும் மையமாக இருந்தது. தொலைவில் இருந்த இடங்களில் தொழுகைக் கூடங்களே அவர்களது சமய அறிவை வளர்க்கும் இடமாகவும், இறைவேண்டல் செய்து, இறைவனைப் புகழ்ந்து பாடும் இடமாகவும் இருந்தது. இயேசு வளர்ந்த ஊராகிய நாசரேத்தின் தொழுகைக் கூடத்திற்கு இயேசு இளமையில் சென்று, சமய அறிவைப் பெற்றார். பின்னர் அங்கு அவர் கற்பித்தல் பணியிலும் ஈடுபட்டார். இறையாட்சியைப் பறைசாற்றும் நற்செய்தியை அறிவித்த இயேசு, கற்பித்தவற்றைக் குறித்து தொழுகைக் கூடங்களில் மக்கள் மிகவும் பெருமையாகப் பேசினார்கள்.

**லூக்கா** 3:23, 4:14-30

இயேசு தொழுகைக் கூடத்தில் வாசிக்க எழுந்து நின்றதும் எசாயா சுருளேடு அவரிடம் கொடுக்கப்பட்டது. அவர் திறந்து வாசித்த பகுதியை (எசாயா 61:1-2) கிறிஸ்தவர்கள் ''நாசரேத்து அறிக்கை'' என்று அழைப்பர். (லூக்கா 4: 18-21) எசாயாவின் அப்பகுதி, இஸ்ரயேலர்கள் பாபிலோனியாவில் நாடுகடத்தப்பட்டு

வாழ்ந்தபோது அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது என பொதுவாக பல விவிலிய அறிஞர்கள் கருதுகின்றார்கள். தாம் விடுதலை அடைந்து கடவுள் கொடுத்த தமது தேச த்திற்கு மீண்டும் வரும் நாளுக்காக காத்திருந்தவர்களுக்கு கடவுள் இறைவாக்கினர் மூலம் கொடுத்த நம்பிக்கையின் வாக்காகும்.

பாபிலோனியாவில் நாடு கடத்தப்பட்ட இஸ்ரயேலருக்கு மாத்திரமல்ல, இயேசு வின் காலத்தில் உரோமப் பேரரசின் கீழ் வாழ்ந்த இஸ்ரயேலருக்கும் அந்த விவிலியப் பகுதி பொருள் உள்ளதாக அமைந்தது. இன்றும் பல்வேறு ஆதிக்கத்துக்குட்பட்டு ஒடுக்கப்பட்டு வாழ்வோருக்கு அப்பகுதியின் விடுதலைச் செய்தி பொருத்தம் உடையதாக இருக்கின்றது.

**இயேசுவின் பணி**
**லூக்கா 4: 18-21**

**ஏழைகளுக்கு - நற்செய்தியைப் அறிவித்தல்**
**சிறைப்பட்டோருக்கு- விடுதலை கிடைப்பதை அறிவித்தல்**
**பார்வையற்றோருக்கு - பார்வை கிடைப்பதை அறிவித்தல்**
**ஒடுக்கப்பட்டோருக்கு - விடுதலை கிடைப்பதை அறிவித்தல்**
**ஆண்டவர் அருள்தரும் வருடத்தை அறிவித்தல்**

## ஏழைகள்

ஏழைகள் தமது ஏழ்மையினிமித்தம் எருசலேம் ஆலயத்தில் சமய சடங்குகளில் பங்கேற்பதில் பல கட்டுப்பாடுகளை எதிர்நோக்கினர். இயேசுவின் வருகையும் போதனையும் ஏழைகளுக்கு உள, உடல், சமூக மற்றும் ஆத்மீக ரீதியில் நற்செய்தியாக அமைந்தது. சமூக ரீதியில் ஒதுக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு இருக்கும் ஏழைகளை பாதுகாக்கவும் அவர்களை நேசிக்கவும் அவர்கள் சார்பாக செயல்படவும் தான் அருட்பொழிவு பெற்றிருப்பதாக இயேசு அறிவித்தார்.

## சிறைப்பட்டோர்/அடிமைகள்

கடவுள் மனிதனைப் படைத்தபோது அவர்கள் சுதந்திரமாய் வாழ்வதையே விரும்பினார். ஆனால் மனிதர்கள் மனிதர்களையே சிறைப்படுத்தியும் அடிமைத் தனத்திலும் வைத்திருக்கும் நிலை உருவாகியது. யூதமதச் சட்டத்திலும் ஆண்ட வரின் அருள் தரும் ஆண்டில் (யூபிலி வருடத்தில்) அடிமைகளை விடுவிப்பது கட்டாயமாக்கப்பட்டுள்ளது (லேவியர் 25:8-20). மேலும் கடவுளுடைய சாயலில் படைக்கப்பட்ட மனிதன், மனிதர்களுக்கு மாத்திரமல்ல பல்வேறு உலக சொத்துகள், மற்றும் கடவுளின் திட்டத்தை கெடுக்கும் தீய சக்திகள் போன்றவற்றிற்கும்

அடிமைப்பட்டு இருக்கும்போது அவர்களை விடுவிப்பதற்காக வந்ததாக இயேசு அந்த விடுதலை செய்தியை அறிவிக்கிறார்.

## பார்வையற்றவர்கள்

இயேசுவின் நலமாக்கும் பணியால் சரீர ரீதியில் பார்வையற்ற சிலர் நலமடைந்ததை நாம் நற்செய்தி நூல்களில் வாசிக்கிறோம். இயேசு கிருபையாய் அவர்களுக்கு கொடுத்த பார்வையால் அவர்களின் வாழ்வு ஒளியைப் பெற்றது.

சரீர ரீதியாக மாத்திரமல்ல, உள மற்றும் ஆத்மீக ரீதியிலும் சாரியானவற்றைப் பார்க்காதவர்கள் சார்பாகவும் இயேசு தனது கவனத்தை செலுத்தினார்.

## ஒடுக்கப்பட்டவர்கள்

பல்வேறு வழிகளில் ஒடுக்கப்பட்டவர்கள், தமது அடையாளத்தையும் இழந்தவர்களை உற்சாகப்படுத்தி அவ்வொடுக்கு முறைகளில் இருந்து அவர்களை விடுவித்தார் தீய ஆவியால் ஆட்கொள்ளப்பட்டு தமது பெயரையே இழந்து இலேகியோன் என்ற பெயரைப் பெற்றவனை இயேசு நலமாக்கினார் அதே போல் பலரை இயேசு நலமாக்கி அவர்களது இழந்த அடையாளத்தை மீண்டும் நிலைநாட்டினார்.

யூத சட்டத்திற்கு புது விளக்கம் கொடுத்து, ஓய்வு நாளிலும் அவ்வாறு ஒடுக்கப்பட்டவர்களைக் குணப்படுத்தி அவர்கள் விடுவிக்கப்படுவதன் அவசியத்தை இயேசு எடுத்துக் காண்பித்துள்ளார்.

## மக்கள்:-

முழு மக்கள் கூட்டத்திற்கும் இயேசு பயன்படுத்திய இறைவாக்கின் இறுதிப் பகுதி எல்லா மக்களுக்கும் உரியதாகும். கடவுளின் கிருபையும் அனுக்கிரகமும் அமைதியும் நிறைந்த காலம் தோன்றும் என்ற எதிர்பார்ப்புடன் இஸ்ரேயலின் இறைவாக்கினர்கள் பணியாற்றினார்கள்.

யூபிலி வருடக் கொண்டாட்டத்தின்போது, இந்த எதிர்பார்ப்பை யூத உயர் அதிகாரி மக்களுக்கு அறிவிப்பார். அவ்வாறே, இயேசுவின் வருகை தொடர்பாக இந்த விடுதலையின் செய்தி அறிவிக்கப்பட்டது.

## நாசரேத்து அறிக்கைக்கு எதிராக செயல்படுபவர்களுக்கு இயேசு எவ்வாறான பதிலைக் கொடுத்தார்?

முதலாவதாக இறையரசும், மெசியாவும் தமக்கு மாத்திரம் என்று கருதிய யூதர்கள் மத்தியில் தமது பணியின் ஆரம்பத்திலேயே இறையரசும், மெசியாவும் யூதரல்லாதோருக்கும் என்பதை எடுத்தியம்பினார் இவ்வுண்மையை விளக்குவதற்கு யூதர்களின் வரலாற்று சம்பவங்கள் இரண்டை இயேசு அவர்களுக்கு நினை வூட்டினார்.

1. எலியா இறைவாக்கினர் காலத்தில் பெரும் பஞ்சம் ஏற்பட்டபோது, இஸ்ரயேலரிடையே பல கைம்பெண்கள் இருந்தும் எலியா அவர்களுள் எவரிடமும் அனுப்பப்படாமல், சீதோனைச் சேர்ந்த சாரிபாத்தில் வாழ்ந்த கைம்பெண்ணிடம் கடவுளால் அனுப்பப்பட்ட சம்பவம், (1 அரசர் 17:8-24),

2. எலிசா இறைவாக்கினர் காலத்தில் இஸ்ரயேலில் தொழுநோயாளர்கள் பலர் இருந்தும், சிரியாவைச் சேர்ந்த நாமானுக்கு நோய் நீங்கிய சம்பவம் (2 அரசர் 5:1-27). இங்கு குறிப்பிடப்படும் சாரிபாத்து கைம்பெண், மற்றும் நாமான் இருவரும் யூதரல்லாத பிற இனத்தவராவார்.

இரண்டாவதாக, இந்த இரு வரலாற்று சம்பவங்களைத் தவிர இன்னுமொரு கருத்தையும் முன்வைத்தார். யூதனாகிய தானுமே யூதர்களால் நிராரிகரிக்கப்பட்ட இறைவாக்கினர் என்பதை மக்கள் அறியச்செய்தார் இதற்காக யூதர்கள் மத்தியில் நிலவிய பின்வரும் இரு முதுமொழிகளை இயேசு சுட்டிக்காட்டினார்.

***''மருத்துவரே உம்மையே நீர் குணமாக்கிக்கொள்ளும்'' லூக்கா*** 4:23
***''இறைவாக்கினர் எவரும் தம் சொந்த ஊரில் ஏற்றுக்கொள்ளப் படுவதில்லை'' லூக்கா*** 4:24

நாசரேத்து அறிக்கைக்கு எதிராக செயல்படுபட்டவர்களுக்கு, அவர்களுடைய வரலாற்று சம்பவங்களையும் அவர்களுடைய முதுமொழிகளையும் சுட்டிக்காட்டினார். மூன்றாவதாக, தனது தைரியத்தின் மூலமும் புத்திசாதுரியத்தின் மூலமும் பதில் கொடுத்தார் அவர்களை விட்டு பிரிந்து சென்றுவிடாது, அவர்கள் மத்தியில் தொழு கைக் கூடங்களிலும், வெளியிடங்களிலும் நின்று போதித்தார். இயேசுவில் ஆத்திரம் அடைந்தவர்கள் அவரை மலையில் இருந்து தள்ளி கொலை செய்ய இழுத்துச் சென்ற போது இயேசு அவர்கள் நடுவே நடந்து சென்று அங்கிருந்து போய்விட்டார்.

இவ்வாறாக இயேசு தனது இவ்வுலக வருகையின் மூலம் இறை அரசை இப்பூவுலகில் நிலைநாட்டும் பணி ஆரம்பித்துவிட்டது என்பதை நாசரேத்து அறிக்கையின் வழியாக எடுத்துக் காட்டினார் அப்பணிக்காக இயேசு கடவுளின் அருள் பொழிவையும் பெற்றார்.

குறிப்பிட்ட ஒரு பணிக்காக கடவுளால் பிரித்து எடுத்துக்காட்டப்பட்டுள் ளதைக் காண்பிக்கின்றது. இவ்வாறு யூத மதக் குருக்களும் அரசர்களும் இறை வாக்கினர்களால் அருள்பொழிவு கொடுக்கப்பட்டு அவர்களின் பணியில் ஈடுப டுத்தப்பட்டனர். இயேசுவின் அருள்பொழிவு இறையரசுப் பணிக்கு கடவுளால் பிரித்தெடுக்கப்பட்டுள்ளார் என்பதைக் காண்பிக்கிறது. மாறாக இறைவாக்கினர்கள் இறை அழைப்பைப் பெற்று இறைவாக்குப் பணிக்கு பிரித்தெடுக்கப்பட்டனர்.

**செயற்பாடு**

1. இயேசுவின் நாசரேத்து அறிக்கை மூலம் இன்றைய சமூகத்துக்கு கிடைக்கும் எதிர்பார்ப்பு என்ன என்பதை விளக்குக.

2. நாசரேத்து அறிக்கை மூலம் கிறிஸ்தவ திருச்சபையிலும் சமூகத்திலும் உமக்கு கிடைக்கும் பணியில் நீர் எதிர்நோக்கும் சவால்கள் மத்தியில் எவ்வாறு செயல்படுவீர் என்பதை விளக்குக.

# 8 இறை பணிக்கான அழைப்பு

**இயேசுவின் போதனையைக் கேட்டு, அவரைப் பின்தொடர்ந்து, அவருடன் பழகி, அனேகர் அவருடைய சீடத்துவத்தில் பங்காளர்களாக இருந்தார்கள். அவர்களுள் பன்னிருவரை இயேசு தெரிவு செய்து திருத்தூதர் என்று அழைத்தார். அவர்களுடன் இன்னும் எழுபதுபேரை திருத்தூது பணிக்கென்றும் தெரிவுசெய்தார். இவ்வாறு இயேசு சீடர்களைத் தெரிவுசெய்ததை இங்கு கற்போம்.**

**லூக்கா** 5:1-11, 6:12-16, 9:1-6, 10:1-12, 17, 20

நாசரேத்து தொழுகைக் கூடத்தில் இயேசு தனது பணிபற்றி முன்வைத்த அறிக்கையின்படி செயல்படுவதற்கு சிலரைத் தெரிவுசெய்தார். இயேசு காண்பித்த வழியில் பணி ஆற்றுவதற்கும், இயேசுவின் பணியைப் பரவச் செய்வதற்கும் இறை அழைப்பைப் பெற்றவர்களின் பிரதிச்செயல்கள் சிலவற்றை நாம் பார்ப்போம்.

## பணியின் பரம்பலுக்காக முதல் சீடரை அழைத்தல் (லூக்கா 5:1-11)

இயேசு கெனசரேத்து ஏரிக்கரையில் (கலிலேயாக் கடல் அல்லது திபேரியாக் கடல் என்றும் இது அழைக்கப்படும், இது 13 மைல் நீளமும் 8 மைல் அகலமும் கடல் மட்டத்தில் இருந்து 680 அடி கீழே உள்ளது) நின்று கொண்டு இருந்தபோது திரளான மக்கள் இறைவார்த்தையைக் கேட்பதற்கு அவரை நெருக்கிக் கொண்டு இருந்தனர். ஏரிக்கரையில் நின்றுகொண்டிருந்த இரு படகுகளுள் ஒன்றில் இயேசு ஏறி, அமர்ந்து மக்கள் கூட்டத்துக்கு கற்பித்தார். மீன் பிடித்து வலையை அலசிக் கொண்டிருந்த அந்தப் படகின் சொந்தக்காரனான சீமோனை நோக்கி ''ஆழத்திற்கு தள்ளிக்கொண்டுபோய், மீன் பிடிக்க உங்கள் வலைகளைப் போடுங்கள்'' என்றார். அதற்கு சீமோன், ''ஐயா, இரவு முழுவதும் நாங்கள் பாடுபட்டு உழைத்தும் ஒன்றும் கிடைக்கவில்லை ஆயினும் உமது சொற்படியே வலைகளைப் போடுகிறேன்'' என்றார். இயேசுவின் வார்த்தைகளுக்கு கீழ்ப்படிந்த சீமோன் வலையை ஆழத்தில் போட்டு, பெருந்திரளான மீன்களைப் பிடித்தார். இருபடகுகளும் நிறைந்து மூழ்கும் அளவிற்கு மீன்களைப் பிடித்த சீமோன், இயேசுவின் கால்களில் விழுந்து, ''ஆண்டவரே, நான்பாவி, நீர் என்னைவிட்டுப் போய்விடும்'' என்றார். சீமோன் பேதுருவுக்கோ பெரும் சவால் ஒன்று காத்திருந்தது. ''அஞ்சாதே இன்று முதல் நீ மனிதரைப் பிடிப்பவர் ஆவாய்'' என்று கூறி, இயேசு அவரை தனது பணிக்காக அழைத்தார். சீமோன் பேதுரு,

அவருடைய பங்காளியான செபதேயுவின் மக்கள் யாக்கோபும் யோவானும் படகுகளை கரையில் சேர்த்த பின்னர் அனைத்தையும் விட்டுவிட்டு இயேசுவைப் பின்பற்றினார்கள்.

இந்த சம்பவத்தில் இருந்து சீமோன் பேதுருவைக் குறித்து நாம் பின்வரும் விடயங்களை அறிந்து கொள்ளலாம்:

1. மீன் பிடித்தலில் பேதுரு அனுபவம் மிகுந்தவராக இருந்தாலும் இயேசுவின் வேண்டுகோளுக்கு உடனடியாக செவிசாய்த்தார்.
2. இயேசுவின் பரிசுத்த தன்மையையும் இறைவல்லமையையும் இனம் கண்டதுடன் தனது பாவதன்மையையும் உணர்ந்தார்.
3. தனது வாழ்வின் இலக்கை மாற்றி, இயேசு கொடுத்த புதிய இலக்கை ஏற்றுக்கொண்டார்.

இயேசு தமது பணிக்காக பன்னிருவரைத் தெரிவு செய்தார். தற்காலத்தில் இதற்காக கிறிஸ்தவ பிள்ளை காட்டும் மாறுதரத்தை கவனத்திற் கொள்வோம்.

**பன்னிருவரைத் தேர்ந்தெடுத்தல்**
**(லூக்கா 6 : 12 - 16)**

திருத்தூதர் என்பதன் பொருள் “சிறப்பான பணிக்காகப் பயிற்றப்பட்டு அனுப்பப்பட்டவர்” என்பதாகும்.

இயேசு திருத்தூதர்களைத் தெரிவு செய்யுமுன் இரவு முழுவதும் ஜெபித்தார். இது ஜெபத்துடனும் இறை வழி நடத்தலுடனும் இடம் பெற்ற நிகழ்வாகும். இயேசு நீண்ட, சவால் நிறைந்த பணியின் பயணத்திற்காக சீடர்களைத் தெரிவு செய்தார்.

சீடர்களாகத் தெரிவு செய்யப்பட்டவர்கள் பல பிரதேசங்கள், பல தொழில்கள், பல சிந்தனைகளை உடைய கூட்டமாகும். இவர்கள் கிறிஸ்துவின் முன்னிலையில் வேறுபாடுகளை மறந்து ஒன்றுபட்டனர். இது திருச் சபைகளுக்கும் உலகிற்கும் மகத்தான சவாலாக அமைகிறது.

எதுவித தராதரமும் பாராது சீடர்களைத் தமது பணிக்குத் தெரிவு செய்தார். இயேசுவின் சீடத்துவத்தில் இனம், குலம், நிறம், உயரம் - கட்டை, வெள்ளை - கறுப்பு, கற்றவர் - கற்காதோர் போன்ற பேதங்கள் காணப்படவில்லை.

சீடர்களின் விபரம் பின்வருமாறு.

| திருத்தூதர் | சிறப்புக் குறிப்பு |
|---|---|
| சீமோன் | பேதுரு என்று பெயர் சூட்டப்பட்டார். கேபா என்றும் அழைக்கப்பட்டார். திருச்சபையில் முதல் தலைவரானார். சீடர்கள் மத்தியில் முதன்மை வகித்தவர் |
| அந்திரேயா | சீமோனின் சகோதரன். யோவானின் சீடராக இருந்தவர், மீனவராயிருந்தார். |
| யோவான் | செபதேயுவின் மகன் யாக்கோபின் சகோதரன் இடி முழக்கத்தின் மக்கள் என்ற பட்டப்பெயர் கொண்டவர், மீனவராயிருந்தார். |
| யாக்கோபு | செபதேயுவின் மகன் யோவானின் சகோதரன் இடி முழக்கத்தின் மக்கள் என்ற பட்டப்பெயர் கொண்டவர், மீனவராயிருந்தார். |
| பிலிப்பு | கிரேக்கப் பெயர். |
| பார்த்தலமேயு | நாத்தான்வேல் என்றும் அழைக்கப்பட்டார். அரசபரம்ப ரையில் இருந்து வந்தவர் என்று சிலர்நம்புகிறார்கள். |
| மத்தேயு | லேவி என்று அழைக்கப்பட்டார் வரிதண்டுபவரா யிருந்தார். |
| தோமா | இயேசுவின் உயிர்ப்பை முதலில் சந்தேகித்து பின் உறுதி செய்து நம்பினார். |
| யாக்கோபு | அல்பேயுவின் மகன். |
| சீமோன் | தீவிரவாதி என்னப்பட்டவர் உரோம ஆட்சிக்கு எதிராக போராடியவர். |
| யூதா | யாக்கோபின் மகன். |
| யூதாசு இஸ்ரிகாரியோத்து | துரோகியாக மாறியவர். |

இயேசு தன்னோடு சேர்ந்து பணியாற்றுவதற்காக வெவ்வேறு சமூகப் பின்னணியிலிருந்து பன்னிரு திருத்தூதர்களைத் தெரிவு செய்திருந்ததை நாம் இங்கு கண்டு கொள்ளலாம். இந்த பன்னிருவரைத் தவிர வேறும் எழுபத்திரண்டு சீடர்களைத் தெரிவுசெய்து பணிக்கு அனுப்பினார். (லூக்கா 10:1-12) இவர்களைத் தவிர வேறும் பல சீடர்கள் இயேசுவுக்கு இருந்ததாக லூக்கா 8:1-3, 24:13 ஆகிய பகுதிகளில் இருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

## பணிக்கு அனுப்புதல்

இயேசு பன்னிருவரையும் ஒன்றாக அழைத்து, பணிக்கான அறிவுரைகளையும் அதிகாரத்தையும் கொடுத்து அனுப்பினார்.

## அவ்விரு பணிப் பயணங்கள்

| சீடர்கள் 12 (லூக்கா 9:1-6) | சீடர்கள் 70 (லூக்கா 10:1-12) |
|---|---|
| • பணியின்போது எடுத்துச்செல்லக் கூடாதவை (கைத்தடி, பை, உணவு, பணம், ஒன்றுக்கு மேற்பட்ட அங்கி)<br>• எளிமையான வாழ்வு<br>• நற்செய்தியை ஏற்றுக்கொள்வோருடன் தங்கியிருத்தல்<br>• ஏற்றுக்கொள்ளாதவர்களிடம் இருந்து, கால்தூசியை உதறிவிட்டு புறப்பட்டுச் செல்லுதல். | • இருவர் இருவராக செல்லுதல்<br>• இயேசு போகவிருந்த எல்லா ஊர்களுக்கும் அனுப்புதல்<br>• எடுத்துச் செல்லக் கூடாதவை (பணப்பை, வேறும் பை, மிதியடி)<br>• ஏற்றுக்கொள்வோருடன் தங்குதல்<br>• ஏற்றுக்கொள்ளாதோருக்கு எதிராக காலடி தூசியை உதறிவிடல் |
| **கொடுக்கப்பட்ட பொறுப்பு**<br>• பேய்களையெல்லாம் அடக்கவும் பிணிகளைப் போக்கவும் அதிகாரம் பெற்றிருத்தல்<br>• பிணிதீர்தல்<br>• இறையரசை அறிவித்தல் | **கொடுக்கப்பட்ட பொறுப்பு**<br>• வேலையாட்களை அனுப்பும்படி மன்றாடுதல்<br>• வீடுகளுக்கு அமைதியை வாழ்த்தாகக் கூறுதல்<br>• உடல் நலம் குன்றியோரை குணமாக்குதல்<br>• இறையாட்சி நெருங்கிவிட்டது என்று அறிவித்தல் |

**இவ்விரு பயணங்களில் இருந்தும் நற்செய்தி பரப்புப் பணி தொடர்பாக நாம் கற்றுக்கொள்ளக்கூடியவை:**

1. காலம் தாழ்த்தாமல் நற்செய்தி அறிவிக்கப்பட வேண்டும்.
2. ''ஓநாய்களிடையே அனுப்புகிறேன்'' என்பது நற்செய்திப் பணியின் போது பெரும் சவால்களைச் சந்திக்கநேரிடும் என்பது.
3. பணியாற்றுபவர்கள் எளிமையான வாழ்வை வாழ்வதுடன் இறை நம்பிக்கை மிகுந்தோராக இருக்கவேண்டும்.
4. இந்த சீடத்துவம் விலைமதிக்க முடியாததொன்று, மிகவும் கடினமானது, மன்றாடலுடனும் திட்டமிடலும் தேவையானது. (இயேசுவிடம் இருந்து இவற்றைக் கற்ற சீடர்கள் இயேசுவின் மரணத்தின் பின் தமது பணியில் இதே சவால்களை சந்தித்து வெற்றி கொண்டார்கள்).
5. நற்செய்திப் பணியில் அமைதியின் செய்தி (சமாதானத்தின் செய்தி) இணைந்துள்ளது.
6. எழுபத்திரண்டுபேர் இவ்விருவராக அனுப்பப்பட்டதன் மூலம் பணியில் காணப்பட வேண்டிய சகோதரத்துவம், ஒன்றிணைந்து பணியாற்றல், அதன் மூலம் நற்செய்திப்பணி சிறப்பாக மேற்கொள்ளப்படல் ஆகியவற்றைக் காணலாம்.
7. நற்செய்திப் பணியின் பலன் இறைவனுக்கு சொந்தமானது.
8. மன்றாடல் நற்செய்திப் பணிக்கு இன்றி அமையாதது.

***நற்செய்திப் பயணங்களின் பலன்*** (***லூக்கா*** 9:6, 10-17, 20)

1. பல இடங்களில் நற்செய்தி அறிவிக்கப்பட்டது
2. கடவுளின் பெயரால் பேய்கள் விரட்டப்பட்டன
3. கடவுளின் பெயரால் நோய்கள் குணமாக்கப்பட்டன

சீடர்கள் தம்மால் இவ்வாறானவற்றை செய்யக்கூடியதாக இருந்ததையிட்டு மகிழ்வுகொள்ளாது, அவர்களுடைய பெயர்கள் விண்ணகத்தில் எழுதப்பட்டிருப்பதால் மகிழவேண்டும்.

### செயற்பாடு

1. இயேசு தம்முடைய சீடர்களை நற்செய்திப் பணிக்காக அனுப்பும் போது கொடுத்த அறிவுரைகளுள் ஐந்தைப் பட்டியல்படுத்தி, அவை ஒவ்வொன்றினதும் முக்கியத்துவத்தை நீர் எவ்வாறு பார்க்கின்றீர் என்பதை எழுதவும்.

2. சுயவிருப்பத்தினால் இறை பணிக்கு முன்வருவோருடைய பணி எவ்வாறு அமைய வேண்டும் என்பதை விவரித்து எழுதுக.

# 9 சமூகத்திற்கு புதிய எண்ணக்கரு

**முழு உலகிலும் இறையரசை நிறுவதையே இயேசு தனது பணியின் இலக்காகக் கொண்டிருந்தார். பல்வேறு காரணங்களின் நிமித்தம் ஒதுக்கப்பட்டு, ஓரங்கட்டப்பட்டு, மற்றும் நிராகரிக்கப்பட்டு வேதனைக்குள்ளான பலரின் வாழ்வை இயேசு மேம்படுத்தினார். இயேசுவின் அவ்வாறான பணியைக் குறித்து இங்கு கற்போம்.**

**லூக்கா** 8: 19-21, 8: 1-3, 10: 38-42, 7: 36-50, 8: 43-48, 13: 10-17, 19: 1-10, 5: 12-16, 9: 46-48, 18: 15-17, 17: 1-2

**(லூக்கா 8:19-21)**

ஒரு யூதக் குடும்பத்தில் பிறந்து, குடும்ப விழுமியங்களைக் காத்து வளர்ந்த இயேசு, சிறு வயது முதல் கடவுளாகிய பிதாவுக்கும் பெற்றோருக்கும் பயந்து கீழ்ப்படிந்தவாராக வாழ்ந்தார். இவ்வாறான குடும்ப உறவை மதித்து நடந்த அதேவேளை, அவருடைய தாயும் சதோதரரும் அவரைத் தேடிவந்த ஒரு சந்தர்ப்பத்தில் குடும்பம் பற்றிய ஒருபுதிய எண்ணக்கருவையும் முன்வைத்தார்.

இயேசுவை சூழ்ந்து மக்கள் திரளாக இருந்ததின் நிமித்தம் ஒரு சந்தர்ப்பத்தில் அவருடைய தாயும் சகோதரர்களும் அவரை அணுக முடியாதிருந்தார்கள். மக்கள் இயேசுவிடம் ''உம் தாயும், சகோதர்களும் உம்மைப் பார்க்க விரும்பி வெளியே நின்று கொண்டிருக்கிறார்கள்'' என்று அறிவித்தார்கள். அதற்கு இயேசு, ''இறைவார்த்தையைக் கேட்டு அதன்படி செயல்படுகின்றவர்களே என் தாயும் என் சகோதரர்களும் ஆவார்கள்'' என்றார். இறைவார்த்தைகளைக் கேட்பது மாத்திரம் அல்ல அதின்படி செய்யவேண்டும் என்பது இங்கு வலியுறுத்தப்படுகின்றது. கிறிஸ்தவவாழ்வு என்பது இறையரசின் குணவியல்புகளை நடைமுறைப்படுத்துகின்ற செயல்பாட்டுடனான நம்பிக்கையாகும். அதாவது, இறைவனின் விருப்பை அறிந்து அதை செயற் படுத்துகின்றவர்கள் இறைவனின் குடும்பத்தில் நெருங்கிய அங்கத்தவர்கள் ஆவார்கள். இவ்வாறான நெருங்கிய உறவுக்குள் வந்தவர்கள் அனைவருக்கும், இறை குடும்பத்தில் அங்கத்தவர்களாக மாறும் சந்தர்ப்பம் இறை அருளால் திட்டமாக கிடைக்கும். இவ்வாறாக, இரத்த உறவைக் கடந்து செல்லும் விரிவான குடும்ப உறவை இயேசு அறிமுகப்படுத்தியுள்ளார்.

இறை குடும்ப அங்கத்தவராக மாறுவது எளிதான செயல் அல்ல எனினும் நாம் உறுதியுடனும் இறைவழி நடத்துதலுடனும் செயல்படும்போது அந்த நிலையை அடையலாம். அதாவது, நாம் இறைவார்த்தைகளைக் கேட்கின்றவர்களாக மாத்திரம் அல்ல அவற்றை செயற்படுத்துகின்றவர்களாகவும் இருக்கவேண்டும். கிறிஸ்தவ குடும்பங்கள் படைப்பாளராகிய கடவுளால் உருவாக்கப்பட்டவை என்பதை நாம் ஏற்றுக்கொள்வோம். எனவே, குடும்பங்கள் கடவுளுடன் மேற்கொள்ளும் உறவின் அடிப்படையில், கிறிஸ்தவ குடும்பங்கள் முழு சமூகத்துக்கும் சான்றுபகரும் குடும்பங்களாக அமையும் என்பது உண்மையாகும்.

**லூக்கா** 8:1-3, 10: 38-42, 7:36-56

அன்றைய யூத சமூகம் ஆண் ஆதிக்கம் நிறைந்த சமூகமாக இருந்தது. சிறுவயது முதல் ஆண் பிள்ளைகள் தொழுகைக் கூடத்தில் தோராவைக் கற்றனர். பெண் பிள்ளைகள் வீட்டு வேலைகளைச் செய்து வீட்டில் சமய அறிவைப் பெற்றனர். ஆனால் இயேசு தமது பணிக்கு சீடர்களைத் தெரிவு செய்தபோது இறையரசைக் கட்டிஎழுப்புவதற்கு பெண்களுக்கும் இடம் கொடுத்தார். இயேசு, நகர் நகராய்ச் சென்று நற்செய்தியைப் பறைசாற்றியபோது பன்னிருவருடன் சில பெண்களும் இருந்தார்கள் என்பதை நாம் பார்க்கின்றோம்.

## லூக்கா 8:1-3

அதிகாலை முதல் இரவுவேளை வரை வீட்டுப்பணிகளில் ஈடுபட்டிருந்த பெண்களுக்கு இயேசு புதிய அடையாளத்தை கொடுத்தார். சாதாரண பெண்கள் மாத்திரமல்ல சில அதிகாரம் படைத்த பெண்களும் அவர்களுள் இருந்தனர். இயேசு வின் பணியில் இவர்கள் அனைவரும் அவருடன் நெருங்கி செயற்பட்டனர்.

## லூக்கா 10: 38 - 42

இயேசு அடிக்கடிசென்ற பெத்தானியா ஊரில் மார்த்தா, மரியா என்பவர்களின் வீட்டில் நடந்த சம்பவமும் இயேசு பெண்களுக்கு கொடுத்த சிறப்பான இடத்தை விளக்குகின்றது. யூதக் குடும்பத்தில் பெண்களுக்கு உரிய வீட்டுப் பணிகளை மார்த்தா மிகவும் சிறந்தமுறையில் செய்வதற்கு பாடுபட்டார். இயேசுவின் காலடியில் அமர்ந்து அவர் சொல்வதைக் கேட்டுக்கொண்டு இருந்த தனது சகோதரியையும் வீட்டுப் பணிகளில் ஈடுபடுத்த இயேசுவிடம் முறையிட்டார். இயேசு மார்த்தாவின் வேண்டுகோளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல், மறைபோதனைகளைக் கேட்டுக் கொண்டு இருந்த மரியாவைப் பாராட்டினார் ‘‘மார்த்தா, மார்த்தா! நீ பலவற்றைப் பற்றிக் கவலைப்பட்டுக் கலங்குகிறாய். ஆனால் தேவையானது ஒன்றே. மரியாவோ

நல்ல பங்கைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாள். அது அவளிடமிருந்து எடுக்கப்படாது'' என்றார். இறையரசின் வளர்ச்சிக்குப் பெண்களின் பங்களிப்பு தேவை என்பதை இதன் மூலம் இயேசு காண்பித்துள்ளார். இவ்வாறு சிறப்பான இடத்தை அன்றைய சமூகத்தில் பெற்ற பெண்கள், இயேசு சிலுவையில் மரிக்கும் போதும் அவருடன் இருந்தார்கள். இயேசுவின் உயிர்ப்பின் முதலாவது சாட்சிகளாகவும் விளங்கினார்கள்.

## லூக்கா 7: 36-50

சீமோன் என்னும் பரிசேயர் ஒருவருடைய வீட்டில் இயேசு உணவருந்தும் போது, அந்நகரில் இருந்த பாவி என்று ஓரங்கட்டப்பட்ட பெண்ணை இயேசு மன்னித்ததன் மூலம் பெண்கள் குறித்து புதிய எண்ணக்கருவை ஏற்படுத்தினார். பாவி என்று எண்ணப்பட்ட பெண் இயேசுவின் காலடிகளைத் தம் கண்ணீரால் நனைத்து, தம் கூந்தலால் துடைத்து, தொடர்ந்து முத்தமிட்டு, அக்காலடிகளில் நறுமணத்தைலம் பூசினார். சீமோன் அதைக் கண்டு இயேசுவை ஏளனமாக தமக்குள்ளே சொல் லியதை இயேசு அறிந்து, அவரை உணவருந்த அழைத்த சீமோனைவிட அப்பெண் அதிகம் மன்னிக்கப்பட்டவர் என்று கூறி ஒரு திருப்பத்தை ஏற்படுத்தினார். பாவி என்று ஒதுக்கப்பட்ட அப்பெண்ணை மன்னித்து ''உமது நம்பிக்கை உம்மை மீட்டது. அமைதியுடன் செல்க'' என்று கூறி பிறரை நியாயம் தீர்க்கும் பரிசேயரின் செயலை இயேசு கண்டித்ததோடு அப்பெண்ணின் சமூகநிலையையும் மாற்றினார்.

**நீண்ட காலமாக நலமடையாது இருந்ததால் சமூகத்தில் இருந்து புறந்தள்ளப்பட்டிருந்த இரு பெண்கள் பற்றிய சம்பவம்.**

| **லூக்கா 8:43-18** | **லூக்கா 13:10-17** |
|---|---|
| 12 வருடங்கள் எதிர்பார்ப்பை இழந்து காணப்பட்ட பெண் இயேசுவின் பின்னே செல்லல். இயேசுவின் உடையின் ஓரத்தைத் தொட்டு, தனது நம்பிக்கையினால் சுகம் அடைதல். | 18 வருடங்கள் தீய ஆவியினால் பிடிக்கப்பட்டு நிமிரமுடியாதவராய், ஓய்வு நாளில் தொழுகைக் கூடத்திற்கு வரல். இயேசு அவர்மீது கையை வைக்க அவர் நலமடைதல் |

அவர்கள் அன்றைய சமூகத்தின் தடைகளை மீறி, இயேசுவில் வைத்த நம்பிக்கையினிமித்தம் நலமடைந்து, வாழ்வில் ஒளியைப் பெற்றனர்; ஆபிரகாமின் குமாரத்திகள் என்று அழைக்கப்பட்டனர்.

**சமூகத்தில் ஒதுக்கப்பட்டு, நிராகரிக்கப்பட்டு இருப்பவர்களில் இயேசு இரக்கம் காண்பித்தார். உரோமப் பேரரசிற்கு சார்பாக செயல்பட்ட வரி தண்டுபவர் மற்றும் தொழுநோயாளர் பற்றி லூக்கா நூலில் நாம் காண்பது.**

வெறுக்கப்பட்ட சக்கேயு

**லூக்கா** 19: 1- 10

- இயேசுவை பார்ப்பதற்கு சக்கேயு மிகுந்த ஆவலுடன் இருந்தார்.
- சக்கேயுவை சந்திப்பதற்கு இயேசு முன்வரல்
- வீட்டில் சக்கேயுவின் வாழ்வில் புதிய மாற்றம் ஏற்படல்
- அம்மாற்றத்தை நடைமுறைப் படுத்துதல்
- ஆபிரகாமின் மகன் என்று அழைக்கப்படல்

ஒதுக்கப்பட்ட தொழுநோயாளர்

**லூக்கா** 5: 12 - 16

- இயேசுவுக்கு சித்தமானால் குணமடையலாம் என்று நம்புதல்
- இயேசு தனது விருப்பத்தைத் தெரிவித்து தொழு நோயாளரை கையால் தொடுதல்
- தூய்மையாதல் சடங்கிற்கு வழிநடத்தி, யூத சமூகத்தில் ஏற்றுக்கொள்ளப் படும் நிலையை உருவாக்குதல்

சமூகத்தில் ஒதுக்கப்பட்டவர்கள் சார்பாக நாம் ஆற்றக்கூடிய பணியை இயேசு இங்கு முன்வைக்கின்றார்.

உங்களைப் போன்ற சிறுவர்களின் முக்கியத்துவத்தை வலியுறுத்தி, அதை தமது சீடர்களுக்கு இயேசு தெளிவுபடுத்தியுள்ளார். அந்த முக்கியத்துவத்தைப் பாதுகாப்பது நம் அனைவரினதும் பொறுப்பாகும். இது தொடர்பாக மூன்று சந்தர்ப்பங்களில் இயேசு தமது சீடரை அறிவூட்டிய சந்தர்ப்பங்களைப் பார்ப்போம்.

**லூக்கா 9:46-48**

- சீடர்களிடையே பெரியோர் யார் என்ற விவாதம்
- 'சிறுவரை' உவமானமாக எடுத்து, இயேசு பெரியோரை பற்றி போதித்தார்
- வயது, உயரம், பருமன் போன்றவற்றிற்குப் பதிலாக தாழ்மை, உண்மை தீமையை வெறுத்தல், பழிவாங்காமை, தவறை ஏற்றுக்கொள்ளுதல், நம்பிக்கை போன்றவை அவசியம்.
- இறையரசின் வளர்ச்சியை ஒப்படைத்த தமது சீடர்கள் அவர்களுடைய வாழ்வை மாற்றி அமைக்க வழி அமைத்தார்

## லூக்கா 18:15-17

- சிறுவர்களை இயேசுவிடம் அழைத்துவந்த ஒரு சந்தர்ப்பத்தில் சீடர்களின் பிரதிநடத்தை சிறப்பானதாக இருக்கவில்லை
- சிறுவர்களின் தேவையை இயேசு சந்திக்க ஆயத்தமாய் இருந்தார்.
- சீடர்கள் மறக்காத ஒரு அனுபவத்தை பெற்றனர்
- இறையரசிற்கு செல்ல சிறு பிள்ளையின் தன்மை அடைய வேண்டும்.

## லூக்கா 17 : 1 - 2

சீடர்களுக்கு மீண்டும் கொடுக்கப்பட்ட அறிவுரை

- ''சிறியவருக்கு'' ஏற்படுத்தும் தடைகளுக்கான தண்டனை பெரியது.
- சிறியவர்கள் பலவீனர்கள், நம்பிக்கை நிறைந்தவர்கள் எனவே இலகுவில் ஏமாற்றபடத்தக்கவர்கள். எனவே உண்மையை மறைக்காது நல்ல வழியில் வழிநடத்தப்பட வேண்டியவர்கள்.

இயேசு சமூகத்தில் வேறுபாடுகளை தவிர்த்து சமத்துவத்தையும் சமசந்தர்ப்பத்தையும் முக்கியப்படுத்தி அன்பு நிறைந்த சூழலை உருவாக்க செயற்பட்டார். நாமும் அவ்வாறே செயற்படுவோம்.

***அசிசிஊர் பிரான்சிஸ் இன் மன்றாடல்.***

**''கர்த்தாவே, உமது கருவியாக என்னை ஆக்கியருளும். பகைமை நிறைந்த இடத்தில் அன்பையும், அமைதியின்மை நிலவும் இடத்தில் அமைதியையும், நம்பிக்கையற்ற இடத்தில் நம்பிக்கையையும், எதிர்பார்ப்பு குன்றிய இடத்தில் எதிர்பார்ப்பையும், துயரம் நிறைந்த இடத்தில் பேரானந்தத்தையும், இருள் சூழும் இடத்தில் ஒளியையும் எடுத்துச்செல்ல எனக்கு துணைபுரியும்.''**

## செயற்பாடு

1. உமது குடும்பம் இறைவனின் குடும்பமாக அமைவதற்கு நீர் மேற்கொள் பவற்றை எழுதுக.

2. இயேசு நோயுற்றோருக்கு சட்டத்தின் தடையை விட முக்கியத்துவம் கொடுத்து அவர்களை நலமாக்கிய சந்தர்ப்பங்கள் இரண்டை எழுதுக.

3. அசீசிஊர் பிரான்சிஸ் இன் மன்றாடலின்படி நீர் சமூகத்திற்கு புதிய அர்த்தத்தைக் கொடுக்க செய்யக்கூடியவற்றை முன்வைக்கவும்.

# 10 திருச்சட்டத்தின் மையம் அன்பு

**''ஆண்டவருடைய ஆவி என்மேல் உள்ளது. ஏனெனில் அவர் எனக்கு அருள் பொழிவு செய்து உள்ளார். ஏழைகளுக்கு நற்செய்தியை அறிவிக்கவும் சிறைப்பட்டோர் விடுதலையும் அடைவர். பார்வை யற்றோர் பார்வை பெறுவர் எனவும் ஒடுக்கப்பட்டோரை விடுதலை செய்து அனுப்பவும் ஆண்டவர் அருள் தரும் ஆண்டினை அறிவிக்கவும் அவர் என்னை அனுப்பியுள்ளார்''.**

**லூக்கா:** 4:18-19

**இயேசு இவ்வுலகிற்கு வந்ததன் நோக்கத்தை தனது பணியின் ஆரம்பத் திலேயே இவற்றை வெளிப்படுத்தினார். இயேசு தனது பணியை நிறைவேற்றும்போதும் சில போதனைகளிலும் அவர் முகம் கொடுத்த சவால்களையும் அவர் அவற்றை எதிர்நோக்கிய முறைகளையும் இப் பாடத்தின் மூலம் ஆராய்ந்து பார்ப்போம்.**

**லூக்கா:** 5:17-39 , 6:1-5, 14,1-6 , 12:1-3, 20:45-47, 6:6-11, 11:37-54, 16:14-17 17:20-21.

இயேசு தனது பணிகளை ஆரம்பிக்கும் வேளையில் பலஸ்தீனா நாட்டு மக்கள் அரசியல் சமூக மற்றும் பொருளாதார ரீதியில் அதிக துன்பங்களை அனுபவித்த காலகட்டமாகும். இது வரையில் 60 ஆண்டுகளுக்கு மேலாக உரோம பேரரசுக்கு வரி செலுத்துவதற்குக் கடமைப்பட்டிருந்தனர். யூத மக்களால் தெரிவு செய்யப்பட்ட வரி அறவிடுபவரர்களால் வரி அறவிடப்பட்டது. அவர்கள் தங்கள் சகோதர மக்களிடையே கரிசனையின்றி வரி அறவிட்டதால் அவர்கள் தேசத்துரோகிகள் என்றும் பாவிகள் என்றும் கருதப்பட்டனர். உரோம ஆட்சியின் கீழ் அதிகாரிகளினால் யூதமக்கள் அனுபவித்த துன்பங்கள் அளப்பரியன.

சமூக ரீதியாக பல்வேறு சமூக சமய மற்றும் அரசியல் குழுக்களாக பிரிவு பட்டிருந்த நிலையில் பல்வேறு பிரச்சனைகளால் பொதுமக்கள் மேலும் துன்பங்களை அனுபவித்தனர்.

பழைய ஏற்பாட்டுக்காலம் முதல் யூதமக்கள் இரு பிரிவுகளாக பிரிந்திருந்தனர். தென்பகுதியில் வாழ்ந்த யூத மக்களால் வடபகுதியில் வாழ்ந்தவர்கள் சமாரியர் என அழைக்கப்பட்டனர் தமது சகோதர மக்கள் பிற இனத்தவரோடு கலந்ததினால் அவர்கள் தூய்மையற்ற மக்கள் என கருதி அவர்களை ஒதுக்கி வைத்தனர். இயேசுவின் காலத்தில் இந்த வேறுபாடு மேலும் அதிகரித்திருந்தது.

உரோம பேரரசின் கீழ் அடிமையாகக் காணப்பட்ட யூதர்களுக்கு சமய சுதந்திரம் அளிக்கப்பட்டு இருந்தது. சமய சுதந்திரத்தை அனுபவித்த யூதர்கள் தமது

சமய பாரம்பரியங்களையும் திருச்சட்டங்களையும் பின்பற்றிய பலஸ்தீனா யூதர்களில் பிரதானமானவர்களாக செயற்பட்டவர்கள் பரிசேயரும், சதுசேயரும் ஆவார்கள். அக்காலத்தில் ''தோரா'' எனும் மோசேயின் நீதிச்சட்டம் நடைமுறையில் காணப் பட்டது. நீதிச்சட்டங்களை சிறப்பாக பின்பற்றுவதற்காக பரிசேயரால் வாய்மொழி நீதிச்சட்டங்களும் சேர்க்கப்பட்டிருந்தன. தோராவின் உள்ளார்ந்த நோக்கத்தை அறிந்து கடைப்பிடிப்பதற்கு பதிலாக அவற்றை வெளியரங்கமாக கடைப்பிடிப்பதற்கு பரிசேயர் முன்வந்தனர். இவற்றை நுணுக்கமாக கடைப்பிடிப்பதில் சாதாரணமக்களும் துன்பத்திற்கு உள்ளாக்கப்பட்டனர். சமய பாரம்பரியங்கள் மற்றும் நீதிச்ச ட்டங்களை மிகவும் கவனமாகப் பாதுகாத்த பரிசேயர் தம்மை நீதிமான்களாக கருதி பெருமைக் கொண்டனர். முற்சந்திகளில் நின்று பிரசித்தமாக விண்ணப்பங்கள் செய்வதுடன், அவர்களின் ஆடையில் திருவசனங்களை எழுதி வைத்திருந்தனர் எனவும் கூறப்படுகின்றது. அவர்கள் தர்மங்களில் ஈடுபடும்போது அதை பலரும் அறிந்துகொள்ளும் வண்ணம் செய்தனர்.

பலஸ்தீனாவில் வாழ்ந்த பிறஇனத்தவரின் பாரம்பரிய பழக்க வழக்கங்கள் தூய்மையற்றவை எனக்கூறி அவர்களிடமிருந்து பிரிந்து வாழ முற்பட்டனர். தமது சமய மற்றும் அரசியல் கருத்துக்களை மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என எப்போதும் செயற்பட்டனர். மறைசட்ட அறிஞர் யூத நீதிச்சட்டங்களை எழுதுவதை யும் கற்பிப்பதையும் பாதுகாத்து வந்தனர்.

இவர்கள் நீதிச்சட்டங்களின் விளக்கவுரையை தயாரித்தார்கள். பரிசேயருக்கும் சதுசேயருக்கும் இடையே சிற்சில முரண்பாடுகள் காணப்பட்டாலும் அவற்றை மறந்து இயேசுவுக்கு எதிராக செயல்பட அவர்கள் ஒன்றிணைந்தனர். அவரின் போதனைகள் அவர்களின் செயல்களுக்கு சவாலாக அமைந்தது.

இயேசு பரிசேயரோடும் சதுசேயரோடும் உரையாடலின் மூலம் நீதிச்சட்டங் களை சரியாக விளங்கப்படுத்துவதற்கும், அவர்கள் அறிந்திருந்த நீதிச்சட்டங்கள் பிற ருக்கு உதவி விளைவிக்க கூடியதாக இருக்கவில்லை என்பதையும் அவர்களுக்கு காண் பிப்பதற்காக அவர்களுடன் உரையாடி விமர்சித்து துன்பங்களுக்கு உள்ளானவர்களின் வாழ்வில் ஆறுதல் அளிப்பதற்காக செயற்பட்ட சில சந்தர்ப்பங்களை ஆராய்வோம்.

**லூக்கா : 5:17-26**

**முடக்குவாதமுற்றவரை குணப்படுத்தல்.**

- இயேசு - **உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன.**

- பரிசேயர் மறைநூல் அறிஞர் - **கடவுளை பழிந்துரைக்கும் இவன் யார்? கடவுள் மட்டுமன்றி பாவங்களை மன்னிக்க யாரால் இயலும்.**

- இயேசு - **''உங்கள் உள்ளங்களில் நீங்கள் எண்ணுகிற தென்ன? உம் பாவங்கள் உமக்கு மன்னிக்கப் பட்டன என்பதா, அல்லது எழுந்து நடக்கவும் என்பதா, எது எளிது? மண்ணுலகில் பாவங் களை மன்னிக்க மானிட மகனுக்கு அதிகாரம் உண்டு என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும்'' என்பதற்காக நான் இவ்வாறு செய்தேன்.**

முடக்குவாத நோய்க்கு காரணம் ஒருவனின் பாவமாகும் என்றும் பாவமன்னிப்பை வழங்கும் வல்லமை இறைவனுக்கு மட்டுமே உண்டு எனவும் அன்றைய யூத சமூகத்தினர் ஏற்றுக்கொண்டு இருந்தனர். எனவே இயேசுவின் வார்த்தைகள் இறைவனுக்கு எதிரானவைகள் என கருதி பரிசேயர் அவர் மீது குற்றம் சுமத்த முயன்றனர்.

ஆனால் நடைபெறும் நல்லவைகள் நல்லதல்ல என விமர்சனம் செய்ய முயற் சித்த செயலுக்கு அனுமதி அளிக்காத இயேசு பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் தமக்கு உண்டு என்பதை எடுத்துக் காட்டினார்.

**லூக்கா : 5:27-32**

பரிசேயர், மறை நூல் அறிஞர் - நீங்கள் வரிதண்டுபவர்களோடும் பாவிகளோடும் சேர்ந்து உண்பதும் குடிப்பதும் ஏன்?

இயேசு - நோயற்றவர்களுக்கு அல்ல நோயுற்றவருக்கே மருத்துவர் தேவை நேர்மையானவர்களை அல்ல பாவிகளையே மனம்மாற அழைக்க வந்தேன்.

பாவிகள் என ஒதுக்கப்பட்ட குழுவினரில் வரி அறவிடுபவர்களில் ஒருவரான லேவியை இயேசு என்னைப் பின்பற்றி வா என அழைத்தபோது அவன் உடனேயே அனைத்தையும் விட்டுவிட்டு அவரைப் பின்பற்றி அவருக்கு வீட்டில் பெரியவிருந்து அளித்தார். பாவி என ஒதுக்கப்பட்ட லேவியை தன்னை பின்பற்றுமாறு அழைத்த

இயேசு அவனுடன் உணவருந்தியமை பரிசேயரின் வெறுப்புக்கு உட்பட்டதாக இருந்தது. சமூகத்தில் சமய தலைவராக இருந்த அவர்கள் பாவிகளை வெறுத்து ஒதுக்காமல் அவர்களை நல்வழிப்படுத்துவதே பரிசேயரின் பொறுப்பாக அமைந்து இருக்க வேண்டுமென்பதை இயேசு எடுத்துக்காட்டினார்.

நீதிச்சட்டம் - நீதி வழிமுறைகள் பாரம்பரியங்கள் ஊடாக நிறைவேற்றப்பட வேண்டும். ஆனால் இயேசு நடைமுறையில் காணப்பட்டவைகளுக்கு சவால் விடுத்து தமது பணிகளை சரியான முறையில் செய்து முடித்தார்.

**லூக்கா 5: 33-39.**
**நோன்பு பற்றிய கேள்வி**

| | |
|---|---|
| பரிசேயர் மறைநூல் அறிஞர் - | இயேசுவே, யோவானுடைய சீடர்கள் அடிக்கடி நோன்பிருந்து மன்றாடி வருகிறார்கள் பரிசேயர்களின் சீடரும் அவ்வாறே செய்கின்றனர். உம்முடைய சீடரோ உண்பதும் குடிப்பதுமாக இருக்கின்றார்கள். |
| இயேசு - | மணமகன் மணவிருந்தினரோடு இருக்கும்வரை அவர்களை நோன்பு இருக்கச் செய்யலாமா? ஆனால் மணமகன் அவர்களை விட்டுப்பிரிய வேண்டிய காலம்வரும் அப்போது அவர்களும் நோன்பு இருப்பார்கள். |

பாரம்பரிய பழக்கங்களுக்கு அடிமைப்பட்டு அர்த்தமில்லாது செயற்படும் வழக்கங்களின் பயனற்ற தன்மையை இயேசு இதன் மூலம் பரிசேயருக்கு எடுத்துக் காட்டினார். கிறிஸ்தவர்களான எம்மால் பின்பற்ற வேண்டிய பலவித சம்பிரதாயங்கள் இருப்பினும் அவை தொடர்ந்து நடைமுறையில் இல்லாமல் அர்த்தமுள்ள குறிக்கோளாக அது நிறைவேற வேண்டிய அவசியத்தை இது எமக்கு விளக்குகின்றது. இயேசு இங்கு தம்மை இறைமகனாக மறைமுகமாக காட்டுகிறார்.

**லூக்கா: 6: 1-5.**
**ஓய்வு நாளை கடைப்பிடித்தல் பற்றிய வினா**

பரிசேயர் மறைநூல் அறிஞர் - ஓய்வு நாளில் செய்யக் கூடாதவைகளை நீங்கள் செய்வதேன்?

இயேசு - தாவீது அரசன் தாமும் தம்முடன் இருந்தவர்களும் பசியாய் இருக்கும்போது தாவீது செய்ததைக் குறித்து நீங்கள் வாசித்தது இல்லையா? அவர் இறை இல்லத் திற்குள் சென்று குருக்கள் மட்டுமே அன்றி வேறு எவரும் உண்ணக்கூடாத அர்ப்பண அப்பங்களை எடுத்து உண்டதுமன்றி தம்மோடு இருந்தவர்களுக்கும் கொடுத்தார். அல்லவா? ஓய்வுநாளும் மானிட மகனுக்கு கட்டுப்பட்டதே.

ஓய்வு நாளை பரிசுத்தமாகக் கடைபிடிப்பது பத்து கட்டளைகளில் ஒன்றாகும். இதனால் வாரத்தில் ஒருநாள் ஒரு வேலையும் செய்யாது சுதந்திரமாக இருப்பதற்கான சந்தர்ப்பம் பணியாளருக்கு கிடைக்கின்றது. ஆனாலும் பரிசேயர் அதனை திரிபுபடுத்திக் காட்டி, ஓய்வுநாளில் எந்தவொரு வேலையையும் செய்தல் ஆகாது என்றும் வேலை செய்தல் நீதிச்சட்டங்களை உடைத்தல் எனவும் அர்த்தப்படுத்தினர். அதனால் இயேசு வின் சீடர்கள் ஓய்வு நாளில் கதிர்களை கொய்து கசக்கி சாப்பிட்ட ஒரு சந்தர்ப்பத்தில் அது தவறு என்று அவர்கள் கண்டனம் செய்தனர்.

மனிதரின் தேவைக்கு முதலிடம் வழங்க வேண்டுமென்பதை இயேசு மீண்டும் ஒரு முறை கவனத்திற்கு கொண்டுவந்தார். அதே போன்று நீதிச்சட்டங்களின் பெயரில் மக்களை ஒடுக்குவதை இயேசு நிராகரித்தார். ''ஓய்வு நாளும் மானிட மகனுக்கு கட்டுப் பட்டதே'' எனக்கூறி தமது மேன்மையான போதனைக்கூடாக வெளிப்படுத்தினார்.

**லூக்கா:14:1-6.**
**ஓய்வு நாளில் நீர்க்கோவை நோயாளி குணமடைதல்.**
**லூக்கா: 6: 6-11.**
**கை சூம்பியவர் ஓய்வு நாளில் நலமடைதல்.**

இயேசு - ஓய்வுநாளில் குணப்படுத்துவது முறையா? இல்லையா?

பரிசேயர் மறைநூல் அறிஞர் - அமைதியாயிருந்தனர்.

இயேசு - உங்களுள் ஒருவன் தம் பிள்ளையோ மாடோ கிணற்றில் விழுந்தால் ஓய்வு நாள் என்றாலும் அதனை உடனே தூக்கி விடமாட்டாரோ?

பரிசேயர் மறைநூல் அறிஞர் - அங்கே இருந்த கை சூம்பியவரை இயேசு சுகப்படுத் துவார் என எண்ணி அவரை குற்றப்படுத்தும் நோக்குடன் எதிர்பார்த்திருந்தனர்.

இயேசு - ''ஓய்வு நாளில் நன்மை செய்வதா? தீமை செய்வதா? ஊயிரை காப்பதா? அழிப்பதா?

இயேசு அவரை குற்றம் சாட்டியவர்களுக்கு நீதிச்சட்டத்தின் அடிப் படையில் பதில் அளித்தது மிக முக்கியமானதாகும். இங்கு இயேசு இறைவார்த்தைகளை வெறும் வார்த்தைகளாக மட்டுமல்ல உள்ளார்ந்த கருத்துடன் விளங்கிக் கொள்ள வேண்டும் எனக்கூறி ஓய்வு நாளில் நன்மை செய்வதா? தீமை செய்வதா? என அவர்களிடமே வினவினார். இதன் மூலம் இயேசு கூறிய அன்பு பற்றிய பொன்விதியை எமக்கு நினைவுபடுத்தி தனது பணியின் அடிப்படையை மேலும் தெளிவுபடுத்தியுள்ளார்.

**லூக்கா: 11:37-54.**
**பரிசேயர் மறைநூல் அறிஞர் கண்டிக்கப்படல்.**

பரிசேயர் - உணவருந்து முன் இயேசு கை கழுவாததைக் கண்டு பரிசேயர் வியப்படைந்தனர்.

இயேசு - பரிசேயரே நீங்கள் கிண்ணத்தையும் தட்டையும் வெளிப்புறத்தில் தூய்மையாக்குகிறீர்கள் ஆனால் உங்களுக்குள்ளே கொள்ளையும் தீமையும் நிறைந்திருக்கின்றன. (லூக்கா: 11:41, 42, 43, 46)

தமது கிண்ணத்தையும் தட்டையும் வெளிப்புறம் கழுவி தூய்மையாக்கல் என்னும் சமய பாரம்பரியங்களில் குறிப்பாக மறைநூல் அறிஞர்கள் கவனம் செலுத் தினார்கள். வெளிப்புற தூய்மையில் மிக கவனம் செலுத்திய அவர்கள் ஆன்மீக தூய்மையை பாதுகாப்பது தொடர்பாக உதாசீனப்படுத்தினர்.

அன்பைப் பொருட்படுத்தாது சமய சடங்காச்சாரத்தில் மட்டுமே கவனம் செலுத்துவது பயனற்றது என்பதை இயேசு வலியுறுத்துவது இங்கு தெளிவாக விளங்கு கின்றது. வெளிப்புற தூய்மையைவிட தான தர்மம் கொடுப்பதன் முக்கியத்துவத்தை இயேசு வெளிப்படுத்தினார். அவர்களுக்கு காணப்பட்ட மிகுந்த உலக ஆசை களிலிருந்து விலகுவதன் அவசியத்தை எடுத்துக்காட்டவே இவ்வாறு கூறினார்.

தாழ்மையின் முக்கியதுவம் பற்றி இயேசு மேலும் கவனம் செலுத்துகின்றார். சாதாரண மக்களுக்கு ஆறுதல் அளிப்பதற்கு பதிலாக சமய பாரம்பரியங்களின் பேரில் அவர்களை துன்பத்திற்கு உட்படுத்துவதை நிராகரித்து ''அன்பின்'' அடிப்படையில் செயற்படும் முறைகளை இயேசு விளங்கப்படுத்தினார்.

**லூக்கா :16 : 14 -17**
**திருச்சட்டமும் இறையாட்சியும்.**
**லூக்கா :17 : 20 -21**
**இறையாட்சி வருதல்**

இயேசு - **நீங்கள் மக்கள் முன் உங்களை நேர்மையாளராக காட்டிக்கொள்கிறீர்கள் கடவுள் உங்கள் உள்ளங்களை அறிவார். நீங்கள் உங்களை மக்கள் முன் உயர்ந்தவர்களாக காட்டிக் கொள்வது கடவுள் பார்வையில் அருவருப் பாகும்.... ஆனால் திருச்சட்டத்திலுள்ள ஓர் எழுத்தின் கொம்பு அழிவதை விட விண்ணும் மண்ணும் ஒழிவது எளிதாகும்.**

பரிசேயர்- **இறையாட்சி எப்போது வரும்?**

இயேசு- **இறையாட்சி கண்களுக்கு புலப்படும் முறையில் வராது. இதோ இங்கே! அதோ அங்கே! எனச் சொல்லமுடியாது. ஏனெனில் இறையாட்சி உங்கள் நடுவிலே.**

இவ்வாறு அவர்கள் தம்மை மேன்மை பாராட்டி வெளிப் புற உலகின் முன்னால் தம்மை நீதிமான்களாகக் காண்பித்தாலும் இறைவனுக்கு முன்னால் அவர்களது உள்ளத்தை மறைக்க முடியாது என்பதை இயேசு எடுத்துரைத்தார்.

ஆனாலும் இயேசு திருச்சட்டத்திற்கு எதிராக செயற்படுகிறார் எனக் கூறி அவரைக் குற்றப்படுத்த முயற்சி செய்தனர். அவர் திருச்சட்டத்திற்கு எதிராக செயற்படவல்ல அதனை நிறைவு செய்யவே வந்தேன் எனக்கூறியதுடன் திருச் சட்டத்தின் சிறு துளியைத்தானும் அழிப்பதற்கு மேலாக விண்ணும் மண்ணும் ஒழிவது இலகுவானது என கூறினார். ''ஓய்வுநாள் மனிதருக்காகவே அன்றி மனிதன் ஓய்வு நாளுக்காக அல்ல'' என இயேசு கூறினார். திருச்சட்டம் மனிதனின் நன்மைக்காக அன்றி மனிதனை துன்பத்திற்கு உள்ளாகுவதற்கு அல்ல. அவர்கள் திருச்சட்டங்களை நன்கு அறிந்து அதைக் கற்றிருந்தாலும் அதனை பிறருக்கு நன்மை தரும் முறையில் அல்ல. அவர்களை அவமானப்படுத்துவதற்கு பாவித்த பரிசேயர் மற்றும் மறைநூல் அறிஞரையும் இயேசு குற்றப்படுத்தினார்.

இவ்வாறாக பரிசேயர் மற்றும் மறைநூல் அறிஞரின் செயல் ஒழுங்குமுறைகளை இயேசு கடினமாக விமர்சித்து உரையாடலின் மூலம் அவர்களுடன் ஒன்றாக உணவருந்திய சம்பவத்தை அறிய முடியும். இதிலிருந்து இயேசு பாவத்தை வெறுத்து பாவிகளை நேசிக்கிறார் என்பது தெளிவாகின்றது.

இவ்வாறு கிறிஸ்தவ வாழ்வின் நன்மைக்காக இயேசுவுக்கும் பரிசேயருக்கும் மறைநூல் அறிஞர்களுக்கும் நடந்த உரையாடலின் மூலம் எமது வாழ்வில் சேர்த்துக் கொள்ளக்கூடிய குணாதிசயங்களின் சாராம்சம்.

- இறை வார்த்தையை வார்த்தையாக மட்டுமல்ல அர்த்தமுள்ளதாக கருத்திற் கொள்ள வேண்டியது என்பது
- உலகத்துக்கு வெளிப்படுவதுபோல வெளிப்படையான பாரம் பரியங்களால் அல்ல எமது உள்ளத்தில் ஆன்மீக ரீதியாக செயற்பட வேண்டும் என்பது
- இறையரசின் செய்தியானது அன்பின் அடிப்படையாகும் என்பது
- தாழ்மையாக செயற்படுவது கிறிஸ்தவ வாழ்வில் தொடர்ந்து வெளிப்பட வேண்டும் என்பது
- கடவுளுக்கும் உலக செல்வத்திற்கும் ஒரே முறையில் பணி செய்யமுடியாது என்பது
- நாம் தவிர்க்க வேண்டியது பாவத்தை மட்டுமே பாவியை அல்ல என்பது
- இறையரசின் பெறுமதியை எம்மிடையே கட்டி எழுப்ப வேண்டும் என்பது

**செயற்பாடு**

நீதிச்சட்டம், சட்டதிட்டம், சம்பிரதாயம் என்பவை மனிதனின் நன்மைக்காக அன்றி மனிதனை துன்பத்திற்கு உள்ளாக்குவதற்கு அல்ல என இயேசு வெளிப்படுத்திய முறையை உதாரணங்களுடன் விளக்குக.

# 11 சவால்களின் மத்தியில் பணி

**மூன்று வருடகாலமாக அர்ப்பணிப்புடன் செயற்பட்ட இயேசு பல்வேறு சவால்களையும், பிரச்சினைகளையும் எதிர் நோக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இயேசு பரிசேயர் மற்றும் மறைநூல் அறிஞர்களின் சவால்களை வெற்றிகரமாக எதிர் நோக்கியதுடன் அவற்றால் எமக்கு கிடைக்கும் முன்னுதார ணங்களையும் முதல் பாடத்தில் ஆராய்ந்தறிந்தோம்.**

**இப்பாடத்தில் இயேசுவுக்கு அக்காலத்தில் சதுசேயரின் சவால்களையும் இயேசுவின் மறுமொழியையும் அதனால் நாம் கற்றுக்கொள்ளும் முன்னுதாரணங்களையும் விரிவாக பார்ப்போம்.**

**லூக்கா** 20: 1-40

*புதிய ஏற்பாட்டு காலத்திற்கு முன்னர், அரசன் அலெக்சாந்தர் அவரது கிரேக்க போர்வீரர்களால் பலஸ்தீனா நாட்டை பிடித்து கிரேக்க கருத்துக்களை யூதருக்கு பரப்புவதற்கு முயற்சி செய்தான். சதுசேயர் அக் கருத்துக்களை ஏற்று பின்பற்றி வந்தனர். 'சாதோக்' வழி மரபின் சதுசேயர் எனும் பெயரை பயன்படுத்தி எருசலேமில் சில செல்வந்த குடும்பத்தினர் வாழ்ந்து வந்தனர். தலைமை குருக்களும் மூப்பர்களும் அவர்களிடமிருந்து இருந்து தெரிவு செய்யப்பட்டனர். தலைமைத்துவ பதவி அவர்களது குடும்ப அங்கத்தவர்களுக்கு மட்டுமே கிடைக்கும் வண்ணம் சதுசேயர் செயற்பட்டனர். தலைமைக் குருவை நியமனம் செய்வதற்காக உரோம பேரரசின் அனுமதி தேவைப்பட்டது. உரோம பேரரசை விரும்பாது இருப்பினும் உரோம ஆட்சியில் மகிழ்வடையும் வண்ணம் செயற்படுதல் நன்று என எண்ணி சதுசேயர் செயல்பட்டனர். பலஸ்தீனா நாட்டில் காணப்பட்ட தொழுகைக் கூடங்கள் பலஸ்தீனியரின் மத்திய நிலையமாக செயற்பட்டு வந்ததுடன் எருசலேம் ஆலயம் சதுசேயரின் மையமாக இருந்து வந்தது. உரோம பேரசுக்கு எதிராக காலத்துக்கு காலம் எழுந்து நின்ற குழுவினரை தடுப்பதற்கு சதுசேயர் உரோம அரசுக்கு உதவி புரிந்தனர். அது அவர்களது நிலைப்பாட்டில் அதிகாரத்தைப் பாதுகாப்பதற்காகவே அவ்வாறு செய்து வந்தனர்.*

**பாரம்பரிய மரபுவழி கருத்துக்களுக்கு அதிகமாக அடிமைப்பட்டிருந்த இந்த சமய குழுவினரை அறிந்து கொள்வதற்கான முக்கிய சில பண்புகள் பின்வருமாறு,**

- ♦ *பரிசேயர் வாய்மொழி பாரம்பரிய நீதி சட்டங்களை ஏற்றுக் கொண் டனர். ஆனால் சதுசேயர் மறைநூல் அறிஞர்களால் எழுதப்பட்ட எழுத்து நீதிசட்டத்தை மட்டுமே பின்பற்றினர்.*

- ♦ *வானதூதர் மற்றும் உயிர்த்தெழுதல் குறித்து பரிசேயரின் கருத்துக்களை சதுசேயர் ஏற்றுக் கொள்ளவில்லை.*

- ♦ *திருமுழுக்கு யோவானின் போதனைகளில் மக்கள் நம்பிக்கை கொண் டிருப்பதை சதுசேயர் அறிந்திருந்தாலும் அவர்கள் அவரின் போதனை களை கேட்பதற்கு ஆயத்தமாக இருக்கவில்லை.*

*இதற்கேற்ப சதுசேயரின் சமய மற்றும் அரசியல் கொள்கைகள் தமது நலனுக்காகவே திட்டமிடப்பட்டுள்ளது என்பது தெளிவாக விளங்குகின்றது. சது சேயருக்கு இயேசு தமது அதிகாரத்துக்கு எச்சரிக்கையாக காணப்பட்டார் ஏனெனில் அவர் எருசலேமிற்கு சென்ற எல்லா சந்தர்ப்பங்களிலும் மக்களுக்கு போதனை செய்து இறையரசின் நற்செய்தியை போதித்தார். இயேசுவின் போதனைகள் சதுசே யரின் மனப்பான்மைக்கும் செயற்பாட்டு கொள்கைகளுக்கும் ஏற்ப ஒத்துப்போக வில்லை. எனவே அவர்கள் இயேசுவின் அதிகாரத்திற்கும் போதனைகளுக்கும் எதிராக செயற்பட்டனர்.*

**லூக்கா 20: 1- 8**
**இயேசுவின் அதிகாரத்திற்கு சவாலாக வினவுதல்**

## அவ்வாறான சந்தர்ப்பங்கள் 3 ஐ பார்ப்போம்.

*இயேசு மக்கள் புடைசூழ அரசராக எருசலேமுக்குள் நுழைந்தார். அவர் கோவிலுக்குள் சென்று அங்கு விற்பனை செய்து கொண்டிருந்தோரை துரத்தினார்.* **''என் இல்லம் இறை வேண்டலின் வீடு நீங்கள் இதை கள்வர் குகையாக்கினீர்கள்''** *என்று கூறி இயேசு ஆலயத்தைத் தூய்மைபடுத்தினார். அதன் பின்னர் சதுசேயர் இயேசுவிடம் வினாவத் தொடங்கினார்.*

**''எந்த அதிகாரத்தால் நீர் இவற்றைச் செய்கிறீர்? இந்த அதிகாரத்தை உமக்கு கொடுத்தவர் யார்? எங்களுக்குச் சொல்லும் என தலைமைக் குருக்களும் மறைநூல் அறிஞர்களும் மூப்பர்களும் அவரிடம் வினவினர்''**

*சதுசேயரின் அதிகார பலம் நிறைந்த மத்திய நிலையமான ஆலயத்தினுள்*

அவர்கள் வேறு ஒருவரின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என இயேசு அறிந்திருந்தார். இயேசு அவர்களது வினாவுக்கு மறுமொழி கூறுவதற்கு பதிலாக அவர் ஒரு வினாவை முன்வைக்கின்றார்.

இயேசுவினால் வினாவப்பட்ட திருமுழுக்கு கொடுக்கும் அதிகாரம் யோவானுக்கு விண்ணிலிருந்து வந்ததா? மனிதரிடத்திலிருந்து வந்ததா? என்ற வினாவுக்கு எந்த பதிலும் அளிக்கவில்லை . ''எங்கிருந்து வந்தது எனத் தெரியாது'' என்று பதிலுரைத்தனர். அதற்கு இயேசுவும் அவர்களிடம் எந்த அதிகாரத்தால் அவற்றை செய்கிறேன் என நானும் உங்களுக்கு கூற மாட்டேன் என்றார். கோவிலில் மக்கள் முன்னிலையில் இவ்வாறு பின்னடைதலுக்கு உள்ளாக்கப்பட்டமையை சதுசேயரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

கடின உள்ளம் கொண்ட சதுசேயர், இயேசுவின் பணியை விளங்கிக் கொள்ளமாட்டார்கள் என்பதை இயேசு நன்கு அறிந்திருந்தார். இதுவரையில் இயேசு தாம் இறைமகன் என பல சந்தர்ப்பங்களில் வெளிப்படுத்திய போதிலும் அதனை எவரும் விளங்கி கொள்ளவில்லை. அதனை ஏற்றுக்கொள்ளவும் அவர்கள் ஆயத்தமாக இருக்கவில்லை. தமது அதிகாரத்திற்கு இயேசுவை ஒரு அச்சுறுத்தலாகவே சதுசேயர் பார்த்தனர். ஏனெனில் இயேசுவின் போதனை சதுசேயரின் செயற்பாட்டுடன் முரண்பட்டதாக இருந்தது. எனவே இயேசுவின் அதிகாரத்தையும், போதனையையும் சதுசேயர்கள் குறைவாக மதிப்பிட்டனர். அவ்வாறான சந்தர்ப்பங்கள் மூன்றைப் பற்றி பார்ப்போம்.

## லூக்கா 20 : 9 -18
## திராட்சை தோட்ட குத்தகைகாரர் உவமை

இவ் உவமையில் கூறப்பட்டுள்ளது போன்று ஒருவர் திராட்சை தோட்டத்தை தனது தொழிலாளரிடம் குத்தகைக்கு விட்டு நெடும் பயணம் சென்ற சம்பவமானது இறைவன் உலகை படைத்து மனிதரிடம் ஒப்படைத்தலுக்கு ஒப்பிடலாம்.

தோட்ட உரிமையாளரால் அனுப்பப்பட்ட பணியாளரை, மக்களின் தவறுகளை எடுத்துரைத்து மீட்பின் வழியைக் காண்பிக்க அனுப்பப்பட்ட இறைவாக்கினருக்கு ஒப்பிடலாம். தோட்டப் பணியாளர்களினால் கொலை செய்யப்பட்ட தோட்ட உரிமையாளரின் மகனை, மக்களால் கொலை செய்யப்பட்ட இறைமகன் இயேசுவுக்கு ஒப்பிடலாம்.

இறுதியாக மனிதரைப் பாவத்திலிருந்து மீட்பதற்கு இறைவன் தனது ஒரே மகனை உலகிற்கு அனுப்பினார். திராட்சைத் தோட்ட உரிமையாளரின் மகன் தொழிலாளரால் சிலுவையிலறைந்து கொல்லப்பட்டார். என உவமையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**உவமையின் பொருளை மேலோட்டமாக விளங்கி கொண்ட சதுசேயர் ''ஐயோ! அப்படி நடக்க கூடாது'' என்றனர். உவமையின் உட்பொருளை அவர்களால் அறிந்து கொள்ள முடியாமல் இருந்தது. இயேசு அவர்களை நோக்கி ''கட்டுவோர் புறக்கணித்த கல்லே கட்டடத்துக்கு தலைக்கல் ஆயிற்று'' என்றார் சதுசேயரால் வெறுக்கப்பட்ட அவர் வெளிப்படும் நாள் அதிக துரத்தில் இல்லை என்பதை இயேசு அறிந்திருந்தார். அதேபோன்று அவரை மறுத்து குற்றம் காண்போரைப் பற்றி இயேசு விளக்கமாக கூறுகின்றார்.**

**லூக்கா 20 : 19- 26**
**சீசருக்கு வரி செலுத்துதல்**

மறைநூல் அறிஞர்களும் தலைமைக் குருக்களும் தங்களைக் குறித்தே அவர் இந்த உவமையை சொன்னார் என்பதை உணர்ந்து அவர்கள் இயேசுவை பிடிக்க வழி தேடினார்கள். அவரது பேச்சில் குற்றம் காண ஒற்றர்களை அனுப்பி வைத்தார்கள். ஒற்றர்கள் ''சீசருக்கு நாம் வரி செலுத்துவது முறையா இல்லையா? என்று கேட்டார்.

சீசருக்கு வரி செலுத்தலாம் என இயேசு மறுமொழி கூறினால் இயேசுவுக்கு எதிராக மக்கள் எழுவார்கள். இதுவரையில் இருவகையான வரிகளைச் செலுத்தி மக்கள் அதிக துன்ப நிலையை அடைந்திருந்தனர். மாறாக ''வரி செலுத்த வேண்டாம்'' என இயேசு கூறினால் உரோம பேரரசுக்கு எதிராக செயற்படுகின்ற புரட்சியாளர் என குற்றம் சாட்டி அவரை காட்டிக் கொடுப்பது இலகுவாக இருக்கும் என எண்ணினர்.

இரு வகை வரிகளை அக்கால மக்கள் செலுத்தினர். இங்கே உரோம பேரரசுக்கு வரி செலுத்த சீசருடைய உருவம் பொறிக்கப்பட்ட தெனாரியம் பயன்படுத்தப்பட வேண்டும். ஆனாலும் கோவிலுக்கு வரி செலுத்தும்போது செம்பு நாணயம் பயன்படுத்த வேண்டும். ஏனெனில் உருவம் பொறிக்கப்பட்ட நாணயத்தை உபயோகித்து கோவிலுக்கு வரி செலுத்துதல் நீதிச்சட்டத்தில் தடை விதிக்கப்பட்டிருந்தது.





இங்கு 'தெனாரிய' நாணயத்தை இயேசு கையில் எடுத்து இதில் பொறிக்கப்பட்டுள்ள உருவமும் எழுத்தும் யாருடையது என்று மக்களிடம் வினவினார். மக்கள் சீசருடையது என்று மறுமொழி அளித்தனர். ''அப்படியானால் சீசருக்கு உரியவற்றை

சீசருக்கும் கடவுளுக்கு உரியவற்றை கடவுளுக்கும் கொடுங்கள்.'' என்று மறுமொழி கூறினார். மக்கள் முன்னிலையில் இயேசுவின் பேச்சில் அவர்களால் குற்றம் காண இயலாமல் வியப்புற்றார்கள்.

இதன் மூலம் இறையரசை எந்தவொரு உலக அரசுக்கும் ஒப்பிடமுடியாது என்பதை இயேசு வெளிப்படுத்தினார். இறைவனுடையதை இறைவனுக்கு கொடுங்கள் என்பதில் எமது முழு வாழ்வும் அவருக்கு பணி புரிதல் என்பதை வெளிப் படுத்துகின்றது. ஆனால் உலக அரசுக்காக செய்ய வேண்டியதை செய்யாமல் இருக்க கூடாது என்பதும் இங்கு முன்வைக்கப்படுகின்றது.

**லூக்கா** 20 : 27- 40

**உயிர்த்தெழுதல் பற்றிய கேள்வி**

இயேசுவின் போதனை தமது போதனைகளுக்கு எதிரானது என்பதை உறுதிப்படுத்தும் நோக்குடன் சதுசேயர் அவரிடம் பல வினாக்களை வினவினர். ஆனால் அவர்கள் மேலும் வினவுவதற்கு இடமளிக்காது இயேசு மறுமொழி அளித்தார்.

இயேசு மரணத்திலிருந்து உயிர்தெழுதல் பற்றி குறிப்பிட்டாலும் சதுசேயர் உயிர்த்தெழுதலை மறுத்தனர். உயிர்த்தெழுதலைப் பற்றிய விசுவாசத்தை பகிடியாக எண்ணி, மக்களின் உள்ளத்தில் சந்தேகத்தை ஏற்படுத்தும் நோக்கில், ''ஏழுபேரின் மனைவியான பெண்ணைப் பற்றி வினவினர். அப்போது இயேசு சதுசேயரின் சவாலை எதிர்நோக்கி உயிர்த்தெழுதல் பற்றிய நம்பிக்கையை மேலும் வலுப்படுத்தினார்.

அதற்கேற்ப,

எமது இவ்வுலக வாழ்வும் மரணத்துக்கு பின்னரான நிலைவாழ்வும் ஒன் றிலிருந்து ஒன்று வேறுபட்டது என்பதை நாம் விளங்கிக்கொள்ளலாம்.

உயிர்த்தெழுதல் இறைவனால் கிடைக்கும் வரம். அந்த வரத்தைப் பெறுவோர் வானதூதரைப் போல் இருப்பர். அவர்கள் உயிர்த்தெழுந்த மக்களாய் இருப்பதால் அவர்கள் கடவுளின் மக்கள் ஆக்கப்படுவர். மோசே ஆண்டவரை ''ஆபிரகாமின் கடவுள், ஈசாக்கின் கடவுள், யாக்கோபின் கடவுள்'' என்று கூறியிருக்கின்றார். (மோசே யைப் போன்றோரும் ஏற்றுக் கொள்ளப்பட்ட நீதிச்சட்டங்களின் எழுத்தாளர்களே). சதுசேயர் நீதிச்சட்டங்களை ஆக்கியோர் மோசே என ஏற்றுக் கொண்டிருந்தார்.

**இயேசு தமது பணியின்போது ஏற்பட்ட சவால்களைப் போன்று அவரைப் பின்பற்றும் எங்களுக்கும் அவ்வாறான சவால்களை எதிர்நோக்க வேண்டிய நிலை ஏற்படும்.**

★ உண்மையான வினாக்கள் மற்றும் உண்மையற்ற வினாக்களையும் தவறின்றி அறிந்து பொருத்தமான மறுமொழி அளித்தல்.
★ கபடமற்றவர்கள் போன்று நடிக்கும் கபடமுள்ள நபர்களிடம் கவனமாக இருத்தல்.
★ எமது விசுவாசத்தை சவாலுக்கு உட்படுத்துவதற்காக உருவாக்கப்படும் வினாக் களை எம்மிடம் வினவும்போது கவனமாயிருத்தல்.
★ இயேசு இறைவன் என்பதை விசுவாசத்து அனைத்து சவால்களையும் எதிர் நோக்கி பணி செய்தல் ஆகும்.

**செயற்பாடு**

1. i. ''எனது இல்லம் இறைவேண்டுதலின் இல்லமாகும்''.
   ii. ''சீசருக்குரியதை சீசருக்கும் கடவுளுக்குரியதை கடவுளுக்கும் கொடுங்கள்'' இவற்றின் பொருள்களை விளக்குங்கள்.

2. எமது விசுவாசம் தளர்ந்துபோகும் சந்தர்ப்பங்கள் மூன்றை சுருக்கமாக விவரிக்கவும்.

# 12 சவால்களின் மத்தியில் அமைதி

**மண்ணுலகில் மக்களின் நிலையான விடுதலைக்காக இறை யரசை அறிமுகம் செய்து அன்று யூத சமூகத்தில் துன்புறும் மக்களின் ஆறுதலுக்காகவும் மீட்பை பெற்றுக் கொடுப்பதற்கும் இயேசு தமது உயிரை தியாகம் செய்து இறை திட்டத்துக்கு ஏற்ப செயற்பட்டார். அதற்கேற்ப அவரது தியாக பலியின் அண்மித்த காலத்தில் இடம் பெற்ற முக்கிய நிகழ்வுகளை வரிசைப்படுத்தி அதனூடாக எமது வாழ்வுக்கு ஏற்படும் சவால்களை ஆராய்ந்து அறிவதே இப் பாடத்தில் எதிர்பார்க்கப்படுகின்றது.**

**லூக்கா** 19 : 28 -48, 22 : 1 -23

**லூக்கா 19 : 28 -40**
**வெற்றி ஆர்ப்பரிப்போடு இயேசு எருசலேமில் நுழைதல்**

இறுதியாக எருசலேமுக்கு சென்ற இயேசு தமது பணி வாழ்வில் தீர்மானம் எடுப்பதற்காக இறுதி சில நாட்கள் என்பதை அறிந்திருந்தார். இனி இடம் பெறவிருக்கும் அனைத்து துன்பங்களோடு மரணமும் ஏற்படும் என்பதை அவர் அறிந்திருந்தார். இவைகள் அனைத்தும் இறை திட்டத்துக்கு ஏற்பவே இடம் பெற்றது என்பது தெளிவாக விளங்குகின்றது.

அரசனாக வெற்றியுடன் எருசலேமில் நுழைந்ததும் இயேசு இதுவரை யாரும் அமராத ஒரு கழுதைக்குட்டியைக் கொண்டு வருமாறு இரு சீடர்களை அனுப்பினார். அதன் உரிமையாளர் கேட்கும் வினாவையும் அளிக்க வேண்டிய மறுமொழியையும் ஏற்கனவே திட்டமிடப்பட்டவாறே நிகழ்ந்தது. (செக்கரியா 9 : 9) இறைவாக்கில் முன்பே இந்நிகழ்வு குறிப்பிடப்பட்டுள்ளது.

**இந் நிகழ்வில் இரு பிரிவினரால் ஏற்பட்ட சவால்களை அறிந்து கொள்ள முடியும்.**

1. **மக்களால் ஏற்பட்ட சவால்**

அவர்களது விடுதலைக்காக வருவார் என எதிர்பார்க்கப்பட்ட ''மெசியா'' இயேசு என அறிந்து அவரை மக்கள் மகிழ்ச்சி ஆரவாரத்தோடு அழைத்து வந்தனர்.

## 2. யூத மதத் தலைவர்களால் ஏற்பட்ட சவால்

இயேசுவின் வாழ்க்கை, போதனைகளின் விளைவாக, யூத மதத் தலைவர்கள் தமது அதிகாரத்துக்கும் மேலான அதிகாரம் கொண்ட ஒருவர் வந்துவிட்டாரா என சந்தேகம் கொண்டனர்.

ஆனால், இயேசுவின் நோக்கம் இம்மத பிரிவினரின் நோக்கமாக இருப்பின் அவர் கழுதைக்குட்டி மீது அல்ல குதிரையின் மீது ஏறி பயணம் செய்திருக்க வேண்டும். ஏனெனில் குதிரை வீரத்தின் அடையாளமாகவும் கழுதை தாழ்மையின் அடையா ளமாவும் கருதப்பட்டது.

இங்கு மக்களின் நடத்தை தொடர்பாக பரிசேயர் கூறிய குற்றச்சாட்டுக்களை மறுத்து பொருத்தமான பதிலை கூறிய இயேசு இறையரசின் அடிப்படையான சமாதானத்தை அடையாளமாக பிரதிபலிக்க செய்தார். அந்த சமாதானத்தின் அடிப்படையில் சகோரதத்துவத்துடனும் ஒருமைப்பாட்டுடனும் வாழ்வதற்கு எமக்கு கிடைக்கும் வழிகாட்டல் ஆகும். அதுமட்டுமல்ல எருசலேமில் வாழ்வோரின் உரிய விடுதலை பற்றி அறிந்திராமையால் எருசலேமில் இடம்பெறும் ஆபத்துக்களை குறித்த இறைவாக்குகளுக்காக அழுதார் என்பது இதன் மூலம் விளங்குகின்றது.

**லூக்கா 19 : 45 - 48**
**இயேசு கோவிலைத் தூய்மையாக்குதல்**

தமது பணியைப் போன்று தமது வாழ்விலும் இறுதி நாட்கள் கிட்டியுள்ளது என்பதை இயேசு அறிந்திருந்தார். அரச மகிமையோடு எருசலேமுக்குள் நுழைந்த இயேசு எருசலேமுக்காக அழுது வேதனையுடன் கோவிலை தூய்மையாக்கும் பணியில் ஈடுபட்டார். ஆனால் அவர் 'ரபீ' என்று அழைக்கப்படும் போதகராக செயற் பட்டபோது முன்னர் ஆலயத்துக்கு சென்று அங்கு காணப்பட்ட தீமையான சூழலை நன்கு அறிந்திருந்தார். இங்கு சமய தலைவர்கள் தமது தனிப்பட்ட நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக நீதிச்சட்ட திட்டங்களை தங்களுக்கு ஏற்றவாறு தயாரித்து சமயத்தினூடாக மக்களை வஞ்சித்து / சுரண்டி வாழ்வதில் ஈடுபட்டிருந்தனர். ஆலயத் தினுள்ளும் கூட வஞ்சகமான வியாபாரங்களில் ஈடுபட தயங்கவில்லை. இவ்வாறாக ஆலயத்தில் நிகழக்கூடாத நிகழ்வானது இயேசுவுக்கு புதிய அனுபவமுல்ல என்றாலும் இவ்வேளையில் இயேசு ''என் இல்லம் இறை வேண்டலின் வீடு. ஆனால் நீங்கள் இதைக் கள்வர் குகையாக்கினீர்கள்'' என அவர்களுக்கு அறைகூவல் விடுத்தார். இயேசு கோவிலை தூய்மையாக்கிய பணியை செய்தது மட்டுமல்ல இறைவனின் புனித்தன்மையை கருத்தில் கொள்ளாது செயற்பட்ட யூத மக்களை தட்டி எழுப்பி அவரது அடையாளச் செயலாக செய்தார் என்பது தெளிவாகின்றது.

எமது இறை இல்லம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கு முன்னுதாரணமான இந் நிகழ்வை அவர் இதன் மூலம் வெளிப்படுத்தினார்.

**லூக்கா 22 : 1-6**
**இயேசுவைக் கொலை செய்ய சதித்திட்டம்**

இயேசு இறையரசின் பணியின்போது சீடர்களை தெரிவு செய்ததுடன் அனைவரும் ஒரே நோக்குடன் செயற்படுகின்றனர் என்பதை காணமுடியாமல் இருந்தது. சீடர்கள் பல சந்தர்ப்பங்களில் கூறியவைகளும் மற்றும் அவர்களது நடத்தைகள் இதனூடாக விளங்கிக்கொள்ள கூடியதாக இருந்தது. அவர்கள் இயேசுவின் போதனைகளை வேறுவிதமாகவே புரிந்து கொண்டிருந்தனர். ''இவற்றில் எதையும் அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. அவர் கூறியது அவர்களுக்கு மறைபொருளாக இருந்தது. ஏனெனில் அவர் சொன்னது என்னவென்று அவர்களுக்கு தெரியவில்லை'' (லூக்கா 18 : 34) என குறிப்பிடப்பட்டுள்ளது.

*யூதாஸ் இயேசுவைக் காட்டிக் கொடுப்பதற்கான காரணம் என்ன?*
*பணத்தின் மீது ஏற்பட்ட ஆசை காரணமா?*

உரோம பேரரசுக்கு எதிராக இயேசு தலைமைத்துவத்துடன் உருவாக்கப் படும். அரசின் பதவிகளுக்கான எதிர்பார்ப்புடன் சீடர்களும் இருந்தனர். ஆனாலும் இயேசு இக்காலத்தில் கூறிய வார்த்தைகளும் அவரது நடத்தையும் அவர்களது எதிர்பார்ப்புகளுக்கு கேள்விக்குறிகளை உருவாக்கியது. உதாரணமாக அரசராக எருசலேமில் கழுதையின் மீது அமர்ந்து சென்ற நிகழ்வு.

உரோம பேரரசுக்கு எதிராக போராடும் ஆசைகள் அவருக்கு இருக்கவில்லை என்பது பிரபலமாகியது. மக்களின் எதிர்பார்ப்பும் அதுவாக இருக்கவில்லை. இதனால் இயேசுவின் பிரபல்யம் மறைந்து தனது எதிர்பார்ப்புக்கள் யாவும் இல்லாமல் போகுமென யூதாஸ் நினைத்திருப்பான். அது அவ்வாறே இடம் பெற்றது ''ஓசன்னா'' என உரத்து கூறி இயேசுவை அரசராக எருசலேமுக்கு ஊர்வலமாக அழைத்து வந்த மக்கள் அவரை சிலுவையில் அறையுமாறு உரத்து சத்தமிட்டார்கள்.

மக்களின் மத்தியில் இயேசுவின் மகத்தான பிரபல்யத்தை அனுபவத்தில் கண்டிருந்து யூதாஸ் அவரை காட்டிக் கொடுத்து அவனுக்கு இவ்வாறான முடிவு ஏற்படாது தவிர்க்கமுடியும் என விசுவாசம் கொண்டிருக்கலாம். ஆனால் முன்னைய இறைவாக்குகளை முழுமைப்படுத்த முன்வந்த இயேசுவை பற்றி கூறப்பட்ட இறைவாக்குகள் நிறைவேறும் வகையில் அவர் காட்டிக் கொடுக்கப்பட்டார்.

நாம் இயேசுவின் சமுகத்தில் இணைந்து இறையரசை உரிமையாக்கிக் கொள்வதே எமது ஒரே எதிர்பார்ப்பாகும். (வேறு வெளிப்புற உலக நோக்குகளுடன் அல்ல) அதனால் அவரது போதனைகளை கற்று சரியாக அவற்றை விளங்கி கொள்வதே எம் முன்னால் காணப்படும் பிரதான சவாலாகும்.

**லூக்கா 22 : 14 -23**
**ஆண்டவரின் இறுதி திருவிருந்து**

'பாஸ்கா' எனப்படும் புளிப்பில்லாத அப்ப விழாவை யூதர் வருடந்தோறும் விசேடமாக கொண்டாடினர். இறைவனால் இஸ்ரயேல் மக்கள் எகிப்திய அடிமைத் தனத்திலிருந்து மீட்டதற்காக நன்றி செலுத்தும் தினமாகும்.

தற்போதைய சமுக பாரம்பரியங்களை பொருளுள்ளதாக பின்பற்றிய இயேசு, பஸ்கா விழாவை, அவரது பணியின் விசேட தீர்மானம் எடுப்பதற்கு முக்கிய சந்தர்ப்பமாக ஆயத்தப்படுத்தினார். அதேபோன்று அனைத்தும் இறைதிட்டத்துக்கு அனுகூலமாக திட்டமிட்டப்படி நிகழும் என பாஸ்கா விழா ஏற்பாடு செய்தல் என்பதிலிருந்து விளங்குகின்றது.

**(லூக்கா 22 : 7-13)**

பாஸ்கா விழா சந்தர்ப்பத்தை அடிப்படையாகக் கொண்டு இயேசுவால் அப்பம் பிட்குதல் எனும் விசேட செயல் இடம்பெற்றது. அந்த செயற்பாட்டால் மூன்று முக்கியத்துவங்களை காணலாம்.

முதலாவதாக இயேசுவால் நடாத்தப்பட்ட பாரம்பரிய சமுக பழக்க வழக்கங்களுக்காக உதவி புரிந்தன.

இரண்டாவதாக தமது சகோதர சீடர்களுடன் அது இடம்பெறுவதற்கு வழிகாட்டும் சகோதரத்துவத்தைக்கும் ஒத்துழைப்புக்கும் முன் மாதிரியாகும்.

மூன்றாவதாக அவரது இறையரசு பற்றி இதுவரை இடம்பெற்ற இறைபோதனை இந்த செயல் நிகழ்வால் உள்ளடக்கப்படுதல்.

இந்த சந்தர்ப்பத்தில் இயேசு அப்பத்தை எடுத்து கடவுளுக்கு நன்றி செலுத்தி, அதைப் பிட்டு அவர்களுக்கு கொடுத்து ***''இது உங்களுக்காக கொடுக்கப்படும் எனது உடல் எனது நினைவாக இதை செய்யுங்கள்''*** என்றார்.

பின்பு அவர் கிண்ணத்தை எடுத்து **''இந்தக் கிண்ணம் உங்களுக்காக சிந்தப்படுகின்ற எனது இரத்தத்தால் நிலைப்படுத்தப்படும் புதிய உடன்படிக்கை''**

யூத பாஸ்கா விருந்து வேளையில் ஒருவருக்கு திராட்சைப்பழக் கிண்ணங்கள் நான்கு வழங்கப்படும். ஆனால் இயேசு ஒரே அப்பத்தைப் பிட்டுப் பகிர்ந்து கொண்டதோடு ஒரே கிண்ணத்தில் அருந்துமாறு செய்தார்.

அதுமட்டுமல்ல அவரை நினைவு கூறும் வண்ணமாக அதனை தொடர்ந்தும் செய்யுமாறு அறிவுறுத்தினார். இந் நிகழ்வில் இயேசுவின் மூலமாக கிறிஸ்தவராகிய நாம் கவனத்தில் கொள்ள வேண்டியவைகள்,

- ஒரு அப்பத்தை பிட்டு உட்கொள்ளுதல் மற்றும் ஒரே கிண்ணத்தில் அருந்துதலின் அடையாளமாக வெளிப்படும் சகோதரத்துவம் மற்றும் பங்களிப்பும் தொடர்ந்தும் செய்வதன் அவசியம்.
- அது எமக்காக அவரால் சிந்தப்பட்ட இரத்தத்தின் புது உடன்படிக்கை ஆகும். அதாவது பாவத்தை போக்கும் ஆட்டுக்குட்டியானவராக அவரது இரத்தம் ஜென்ம பாவத்தின் விளைவுகளில் இருந்து விடுதலை தருவது ஆகும்.
- நாம் அவரது துன்புறுதலில் பங்குதாரர்கள் ஆக்கப்படுகின்றோம்.
- இயேசுவின் பணி அதாவது இறையரசின் விருத்தியின் பொறுப்பானது கிறிஸ்தவர்களாகிய எமக்கு வழங்கப்பட்டுள்ளது.

இதை சவாலாக ஏற்றுக் கொண்டு அன்பை அடிப்படையாக்கி இறையரசின் வளர்ச்சிக்கான பணியின் பங்குதாரராவதற்கு அர்ப்பணித்தல் கிறிஸ்தவ பிள்ளையான எமது எதிர்ப்பார்பாகும்.

## செயற்பாடு

1. ஆதியில் நிகழ்ந்த பாஸ்கா என்னும் ''புளிப்பில்லா அப்ப விழா'' வின் பின்னணி என்ன?

2. இயேசுவின் மூலம் நிகழ்ந்த அப்பம் பிட்குதலின் பாரம்பரியம் கிறிஸ்தவரான எமக்கு வெளிப்படுத்துவது என்ன?

# 13 கெத்சமனி வேண்டுதலின் வல்லமை

இயேசு பணிக்காக தன்னை அர்ப்பணித்தபோது அநேக சவால்களுக்கு முகம் கொடுத்த முறைகளை முன்னைய பாடங்களில் அறிந்தோம். அவர் வாழ்ந்த நாட்களில் சமுதாயத்தில் துன்பங்களுக்கு உள்ளானவர்களின் விடுதலைக்காக தம்மை அர்ப்பணித்து, பாவத்திற்கு மன்னிப்பைப் பெற்று தருவதற்காக மிகவும் கொடூரமான துன்பத்திற்குள்ளாகி சிலுவையிலே தனது வாழ்வை தியாகம் செய்ய நேர்ந்தது.

தனது வாழ்வின் இறுதி சில நாட்களில் அந்தக் கொடூரமான சம்பவத்திற்கு முகம் கொடுப்பதற்காக இயேசு வேண்டுதலின் ஊடாக பொறுமையும் தைரியமும் பெற்றுக் கொண்ட முறையையும் அவர் எமது வாழ்க்கைக்கு கொண்டுவரும் முன்மாதிரியையும் வழிகாட்டுதலையும் ஆராய்ந்து பார்ப்பது இப்பாடத்தின் எதிர்பார்ப்பாகும்.

**லூக்கா :** 22-39-53

**லூக்கா 22 : 39 - 46**
**ஒலிவமலையில் இறைவேண்டல்**

முன்னைய பாடத்தில் நாம் ஆராய்ந்து பார்த்த இறுதி இரவு உணவின் பின் இயேசு வழமைபோல் தனது சீடர்களோடு ஒலிவ மலைக்கு வந்தார். இன்னும் சில நாட்களில் தன் வாழ்க்கைப் பயணத்தில் அனுபவிக்க நியமிக்கப்பட்டிருந்த சவாலை இயேசு அறிந்து இருந்தார். உண்மையான மனிதனாக வாழ்ந்த அவர் இதுவரையில் அறிந்திருந்தது பசி, தாகம், துன்பம், சந்தோஷம் போன்று இப்போது மரண வேதனையையும் அனுபவித்தார் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. இயேசு இச் சந்தர்ப்பத்தில் எவ்வளவோ துன்பத்தை அனுபவித்திருப்பார்.


படம் 13:1 - கெத்சமனி தோட்டத்தில் ஜெபம்.

இத்துன்பத்தை அவரிலிருந்து நீக்கிவிடுமாறு மிகவும் உருக்கமாய் இறை வேண்டல் செய்தார் எனவும் அவரின் வியர்வைத்துளிகள் இரத்தத் துளிகளாகத் தரையில் விழுந்ததாகவும் நாம் திருமறையில் வாசிக்கின்றோம்.

‘‘என் விருப்பப்படி அல்ல உம் விருப்பப்படியே நிகழட்டும்’’ என்று ஒலிவமலையில் செய்த மன்றாட்டின் மூலம் தம் அனுபவிக்க வேண்டிய துன்பங்களை அறிந்திருந்த இயேசு, தனது சுயவிருப்பத்திற்கு அல்லாது கடவுளின் விருப்பத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தார். இந்த மன்றாட்டிற்கு இறை பதிலானது வானதூதன் விண்ணகத்திலிருந்து தோன்றி அவரை வலுப்படுத்தினார் என்பதாகும்.

இயேசு இவ்வாறு ஒலிவமலையில் மன்றாடிய வேண்டுதலில் இறை விருப்பத்திற்கு கீழ்ப்படிந்து, துன்பப்படவும் அதன் மூலம் மரணத்தையும் விரும்பி ஏற்றுக்கொண்டார்.

இறை விருப்பத்திற்கு எதிராகச் செயற்படும் ஒருவர் துன்புறவேண்டும் என்பது அக்கால யூதசமுதாயத்தில் சாதரணமாக ஏற்றுக்கொண்ட ஒன்றாகும். ஆனால் இயேசு தனது துன்பங்கள் மரணத்தின் முலம் பிறரின் நன்மைக்காக இறை விருப்பத்திற்கு இணங்கிச் செயற்பட்டார். இறையரசை உரிமையாக்கி கொள்வதற்காக துன்புறுவது வரப்பிரசாதமாவதைப் போல் இறுதியில் வெற்றியாகும் எனவும் அவர் இதன் மூலம் தெளிவுபடுத்தினார். அதற்காக வழி காட்டுதலும் பெலனும் தைரியமும் இறைவேண்டுதல் மூலம் பெற்றுக்கொள்ளலாம் என்பதையும் நாம் அறிந்து கொள்ளலாம்.

இயேசு வேண்டுதல் செய்தபின் எழும்பி சீடர்களிடம் வந்தபோது அவர்கள் சோர்வுற்றுத் தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு ‘‘சோதனைக்கு உட்படாதிருக்க விழித்திருந்து இறைவனிடம் வேண்டுங்கள்’’ எனக் கூறினார். இவ்வாறு அவர் மனவேதனையோடு தனது சீடர்களையும் வேண்டுதல் செய்வதற்கு தைரியத்தைக் கொடுத்தார். இயேசு இந்த சந்தர்ப்பத்திற்கு முகம் கொடுப்பதற்கு வேண்டுதலின் மூலம் பெலத்தையும் தைரியத்தையும் பெற்றுக்கொண்டது போல், எமது வாழ்விலும் இவ்வாறான சவால்களின் போது வேண்டுதலின் மூலம் அதற்கான வழிகாட்டுதலையும் பெற்றுக்கொள்ளலாம். இயேசுவைப் பிடிப்பதற்கு முன்னால் சீடர்களுக்குக் கொடுத்த இறுதி வேண்டுகோளானது சோதனைக்கு உட்படாதிருக்க விழித்திருந்து வேண்டுங்கள் என்பதாகும்.

**லூக்கா : 22:47-53**
**இயேசுவைக் காட்டிக் கொடுத்தல்**

பன்னிருவரில் ஒருவர் தன்னைக்காட்டிக் கொடுப்பான் என்பதை இறுதி இரா உணவின்போது இயேசு அறிவித்தார். அந்த இடத்தில் இருந்தோரில் இயேசுவைப் பிரித்துக் காட்டிக் கொடுப்பதற்காக யூதாஸ் முத்தமிடுவதற்காக இயேசுவின் அருகில் வந்தார். யூத சமுதாயத்தில் ஒருவரை மரியாதையோடு வரவேற்பதற்கு முத்தமிடுவது சம்பிரதாயமாக இருந்தது. ஆனால் இந்த முத்தமானது காட்டிக்கொடுப்பதின் அடையாளமாக இயேசு அறிந்து இருந்தார். இச்சந்தர்ப்பத்தில் இயேசு யூதாசுக்கு கூறிய வார்த்தை குற்றச்சாட்டு அல்ல, மாறாக சோகத்தின் வெளிப்பாடாகும். அவர் காண்பித்த இரக்கம் இயேசு பாவியையல்ல பாவத்தை நிராகரித்தார் என்பதை வெளிப்படுத்துகின்றது. பாவியை நிராகரிப்பது அவரின் நோக்கம் அல்ல.

இயேசுவின் சீடர்களில் ஒருவர் தலைமைக் குருவின் பணியாளரைத் தாக்கி காதைத் துண்டித்தபோது இவ்வாறு செய்ய வேண்டாமென சீடர்களுக்கு கட்டளையிட்டு அவனை நலமாக்கினார். அவரைப் பிடிப்பதற்கு யூதாசோடு வந்திருந்த தலைமைக் குருக்களையும் அவர்களோடு இருந்தவர்களையும் பார்த்து இயேசு பயமில்லாமல் கேள்வி கேட்கும் அளவிற்கு தைரியம் இருந்தது.

இவ்வாறு செயல்படுவதற்கு இயேசுவுக்கு தைரியம் கிடைத்தது, அவர் கெத்சமனி தோட்டத்தில் நிகழ்த்திய முக்கிய வேண்டுதலினாலாகும். முதலாவதாக இறைவிருப்பத்திற்கு கீழ்ப்படிந்தார். கிறிஸ்தவ வாழ்வுக்கு இறை வேண்டுதலின் மூலம் உறுதியான பெலனும் முக்கியத்துவமும் பெறலாம் என்பதை தெளிவு படுத்தினார்.

### செயற்பாடு

இயேசு ''பாவிகளையல்ல பாவத்தை வெறுக்கின்றார்'' இதனை அவர் செயற்பாட்டில் காட்டிய முறைகளை உதாரணத்துடன் விளக்குக.

# 14 தீர்ப்பும் சிலுவை மரணமும்

**இயேசுவின் வாழ்வை முடிப்பதற்காக தலைமைக் குருக்கள் மறை நூல் அறிஞர் உட்பட சமூகத் தலைவர்கள் செயற்பட்ட முறைகளைக் கடந்த பாடங்களில் கற்றோம். அவரது வாழ்வின் இறுதி நாட்களில் நடைபெற நியமிக்கப்பட்டிருந்த காரியங்களுக்காக தேவையான பெலத்தையும் துணிவையும் ஒலிவமலையின் மன்றாட்டின் ஊடாக பெற்றுக் கொண்டார் என அறிந்து கொண்டோம்.**

**யூதாஸால் காட்டிக்கொடுக்கப்பட்ட குற்றவாளியாக மரண தண்டனைக்கு ஆளாக்கப்பட்ட முறைகளையும் அநீதியான செயற்பாடுக்கு முன்னால் தளராது எதிர்நோக்கிய விதங்களும் எமது வாழ்வுக்கு முன் மாதிரியாக அமையும் முறைகளை ஆராய்ந்து பார்த்தல் இப்பாடத்தில் எதிர்பார்க்கப்படுகின்றது.**

**லூக்கா** : 22:63- 23:25, 23:33, 44-49

யூதாஸ் இயேசுவைக் காட்டிக் கொடுத்தபின், தலைமைக் குருவும் சமூகத் தலைவரும் கோவில் காவலர்களுடன் இணைந்து இயேசுவை தலைமைக் குருவின் மன்றத்திற்கு அழைத்து சென்றனர். மறுநாள் விடியும்வரை இயேசுவை, அங்கு கடுமையான துன்புறுத்தலுக்கு உட்படுத்தினர்.

அப்போது இயேசுவை பிடித்து வைத்திருந்த மனிதர் கண்ணைக் கட்டி
உம்மை அடித்தது யார் எனக் கூறும் எனக் கேட்டார். மேலும்
பல பொய்யான குற்றச்சாட்டுகளை கூறி
அவமானப்படுத்தினர்.

லூக்கா 22:63-65

உரோம சட்டத்தின்படி குற்றவாளிகளுக்கு எதிரான குற்றச்சாட்டுக்கள் நிரூபிக் கப்படும் வரையில் அவரை நிரபராதியாக ஏற்றுக்கொள்ளவேண்டும். அதற்கேற்ப அவர் நிரூபிக்கப்பட்டு குற்றவாளியாக தீர்மானிக்கும்வரை தண்டனைக்கு உட்ப டுத்தல் சட்டத்திற்கு விரோதமான செயலாக கருதப்பட்டது. ஆனாலும் இயேசுவைப் பொறுத்தவரையில் இது நிறைவேற்றப்படவில்லை என்பது தெளிவாகின்றது.

இக்காலத்தில் சமூக தலைவர்களால் துன்புறுத்தப்பட்ட மக்கள், தமக்கு விடுதலை அளிப்பதற்கு வந்த இயேசுவை ஊர்வலமாக ''ஓசன்னா'' என்று ஓலமிட்டு

எருசலேம் நகருக்கு அழைத்து வந்தனர். சமூக தலைவர்களது உந்துதலால் மக்களின் போராட்டத்தின் மத்தியில், இயேசுவுக்கு பிலாத்தினால் மரண தண்டணை வழங் கப்பட்டது. அதனை சுருக்கமாக பார்ப்போம்.

**லூக்கா : 22- 66, 23-24**

தலைமைக்குருக்கள் மறைநூல் அறிஞர் தலைமை சங்கத்தார் ஒன்றுகூடி தீர்ப்பிடுவதற்காக இயேசுவை அழைத்து சென்றனர். யூத சட்டத்திற்கு ஏற்ப விசாரிக்கப்பட்டு தீர்ப்பு வழங்கப்படுதல் நீதிமன்றத்திற்கு மட்டுமே உரித்தானது. இங்கு தலைமைக் குரு தலைமைத்துவம் வகித்தார். மேலும் பரிசேயர் குழுவின் பிரதிநிதிகள் எழுபது பேர் அம்மன்றத்தில் அமர்ந்திருந்தனர். அவர்கள் வினவிய வினாக்களுக்கு இயேசு கூறிய மறுமொழிகள் பின்வருமாறு.

வினா : ''நீ கிறிஸ்துவா, எங்களுக்கு கூறும்.

மறுமொழி : ''நான் அதைக் கூறினாலும் நீங்கள் நம்பமாட்டீர்கள். உங்களிடம் கேட்டாலும் பதில் கூற மாட்டீர்கள். ஆனாலும் இப்பொழுது முதல் மானிட மகன் கடவுளின் வலது பக்கத்தில் அமர்ந்திருப்பார்.''

வினா : அப்படியானால் நீர் கடவுளின் மகனா?

மறுமொழி : ''நான் அவர் என நீங்களே கூறுகின்றீர்கள்''

***அதன் பின்னர் அவர்கள் ''எமக்கு என்ன'' இப்படி இவர் கூறுவதை நாம் எமது காதுகளால் கேட்டோம் எனக் கூறி அவரை பிலாத்துவிடம் கொண்டு சென்றனர்.***

இயேசுவின் வார்த்தைகளையே அவருக்கு எதிரான சான்றுகளாக முன்வைப்பதே அவர்கள் இயேசுவை வினவியதன் நோக்கம் ஆகும். இயேசு தளராது மிகவும் அறிவுபூர்வமாக மறுமொழி கூறிய விதம் அவர்களை கலங்க கூடியதாக இருந்தது.

இருப்பினும் குற்றவாளியினால் முன்வைக்கப்பட்ட சான்றுகள் மூலமாக தீர்ப்பு வழங்குதல் யூதமத சட்டங்களுக்கு எதிரானது. அதனை கருத்தில் கொள்ளாத தலைமைக் குருக்கள் இயேசுவை மரணத்திற்கு உற்படுத்தமுயன்றனர். ஆனாலும் அந்த தீர்ப்பு எடுப்பதற்கான அதிகாரம் அந்த தலைமைக்குரு சங்கத்திற்கு உரித்தானது அல்ல. பலஸ்தீனா உரோம பேரரசின் கீழ் இருந்தபடியால் யூதேயாவின் உரோம ஆளுநருக்கு மட்டுமே அந்த அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது.

அதனால் அவர்கள் இயேசுவை யூத நாட்டின் உரோம ஆளுநரான பொந்தியு பிலாத்திடம் கொண்டு சென்றனர்.

''சனதரிம்'' என அழைக்கப்பட்ட யூத நீதிமன்றத்தில் அவர்கள் யூத மதத்துக்கு எதிரானவர் என்று முன்வைத்த குற்றச்சாட்டுகளுக்குப் பதிலாக உரோமப் பேரரசிற்கு எதிரானவர் என்ற குற்றச்சாட்டுகளை பிலாத்து முன்னிலையில் வைத்தனர்.

அந்த குற்றச்சாட்டுகளாவன,

1. மக்களைத் தூண்டுபவர்
2. பேரரசுக்கு வரி செலுத்துவதைத் தடுத்தல்
3. தன்னை கிறிஸ்து என்னும் அரசர் என கூறுதல்

பேரரசுக்கு வரி செலுத்துதல் (லூக்கா20:19-26) என்ற முறைகளை முன்னைய பாடத்தில் கற்றோம்.

மேற்படி குற்றசாட்டில் ஆளுநர் பிலாத்துக்கும் இயேசுவுக்கும் இடையே ஏற்பட்ட உரையாடலின் சுருக்கம்.

| | | |
|---|---|---|
| ***பிலாத்து*** | - | ***நீர் யூதரின் அரசரா?*** |
| ***இயேசு*** | - | ***அவ்வாறு சொல்வது நீர் தான்.*** |
| ***பிலாத்து*** | - | ***அவரிடம் எதுவித குற்றங்களையும் நான் காணவில்லை*** |
| ***மக்கள்*** | - | ***இவர் கலிலேயா முதல் யூதேயா முழுவதும் மக்களை குழப்புகின்றார்.*** |
| ***பிலாத்து*** | - | ***இவர் கலிலேயனா?*** |

இவ்வாறாக இயேசுவை குற்றமற்றவர் என கண்ட பிலாத்து அவரை குற்றவாளியாக்க விரும்பவில்லை. எனினும் மக்களின் எதிர்ப்பை கவனத்தில் கருதாமல் செயற்பட அவரால் முடியாமல் இருந்தது. அதனால் பிலாத்து, இயேசுவுக்கு தீர்ப்பு வழங்கப்படுவதற்காக எருசலேமில் இருந்த ஏரோது அரசனிடம் அனுப்பினார்.

பல வருடங்களாக இயேசுவைப்பற்றி அறிந்திருந்த ஏரோது அரசன் இயேசு வைக் காண ஆவலோடு இருந்தார். யூதமத குருக்களும் மறைநூல் அறிஞரும் ஏரோதுவிடம் இயேசுவுக்கு எதிராக கடுமையாக குற்றம் சாட்டினார். ஏரோது பல வினாக்களை அவரிடம் கேட்டார். அது அவரை தீர்ப்பிடுவதற்காக அல்ல மாறாக இயேசுவின் அதிகாரத்தைப் பற்றி அறிந்து கொள்வதற்காகும். இயேசு எவ்வித மறுமொழியும் கூறவில்லை.

அநீதிகளின் மத்தியில் மனம் தளராது துணிந்து இயேசுவால் இருக்க முடிந்தது. மரண தண்டனைக்கு ஏற்ற குற்றங்கள் எதுவும் இயேசுவிடம் காணமுடியாமல் இருந்ததால் மீண்டும் பிலாத்துவிடம் அனுப்பினார்.

**லூக்கா** 23:13-25

**இயேசுவுக்கு மரணதண்டனை விதித்தல்**

'இயேசுவுக்கு எதிரான குற்றச்சாட்டுக்கள் தொடர்பாக இறுதி தீர்மானம் வழங்க உரோம ஆளுநர் பிலாத்துவுக்கு அதிகாரம் இருந்தது. மக்கள் கூறியவாறு குற்றங்கள் எதுவும் இயேசுவிடம் காணப்படவில்லை. அதனால் மக்கள் எதிர்பார்த்த மரண தண்டனையை வழங்குவதற்கு பிலாத்து முன்வரவில்லை. அவர் மூன்று முறை வாதாடி இயேசு குற்றமற்றவர் என கூறினார். மக்களின் கூக்குரல் அதிகமாகியதால் இயேசுவை சிலுவையில் அறையவும் என்ற கூக்குரல் வெற்றி பெற்றது. ஆளுநர் பிலாத்து மக்களின் வேண்டுகோளுக்கு இணங்க தீர்ப்பு வழங்கினார். இயேசுவை கபால ஸ்தலத்திற்கு அழைத்து சென்று அங்கு சிலுவையில் அறைந்தனர்.

உலக அரசனாக இயேசுவைக் கருதி, இயேசுவிடம் விடுதலை வேண்டி நின்ற மக்கள் பின்னர் இனவாதம் உள்ள மற்றும் குற்றவாளியுமான பரபாவை விடுவிக்குமாறு வேண்டினர். இயேசுவால் அறிமுகப்படுத்தப்பட்ட இறையரசின் விடுதலையை நிராகரித்தனர்.

அன்று மாத்திரமல்ல, வரலாற்றில் தொடர்ந்தும் இவ்வாறான சம்பவம் நிகழ்கின்றது.

**லூக்கா** 23. 44-49

**இயேசுவின் மரணம்**

அது மத்தியான வேளையாக இருந்தது, நாடு முழுவதும் இருள் சூழ்ந்து மாலை 3.00 மணியானதும் சூரியன் இருளானது.

மனிதரை பாவத்திலிருந்து மீட்டு விடுதலை அளிப்பதற்காக இப்பூவுலகுக்கு வந்த இயேசு மனிதனால் மறுக்கப்பட்டு கொடூரமான கொடுமைகளை அனுபவித்தபோது இயற்கை காட்டிய மாறுத்தரம் புதுமையானது. இயேசு சிலுவையில் மரிக்கும்போது

சூரியன் இருளடைந்தது. எல்லா நட்சத்திரங்களையும் படைத்த இறைவன் அனைத்து உயிர்களுக்காகவும் இவ்வாறு உயிர் நீத்தார். அப்போது தோன்றிய இருளானது இக்கருத்தை வெளிப்படுத்துகின்றது.

**கோவிலின் திரைச்சீலை இரண்டாக கிழிதல்**

மேற்படி திரையினால் எருசலேம் ஆலயத்தில் புனித இடமானது பிரிக்கப்பட்டிருந்தது. வருடமொரு முறை தலைமை குருவானவர் மட்டுமே அங்கு உட்பிரவேசிப்பார். அதாவது இறைசமூகத்தின் வருகையாக ஏற்றுக்கொள்ளப்படுவது வழக்கமாக இருந்து வந்தது. (உ+ம்: குரு செக்ரியா) ஆனாலும் திரை இரண்டாகியதனால் அனைவருக்கும் இறைசமூகத்துக்கு செல்லும் வரம் அடையாளப்படுத்துகிறது.

இயேசு தம்மை பலியாக ஈந்ததன் மூலம் மேற்படி ஆசியானது எமக்கு கிடைத்துள்ளமை நாம் பெற்ற பாக்கியம் ஆகும்.

**இயேசு அதிக உரத்த சத்தத்துடன் ''பிதாவே உமது கரங்களில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்'' என்று கூறினார்.**

இந்த வார்த்தையை இறுதியாக கூறிய இயேசு உயிர் நீத்தார். லூக்கா நற்செய்தி நூலுக்கு ஏற்ப இயேசுவால் கூறப்பட்ட இறுதி வார்த்தை இதுவாக அமைகின்றது. இது யூதரின் பழக்கப்பட்ட விண்ணப்பம் ஆகும். (திருப்பாடல் 31:5)

குழந்தை பருவத்திலிருந்து அனைத்து யூதரும் இரவு நித்திரைக்கு செல்லுமுன் இந்த விண்ணப்பத்தை ஒப்புவிக்க வழங்கப்பட்டிருந்தனர். இவ்வாறு இயேசு மரண வேளையில் இறைவனுக்கு தன்னை ஒப்புவித்தார்.

இவ்வாறாக நீதியுடன் கூடிய சமூகத்தை உருவாக்குவதற்காக இயேசு மனிதனாக இவ் உலகுக்கு வந்தார். மனிதரின் அநீதியின் முன்னால் இறையரசைப் தாபிக்கும் தனது பணியை நிறைவேற்றி மடிந்தார். இறைவனிடம் நாம் அண்மிப்பதற்கு இடையூறாக அமைந்த திரையை இரண்டாக்கி தனது ஆன்மாவை இறைவனிடம் ஒப்படைத்தார்.

அநீதிக்கு முன்னால் மனம் தளராது வாழ்வதற்கு இயேசு எமக்கு முன்னுதாரணமாக செயற்பட்டார். இதற்காக தனது உயிரையும் தியாகம் செய்தார்.

**செயற்பாடு**

1. அநீதியாக சிலுவை மரணத்திற்கு உட்படுத்தப்பட்டபோது இயேசு செயல்பட்ட முறையிலிருந்து நாம் இன்று கற்றுக் கொள்ளும் முன்மாதிரிகள் யாவை?

# 15 துன்புறலும் பிரதிநடத்தையும்

**பாவமில்லாத இயேசு சட்டத்திற்கு முன்னால் குற்றவாளி எனக் கருதப்பட்டு அவருக்கு மரணத் தீர்ப்பளிக்கப்பட்டது. நேர்மையற்ற தீர்ப்பின் முன்னால் தைரியமாக முகம் கொடுத்த முறையை கடந்த பாடங்களில் ஆராய்ந்து பார்த்தோம். இயேசு பயமின்றி சவால்கள் அனைத்திற்கும் முகம் கொடுத்த முறைகள் எமது கிறிஸ்தவ வாழ்விற்கு மிகப்பெரிய முன்மாதிரியான பிரதான சாட்சி ஆகும்.**

**இயேசுவின் பாடுகளோடு பலவிதத்திலும் இணைந்து செயற்பட்டு அவர்களின் வெளிப்பாட்டை காண்பித்தவர்கள் உண்டு. இப்பாடத்தில் நாம் ஆராய்ந்து பார்க்கும்போது அவர்கள் இயேசுவை பாடுகளோடு இணைந்து வெளிக்காட்டிய முன்மாதிரியைக் கொண்டு எமது கிறிஸ்தவ வாழ்க்கையில் அவைதரும் சாட்சியும் முன்மாதிரியும் எவ்வாறானது என்பதைப் பார்ப்போம்.**

**லூக்கா :** 23:26-42, 46 **வசனம்** 9:18-20, 22:31-34, 22:54-62, 23:50-53

**வாசிப்போம்**
**லூக்கா : 9:18-20 பேதுருவின் அறிக்கை**

பேதுரு இயேசுவின் முதன்மையான சீடனும் அவரை மிகவும் அன்பு செய்த ஒரு சீடனுமாக இருந்தான் என்பதை அறிவோம். அவ்வாறே பேதுரு இயேசுவை ஏற்றுக்கொண்டு மிகவும் கவனமாக செயற்பட்ட சீடனுமாவான் அதற்கு பிரதான சாட்சியானது பேதுருவின் மாபெரும் அறிக்கையாகும்.

''நீர் கடவுளின் மெசியா''

பேதுருவின் இவ்வறிக்கையின் வெளிப்பாடானது யூதமக்களிடையே இருந்து வந்த கிறிஸ்துவைப் பற்றிய எதிர்ப்பார்பானது இயேசுவின் மூலமாக நிறைவேறியது. என்பதை பேதுரு அறிந்து இருந்தார்.

அவ்வாறே இயேசுவும் தனது பணியைத் தொடர்ந்து முன்னோக்கி எடுத்துச்செல்லும் பொறுப்பை பேதுருவிடம் ஒப்படைத்தார்.

## லூக்கா : 22 : 31-34
## பேதுரு மறுதலிப்பவர் என முன்னறிவித்தல்

*சீடர்களின் மனங்கள் சாத்தானின் தூண்டுதலினால் மாறுபடுவதற்கு இடமுண்டு. என்பதை அறிந்த இயேசு அவர்களின் நம்பிக்கை தளராதிருக்க மன்றாடினார். அவர்கள் மனதளவில் விழுந்தாலும் ''நீ மனம் திரும்பியபின் உன் சகோதரர்களை உறுதிப்படுத்து'' என இயேசு பேதுருவிடம் கூறினார். இதற்குப் பேதுருவின் பதிலானது ஆண்டவரே உமக்காக நான் சாவதற்கும் ஆயத்தமாய் உள்ளேன் என்றார். ஆனால் இயேசு முன்னால் நிகழப்போகும் காரணங்களை விளக்கிக் கூறினார்.*

## லூக்கா : 2 : 54-63
## பேதுரு மறுதலித்தல்

இயேசுவை விசாரிப்பதற்காக தலைமைக் குருவின் வீட்டு முற்றத்திற்கு இழுத்துச் சென்றபோது பேதுரு செயற்பட்ட முறையை நாம் பார்க்கும்போது இயேசு முன்கூறிய வார்த்தைகள் மனதில் தோன்றியது. இயேசுவோடு மரிப்பதற்கும் ஆயத்தம் எனக் கூறிய பேதுரு அவ்வேளையில் இயேசுவைத் தெரியாது எனக் கூறினார். இவ்வாறு கூறுவாய் என இயேசு தனக்கு முன்பே உணர்த்தியதை நினைத்து பேதுரு வெளியே போய் மனம் கசந்து அழுதார். அன்று இரவு பேதுருவிடம் இருந்த வைராக்கியம் உடைந்துபோனது. இயேசு முன் கூறிய வார்த்தைகள் **''நீ மனந்திரும்பிய பின் உன் சகோதரர்களை உறுதிப்படுத்து''** மூலம் பேதுரு பெலனடைந்தார் என்பது தெளிவாகும்.

**பேதுருவின் வாழ்வினூடாக கிறிஸ்தவ வாழ்வுக்கு தரும் சாட்சி**

**''நீர் கடவுளின் மெசியா'' லூக்கா :** 9:20

**''ஆண்டவரே உம்மோடு சிறையிடப்படுவதற்கும் ஏன் சாவதற்கும் நான் ஆயத்தமாய் உள்ளேன்'' லூக்கா :** 22-33

கடவுளில் கொண்டுள்ள நம்பிக்கை தளர்ந்து போவதே சோதனைகளில் மிகவும் பிரதான சோதனையாகும். இயேசுவினிடத்தில் அதிக நம்பிக்கையோடு இருந்த பேதுரு இவ்வாறு நடந்து கொண்டால், சாதாரண மனிதராகிய நாம் இவ்வாறான சோதனைகளை முகம் கொடுக்க நேரிடும்போது அவ்வாறு செயற்படாமல் இருப்பதற்கு, இடைவிடாமல் இறை வேண்டுதலோடும் நம்பிக்கையோடும் செயற்படவேண்டும்.

**''ஆனால் நான் உனது நம்பிக்கை தளராதிருக்க உனக்காக மன்றாடினேன். நீ மனம் திரும்பிய பின் உன் சகோதரர்களை உறுதிப்படுத்து''** **லூக்கா :** 22-32

## *கிறிஸ்தவ வாழ்வுக்கு தரும் செய்தி*

*இயேசுவின் வாழ்வின் இறுதியில் சோதனைக்கு உட்படாதிருக்க விழித்திருந்து இறைவனிடம் வேண்டுங்கள் என அவர் இடைவிடாமல் சீடர்களுக்கு கூறினார். அவர்களின் ஆழமான நம்பிக்கை சோதிக்கப்படும் காலம் வரும் என அவர் அறிந் திருந்தப்படியால் அதை முன்கூட்டியே அவர்களுக்கு அறிவித்தார்.*

*எமது நம்பிக்கையை முன்னெடுத்துச் செல்ல இயேசுவின் துணை இல்லாமல் எமக்கு தனியாக செய்ய முடியாது என்பது இதன்மூலம் தெளிவாகின்றது. நாம் வளர்த்து கொள்ளக்கூடிய இறைத்தொடர்பின் மூலம் அதற்கான தைரியமும் பெலனும் கிடைக்கின்றது என்பது தெளிவாகின்றது.*

*எமது நம்பிக்கை நிலையற்றதாக பின்னடையும்போது அதைக் கவனத்தில் கொள்ளலாம். இயேசு இறையரசின் மிகவும் முக்கிய பொறுப்பையும் காரியங்களையும் எம்மிடம் ஒப்படைத்துள்ளார் என்பதை நாம் கவனத்திற் கொள்ள வேண்டும். அதன்படி நாம் சோதனையில் வீழ்ந்தாலும் மீண்டும் சரியாக செயற்பட அவர் எமக்கு வழி காட்டுவார், எம்மைத் தைரியப்படுத்துவார்.*

*இயேசுவின் துன்பங்களோடு தொடர்புபட்டவர்களில் பேதுருவைப் போல் இன்னும் அனேகர் உள்ளனர். விசாரணையின் பின் சிலுவையில் அறையும் காலம் வரைக்கும் இயேசுவின் துன்பங்களில் அவர்களும் இணைந்து கொண்டதை ஆராய்ந்து பார்ப்போம்.*

### *சிரேன் ஊர் சீமோன் - லூக்கா: 23-26*

***அவர்கள் இயேசுவை இழுத்துச்சென்று கொண்டிருந்தபோது சிரேன் ஊரைச் சேர்ந்த சீமோன் என்பவர் வயல் வெளியிலிருந்து வந்து கொண்டு இருந்தார் அவர்கள் அவரைப் பிடித்து அவர் மேல் இயேசுவின் சிலுவையை வைத்து அவருக்குப்பின் அதைச்சுமந்து கொண்டுப்போகச் செய்தார்கள்***
***லூக்கா:23-26***

*மாற்கு நற்செய்தியில் குறிப்பிட்டவாறு இவர் அலெக்சாந்தர் ரூபு ஆகியோரின் தந்தையும் வெளியில் இருந்து வந்தவருமாவார் அவர் எருசலேமுக்கு வந்தது பஸ்கா விழாவை கொண்டாடுவதற்காகும் ஆனால் அவருக்கு அன்று நிகழ்ந்தது இயேசுவின் பின்னால் சிலுவையைச் சுமந்து சென்று உதவி செய்யும் ஒரு சந்தர்ப்பமாய் இருந்தது.*

## கிறிஸ்தவ வாழ்வுக்கு தரும் செய்தி

நாம் நினையாதபோது நினையாத நேரத்தில் (இறையரசின் பணிக்கு பங்குதாரராவதற்கு இயேசுவின் அழைப்பு கிடைத்திருக்கின்றது. இது இறைவனின் வரப்பிரசாதமாகும் சிரேன் ஊர் சீமோன் அதை நிராகரிக்காமல் சிலுவையைச் சுமந்து செல்வதற்கு ஒத்துழைத்த முறையைப் போன்றது) எமக்கு அழைப்பு கிடைக்கும் நேரத்தில் அதை எவ்விதத்திலும் கைவிடாமல் செயற்பட ஆயத்தமாக இருக்க வேண்டும்.

***பெண்கள்-லூக்கா:*** 23 : 27 - 31

இயேசுவைப் பார்த்து அழுது கொண்டிருந்த பெண்களைப் பார்த்து இயேசு ''எருசலேம் மகளிரே நீங்கள் எனக்காக அழவேண்டாம் மாறாக உங்களுக்காகவும் உங்கள் மக்களுக்காகவும் அழுங்கள்'' எனக் கூறினார். இச்சந்தர்ப்பத்தில் அழுது புலம்ப வேண்டியது இயேசுவைக் குறித்ததல்ல, மாறாக வரப்போகும் எருசலேமின் அழிவைக் குறித்து என்பதை இயேசு காணப்பித்தார்.

## கிறிஸ்தவ வாழ்வுக்கு தரும் செய்தி

* தனக்காக அழவேண்டாம் என கூறியதன் மூலம் அவரின் சிலுவை மரணம் தோல்வியல்ல மாறாக வெற்றியானது எனக் கூறப்படுகின்றது.

* உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுங்கள் எனக்கூறியது வர இருக்கும் பாவத்தால் நிறைந்த உலகில் அனுபவிக்க வேண்டிய துன்பங்களைப் பற்றி முன் அறிவிப்பதற்காகும்.

***லூக்கா*** 23:32-33, 39-42.

மண்டை ஓடு எனப்படும் இடத்திற்கு இயேசுவோடு இரு குற்றவாளிகளை யும் அழைத்துச் சென்றனர். இயேசுவின் இரு பக்கத்திலும் அவர்களை சிலுவைகளில் அறைந்தார்கள் அதில் ஒரு குற்றவாளி அச்சந்தர்ப்பத்தில் இயேசுவை சோதிப்பதற்கு முயற்சி செய்தாலும் மற்ற குற்றவாளி இயேசுவுக்கு முன்பாக தாம் செய்த தவறை ஏற்றுத் தனக்கு கிடைத்த தண்டனை சாதாரணமானது என்பதை வெளிப்படுத்தினார். இயேசுவை விசுவாசித்த அவனது வேண்டுகோளானது ''இயேசுவே நீ ஆட்சியுரிமை பெற்று வரும்போது என்னை நினைவிற்கொள்ளும்'' என்றான். அந்த வேண்டுகோள் நிறைவேறியது என்பதை இயேசுவின் பதிலில் அடங்கியுள்ளது.

## கிறிஸ்தவ வாழ்வுக்கு தரும் செய்தி

பாவத்தில் மூழ்குவதற்கும் அதிலிருந்து மீள்வதற்கு ஆயத்தமான இரு சரிதைகள் பற்றிய உதாரணமாகும்.

வாழ்வின் இறுதி வேளையிலும் தனது தவறை உணர்ந்து மனந்திரும்பி மன்னிப்பைப் பெற்றுக்கொள்ளுதலும் இயேசு நம் வாழ்வில் மீட்பர் எனவும் ஏற்றுக் கொள்வதன் மூலம் பெற்றுக் கொள்ளும் நிலை வாழ்வை பற்றியதுமான சான்றாக இவை அமைகின்றன.

படைவீரர் - **லூக்கா:** 23 : 35 - 38.

இயேசுவை சிலுவையில் அறைந்த வேளையில் படைவீரர் இயேசுவுக்கு புளித்த திராட்சை இரசத்தைக் கொடுத்து

***''நீ யூதர்களின் அரசனானால் உன்னைக் காப்பாற்றிக் கொள்''***

எனக்கூறி நகைத்தனர் இவ்வாறு அவரை சோதனைக்கு உள்ளாக்கினார் மேலும் இயேசுவை அவமானப்படுத்தினர்.

## கிறிஸ்தவ வாழ்வுக்கு தரும் செய்தி

நிந்தனைகள், சவால்கள் போன்றவை படைவீரர்களின் செயற்பாட்டில் அடங்கியுள்ளது. இச்சவால்கள் இறுதி நாட்களில் அதிகமாகியது. அதற்கு முன் பாலைநிலத்தில் இயேசு முகம் கொடுத்த சோதனைகளைப் போன்றவையாகும். அவர் அமைதியாக இருந்து தைரியமாக இச்சோதனைகளில் வெற்றி பெற்றார் அவ்வாறே எமது வாழ்வில் முகம் கொடுக்கும் வேதனைகளின்போது இறை வார்த்தைகளினால் பெலனடைந்து அதற்கு தைரியமாக முகம் கொடுப்பது அவசியமாகும்.

**அரிமத்தியா யோசேப்பு - லூக்கா: 23 : 50 - 53**

பிலாத்திடம் போய்க் கேட்டார். அவரின் உடலை இறக்கி மெல்லிய துணியால் சுற்றி யாரையும் அடக்கம் செய்திராத பாறையில் குடைந்திருந்த கல்லறையில் அடக்கம் செய்வதற்கு முன்வந்தார்.

## கிறிஸ்தவ வாழ்வுக்கு தரும் செய்தி

அரிமத்தியா யோசேப்பு யூத தலைமைச்சங்க உறுப்பினர். இருப்பினும் அவர் யூதர்களின் திட்டத்திற்கும் செயலுக்கும் இணங்காதவர். இவ்வாறான வேளையில் இயேசுவின் சீடனால் அவர் காட்டிக் கொடுக்கப்பட்டார் என்பதை வெளிப்படுத்தி அரசியல் கைதியாக சிலுவையில் அறையப்பட்ட இயேசுவின் உடலை மரியாதையோடு கல்லறையில் அடக்கம் செய்வதற்கு கேட்டது அவரின் தைரியமும் அர்ப்பணிப்புமாகும். இவ்வாறான சந்தர்ப்பத்தில் இயேசுவை பின்பற்றுபவராக பிரபல்யமாக காண்பித்து வெளிப்படுத்திய உண்மைக்கு சான்று பகர்ந்தது எமக்கு பெரிய ஒரு முன்மாதிரியாகும்.

இவ்வாறு இயேசுவின் துன்பங்களில் தொடர்புபட்டவர்களுள் அவரோடு இணைந்து செயல்பட்டவர்களையும் அவருக்கு எதிராக செயற்பட்டவர்களையும் அறிந்து கொள்ளமுடியும். அவரோடு ஒன்றிணைந்து செயற்பட்டவர்களினால் கிடைத்த முன்மாதிரியானது எமது கிறிஸ்தவ வாழ்வை மென்மேலும் அர்த்தமுள்ளதாக்கு வதற்கும் பெலனுள்ளதாக்குவதற்கும் மிகவும் உதவியாக அமைந்துள்ளது.

இயேசு சிலுவையில் அறையப்படுவதற்கும் ஒன்றிணைந்து செயற்பட்ட அனைவருக்காகவும் அவரின் முன் மாதிரியே பதிலாக அமைந்தது.

***‘‘தந்தையே இவர்களை மன்னியும்***
***தாங்கள் செய்வது என்னவென்று இவர்களுக்குத் தெரியவில்லை’’***

இவ்வாறே அவர் எமது வாழ்வுக்காக அவரின் வாழ்வை ஒப்புவித்தது. எமக்கு நிலையான விடுதலையைப் பெற்றுத்தந்தார் கடவுளின் திட்டத்தை நிறைவேற்ற வேண்டிப் பணியை நிறைவு செய்து உயிர் துறந்தார்.

***‘‘பிதாவே உமது கரங்களில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்’’***

### செயற்பாடு

1. எமது விசுவாசம் நிலையற்றதாக பின்னடைவு ஏற்படுகின்றது. அவ்வாறு இல்லாமல் இயேசு இறையரசின் மிக முக்கியமான பொறுப்பை எம்மிடம் ஒப்படைத்தார் என்பதை பேதுருவின் சரிதை மூலம் காண்பியுங்கள்.

# 16 புதிய எதிர்பார்ப்பு

**இயேசு எவ்வித தவறும் செய்யாதபோதும் யூத சமுதாயம் அவருக்கு சிலுவை மரணத்தை தண்டனையாக வழங்கியது. சிலுவை சுமந்து செல்லும்போது சாட்டை அடிகள், கை, கால்களில் ஆணிகள் அடிக்கப்பட்டு இயேசு துன்புறுத்தப்பட்டார். இந்நிலையில் இயேசு பின்வருமாறு ஓலமிட்டார்.**

**''தந்தையே உம் கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கின்றேன்.''**
**எனக் கூறி உயிர் துறந்தார்.**

**இச் சம்பவங்களை நாம் கடந்த பாடங்களில் பார்த்தோம். ''இறையரசின் உரித்தை'' நாம் மீண்டும் பெற்றுக்கொள்வதற்காக, எம்மை பாவத்தில் இருந்து மீட்டுக்கொள்வதற்காக, இயேசு தாமே பலியாகி தனது பணியை நிறைவு செய்தார்.**

**இவை அனைத்தும் இத்துடன் முடிவடைந்திருந்தால் இயேசுவின் மரணம் சாதாரண மரணமாகவே அமைந்திருக்கும். ஆனால் அது அவ்வாறல்ல இப்பாடத்தில் நாம் கவனித்துப் பார்க்கப்போவது எமது வாழ்விற்கு நிலையான வாழ்வின் வாசல்களை திறந்து தந்த உயிர்த்த இயேசுவைப் பற்றியதாகும்.**

**லூக்கா** 24

**''நாம் வழிபடும் இயேசு உயிருள்ளவர்.**
**கடவுள் எம்மோடு சதாகாலமும் இருக்கின்றார்''**

*மேலே கூறப்பட்ட வாக்கியமானது நீங்கள் எப்போதும் கேட்கும் ஒரு விடயமாகும். ஆனால் அதன் மெய்யான கருத்தை பற்றி விளங்கிக் கொண்டீர்களா? மேலே கூறப்பட்டதன் ஆழமான விளக்கம் வரலாற்றின் உண்மை நிகழ்வாகும். மனிதனை பாவத்தில் இருந்து மீட்டுக்கொள்வதற்கு இயேசு அநேக பாடுகள் துன்பங்களோடு சிலுவையில் பலியானார். மரணத்தை அனுபவித்து கல்லறையில் இருந்த அவரின் சரீரமானது மூன்றாம் நாள் உயிருடன் எழுப்பப்பட்டது. இவ்வாறு உயிர்தெழுந்த இயேசுவை சீடர்களும் அவரைப் பின்பற்றியோரும் கண்டறிந்தனர். இந்த புதுமையான அனுபவம் மனுகுலத்தின் நிலை வாழ்விற்கான வாசலைத் திறக்கும் புதிய எதிர்பார்ப்பின் நற்செய்தியாகும்.*

**இயேசுவோடு கூட இருந்த சீடர்களும் அவரைப்**
**பின்பற்றியோரும் அவர் உயிரோடு இருப்பதற்கு சான்று**
**பகிர்ந்த முறையை ஆராய்ந்து பார்ப்போம்.**

இயேசு தனக்கு நிகழப்போகும் சம்பவங்களைப் பற்றியும் அவரின் உயிர்த்தெழுதலைப் பற்றியும் அவர் தம் பணியின்போது பல சந்தர்ப்பங்களில் தமது சீடர்களுக்கு வெளிப்படுத்தினார். இருப்பினும் இவ்வாறான காரியம் நிகழும் என்பதைப் பற்றிய சரியான விளக்கம் சீடர்களிடம் இருக்கவில்லை. இதனால் இயேசுவுக்கு மரண தண்டனை நியமிக்கப்பட்ட வேளையில் அவரோடு கூட இருந்த சீடர்கள் பெரிய குழப்பத்திற்கு உள்ளானார்கள்.

இருப்பினும் இயேசுவின் உயிர்ப்பைப் பற்றிய நற்செய்தி அவர்களுக்கு புதியதொரு எதிர்ப்பார்ப்பைக் கொண்டுவந்தது. எனவே சீடர்களும் இன்னும் அநேகரும் மீண்டும் தைரியமாக அவரின் உயிர்ப்பைப் பற்றி சான்று பகிர்வதற்கு முன் வந்தனர்.

**லூக்கா:24.1-12**
**இயேசு உயிர் பெற்று எழுதல்.**

வாரத்தின் முதல் நாள் விடியற்காலையில் பெண்கள் நறுமணப் பொருட்களை எடுத்துக் கொண்டு இயேசுவை அடக்கம் செய்த கல்லறையின் அருகில் வந்தார்கள். மரித்த சரீரத்திற்கு நறுமண தைலம் பூசுவது யூத கலாசாரமாகும். கல்லறைக்கு வந்த பெண்கள் வானதூதரின் செய்தியைக் கேட்டு ஆச்சரியமடைந்தனர்.

**''உயிரோடு இருப்பவரை கல்லறையில் தேடுவது என்ன?**
**அவர் இங்கு இல்லை அவர் உயிருடன் எழுப்பப்பட்டார்''.**

**இதைகேட்ட பெண்கள் குழப்பமும் ஆச்சரியமும் அடைந்தனர்.**

இயேசுவின் உயிர்ப்பின் செய்தி அப்பெண்கள் கண்களால் கண்டு விளங்கிக் கொண்ட உண்மையாகும். அவர்கள் தாம் பெற்ற அனுபவத்தை இயேசுவின் சீடர்களிடமும் ஏனையோரிடமும் அறிவித்து சான்று பகிர்ந்தனர். இச்சம்பவத்தில் வானதூதரின் செய்தியானது முக்கியமான சவாலாக அமைந்தது.

இயேசு உயிருடன் எழுந்தார் என்பதை அறிந்த சீடர்கள் குழப்பமும் மகிழ்ச்சியும் அடைந்தனர். பெண்கள் கூறிய செய்தியைக் கேட்ட பேதுரு தானே தேடி அலைந்து உறுதிப்படுத்துவதற்காக கல்லறைக்கு ஓடினார். வெறுமையான கல்லறையைக் கண்ட பேதுரு அது உண்மை என்பதை உணர்ந்து உறுதி செய்துகொண்டார்.

இயேசுவின் உயிர்ப்பை விசுவாசிக்காதோர் அனைவரும் அவரை மரித்தோரிடத்தில் தேடுகிறவர்களாக இருக்கின்றனர். இயேசு எம் மத்தியில் உயிரோடு வாழ்கிறார் என்பதை விசுவாசிக்காத சில கிறிஸ்தவர்கள் தம் வாழ்வில் பிரச்சனைகள் குழப்பங்கள் மத்தியில் அவரை விட்டு வேறு நம்பிக்கையில் செல்கின்றனர். உலகிலே மிகவும் புகழ் பெற்றவர்களின் மத்தியில் மரித்து மீண்டும் உயிர் பெற்று, இன்றும்

வாழ்கின்ற இயேசுவை நாம் விசுவாசித்து அவரில் கொண்ட நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளவேண்டும்.

**கல்லறைக்குச் சென்ற பெண்களைப் போன்று இன்னுமோர் சந்தர்ப்பத்தில் எம்மாவூருக்கு சென்ற சீடர்கள் மத்தியிலும் அவர் உயிரோடு இருப்பதை வெளிப்படுத்தினார். அதைப் பற்றி ஆராய்வோம்.**

**லூக்கா 24:13-35.**
**ஏம்மாவூர் பயணம்**

எருசலேமில் இருந்து எம்மா ஊருக்கு சென்ற சீடர்கள் இருவரோடு இயேசு சென்ற போதிலும், அவர்களின் மனதில் ஏற்பட்ட குழப்பத்தை தெளிவுப்படுத்திக் கூறியும், அவர் இயேசு என்பதை அறிந்துகொள்ள முடியவில்லை என்பது தெளிவாகின்றது.

இஸ்ரயேலை மீட்கப் போகிறவர் இயேசு என்பதை சீடர்களும் ஏனையோரும் எதிர்பார்த்து இருந்தார்கள். ஆனால் இயேசுவுக்கு மரணதண்டனை விதித்தப்படியால் சீடர்களின் மனங்கள் உடைந்து போய்விட்டது என்பதை கிளேயோப்பா இயேசுவிடம் கூறினார்.

இருப்பினும் இயேசு, மோசே முதல் அனைத்து இறைவாக்கினர் வரை அனைவரின் நூல்களிலும் தம்மைக் குறித்து எழுதப்பட்ட யாவற்றையும் விளக்கி கூறியும் அவர் இயேசு என்பதை அறிந்துகொள்ளவில்லை. ஆனால் அன்று இரவில் அவர்களோடு இருந்து அப்பத்தை எடுத்து அதை ஆசீர்வதித்து அவர்களுக்கு கொடுத்த சந்தர்ப்பத்தில் இயேசுவை அவர்கள் உணர்ந்து கொண்டனர். ஏனெனில் இறுதி இரவு உணவின்போது அப்பத்தை எடுத்து பிட்டு அதை அவர்களோடு பகிர்ந்து கொண்ட முறையை நினைவு கூர்ந்தனர். சந்தேகம் குழப்பமுமாக பயணம் செய்த இரு சீடர்களும் உயிர்த்து எழுந்த இயேசுவை கண்களால் கண்ட விசுவாசத்தின் ஊடாக செயல்பட்டார்.

இவ்வாறு இயேசு உயிர்த்தெழுந்து அவர்களோடு இருப்பதை உணர்ந்த வேளையில் அவர்கள் உள்ளம் பற்றி எரிந்ததை நினைத்தார்கள். அவர்களின் குறைந்த அறிவும், விசுவாசக்குறைவும் அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இருப்பினும் இருசீடர்களும் தாங்கள் பெற்ற அனுபவங்களை மற்றைய சீடர்களுக்கு வெளிப்படுத்தினர்.

**''ஆண்டவர் உண்மையாகவே உயிருடன் எழுப்பப்பட்டார்''**

இவ்வாறு இயேசு நிரந்தரமாகவே எம்மருகில் இருக்கிறார் எப்போதும் எம்முடனே சேர்ந்து பயணிக்கிறார். ஆனாலும் எம்மால் அவரை அறிந்து கொள்ள முடியவில்லை.

அவர் உயிரோடு இருக்கிறார் என்ற விசுவாசம் எம்மிடையே இல்லாமையே எமது வாழ்வில் சந்தேகம், குழப்பத்தோடு பயணிக்கும்போது இறைத்திட்டத்தை விட்டுவிலகி பாவத்திற்குள்ளாகின்றோம்.

அவைகள் பின்வருமாறு:-

- அவர் உயிருள்ளவர் என்ற விசுவாசம் இன்மையால்
- நாம் எதிர்பார்க்கும் உருவில் அல்லது எதிர்பார்ப்பு அற்ற சந்தர்ப்பங்களிலும் அவரைக் காணலாம் என உணராமையால்
- எமது வாழ்வு சந்தேகமும் பயமும் நிறைந்ததாக இருப்பதால்
- கடவுளின் திட்டத்தை மறந்து நாம் பாவத்திற்கு உட்பட்டு வாழ்வதால்

ஆனால் இயேசுவை அறிந்து கொள்ளும்போது எமது வாழ்வில் பெரிதான தொரு மாற்றத்தை அனுபவிக்க முடியும். மேலும் வாழ்வில் முகம் கொடுக்கும் குழப்பங்கள் பிரச்சினைகள் தடைகளின் முன்னால் உண்மை மனதோடு இறைவனைத் தேடும்போது உயிரோடு இருக்கும் இயேசு எம்மருகில் இருக்கின்ற அனுபவம் உண்மையாகும். அவ்வாறே உயிரோடு இருக்கும் இயேசுவை எமது வாழ்வில் தனிப்பட்ட முறையில் அனுபவிக்க வேண்டுமாயின் பாவத்திற்கு விலகி விசுவாசத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். விசுவாசத்தில் பெலனடையும்போது வழிபடும் இயேசு உயிரோடு சதாகாலமும் இருக்கிறார் என்று நாம் பெறும் அனுபவத்தை சான்று பகர்வதும் எமது பொறுப்பாகும்.

**எம்மாவூருக்கு சென்ற சீடர்களைப்போல் இன்னுமோர் சந்தர்ப்பத்தில் சீடர்களின் மத்தியில் இயேசு தம்மை வெளிப்படுத்தி அவர்களின் விசுவாசத்தையும் நம்பிக்கையும் பெலனடையச் செய்த சந்தர்ப்பத்தைப்பற்றி ஆராய்ந்து பார்ப்போம்.**

**லூக்கா 24:36-46**
**இயேசு சீடர்களுக்கு தோன்றுதல்**

எருசலேமில் சீடர்கள் பேசிக் கொண்டிருந்தபோது உயிர்த்தெழுந்த இயேசு அவர்களின் கண்ணெதிரில் தோன்றினார். அவர் அவர்களோடு பேசி,

**''நீங்கள் ஏன் கலங்குகின்றீர்கள்? ஏன் இவ்வாறு உங்கள் உள்ளத்தில் ஐயம் கொள்ளுகிறீர்கள்? என் கைகளையும் கால்களையும் பாருங்கள் நானேதான் என்னைத் தொட்டுப்பாருங்கள் எனக்கு எலும்பும் சதையும் இருப்பதைக் காண்கிறீர்களே''** எனக் கூறினார்.

அவர் ஆவி இல்லை என்பதனையும் அவர் உயிர்த்தெழுந்தது மெய்யானது என்பதையும் கருத்திற் கொள்வதற்காக சீடர்களுக்கு இவ்வாறான ஒரு சந்தர்ப்பத்தைக்

கொடுத்தார். இவ்வாறு மோசேயின் சட்டத்திலும் இறைவாக்கினர் நூல்களிலும் தன்னைப் பற்றி எழுதப்பட்டுள்ள அனைத்தும் நிறைவேற வேண்டும் என்பதை அவர்களுக்கு எடுத்துக் காட்டினார். அவர்களின் முன்னால் அவர் உயிரோடு இருப்பதை வெளிப்படுத்தி சீடர்களின் பயத்தைப் போக்கி குழம்பிப்போய் இருந்த மனங்களைத் திடப்படுத்தி அவரின் புதிய எதிர்ப்பார்ப்பை நிறைவு செய்தார். இயேசு இவ்வாறு சீடர்களுக்கு தம்மை வெளிப்படுத்தியது உயிர்த்தெழுதலின் உண்மையான சாட்சியாக மட்டுமல்ல மற்றவர்கள் முன்னிலையில் சாட்சியாளர்களாகவும் மாற்றினார். இவ்வாறு இயேசு தம்மை சீடர்களுக்கு உயிருள்ளவராகக் காண்பித்து அவர்களை ஒரு சிறப்புப் பணிக்காக அழைத்தார்.

**''பாவமன்னிப்பு பெற மனம் மாறுங்கள் என எருசலேம் தொடங்கி அனைத்து நாடுகளிலும் அவருடைய பெயரால் பறை சாற்ற வேண்டும் என்று எழுதியுள்ளது. இவற்றுக்கு நீங்கள் சாட்சிகள்''.**

**இயேசுவின் அழைப்பை ஏற்றுக்கொண்டு...**

- ★ இயேசு உயிர்பெற்று எழுந்தார் என்பதை முதலில் அறிந்த பெண் அந்த நற்செய்தியைப் பற்றி சீடர்களிடம் முன்பாக சாட்சி பகிர்ந்தாள்.
- ★ ஏம்மாவூருக்குச் சென்ற சீடர்கள் இருவர் இயேசுவின் சீடர்கள் முன்பாக தாம் கண்டவைகளை பற்றி சான்று பகிர்ந்தனர்.
- ★ இயேசுவின் சீடர்களும் அவரைப் பின்பற்றியோரும் இயேசுவின் உயிர்ப்பைப்பற்றி சகல நாடுகளிலும் போய் சான்று பகிர்ந்தனர். (பவுல், பேதுரு, இன்னும் அநேகர்)

**இவ்வாறு இயேசு உங்களையும் அழைக்கிறார் என்பதனை நினைத்துப்பாருங்கள்.**
எனவே இயேசுவைப் பற்றி கூறுவதற்கு உங்களிடம் உள்ள சாட்சி என்ன? சிந்தித்துப் பாருங்கள்

அதை பிறரிடம் பகிர்ந்து கொண்டு அவர்களையும் இயேசுவின் உயிர்ப்பில் பெலப்படுத்துவது உங்களுடைய பொறுப்பு என்பதை கவனத்திற் கொள்க.

### செயற்பாடு

வெறுமையான கல்லறை, துளையுடன் கூடிய கை, கால் உடலைச் சுற்றியிருந்த துணி என்பவை அன்றைய பெண்களுக்கும் சீடர் களுக்கும் இயேசு உயிர்த்தெழுந்துள்ளார் என்பதை அறிவித்தன.

1. இயேசு உயிரோடிருக்கிறார் என்ற அனுபவத்தை பெற எம்மிடையே காணப்படும் தடைகள் எவை?
2. இயேசு உயிரோடிக்கிறார் என்ற அனுபவத்தை நாம் பெற்றுக் கொள்ள எமது வாழ்வில் கொண்டிருக்க வேண்டிய தன்மைகள் எவை?
3. இயேசு உயிரோடிக்கிறார் என்ற அனுபவத்தை பிறரின் மத்தியில் பகிர்ந்து கொள்வதற்கு எம்மால் செய்யக்கூடியவற்றை விளக்குக.

# 17 தூய ஆவியின் அருள்

**திருமுழுக்கானது கிறிஸ்துவைப் பின்பற்றும் அனைவருக்கும் மிகவும் சிறப்பான சமய பாரம்பரிய முறையாகும். இன்றைய திருச் சபையில் நடைபெறும் இச்சடங்குமுறை ஓர் வெளிஅடையாளம் ஆகும். இதன் மூலமாக தூய ஆவியானவரின் வருகை ஏற்றுக் கொள் ளப்படுகின்றது. கிறிஸ்தவ சபைகள் சிறுவர் வாலிபர் பெரியோர் ஆகியோரின் வயது எல்லையின்றி திருமுழுக்கை ஏற்றுக்கொள்ளும் போது அதன் மூலம் கிறிஸ்துவை பின்பற்றுகிறவர்களாக உறுதி செய்யப் படுகின்றது. திருமுழுக்கின் மூலம் தூய ஆவியானவரின் பிரசன்னத் தால் தைரியத்தையும் பெலத்தையும் பெற்று தமது வாழ்வில் ஒரு புதிய மாற்றத்தை அனுபவிப்பர். நாம் இப்போது இயேசு திருமுழுக்கு பெற்ற சம்பவத்தை ஆராய்ந்து தூய ஆவியானவரின் மூலமாக எமது வாழ்வில் புதிய மாற்றத்தை அனுபவிக்கும் வழிகாட்டுதலை தேடுவோம்.**

**லூக்கா:** 3:21-22

இயேசுவின் காலத்திற்கு முன்னரே யூதமக்களிடையே திருமுழுக்கு என்னும் சடங்குமுறை நிலவி வந்தது. அது தண்ணீரில் மூழ்கி தூய்மைப்படுத்தும் ஒரு வெளி அடையாளம் மட்டுமே ஆகும். ஆனால் திருமுழுக்கு யோவான் இதற்கு ஒரு புதிய விளக்கத்தைக் கொடுத்து மக்களை மனந்திரும்பும்படி யோர்தான் நதியில் திருமுழுக்குப் பெறுவதற்கு அழைத்தார். முன்னைய பாடத்தில் நீங்கள் அறிந்து கொண்டபடி திருமுழுக்கு யோவான் தனக்குப் பின்னால் வருபவரை ஏற்றுக் கொள்வதற்காக மக்களின் மனங்களை தூய்மைப்படுத்துவதற்கும் அதன் மூலம் அவர்களின் பாவச்செயல்களில் இருந்து விலகுவதற்கும் அழைப்பு விடுத்தார்.

திருமுழுக்கு யோவான் மக்களைப் பார்த்து 'எனக்குப் பின்வருபவர் தூய ஆவி என்னும் நெருப்பால் உங்களுக்கு திருமுழுக்குக் கொடுப்பார்' என கூறினார். ''நெருப்பு'' இறை பிரசன்னமாகும். பாவத்தைச் சுட்டெரித்து தூய்மையாக்கும் அடையாளமாகும். தூயஆவியானவர் புதிய வாழ்வை வாழ்வதற்கான ஒளியாக தைரியத்தையும் சக்தியையும் தருவது உறுதியாகின்றது. திருமுழுக்கானது எமக்கு கிடைத்த இறை வரப்பிரசாதமாகும். இதனால் கிடைக்கும் அனுபவத்தின் மூலம் இறையரசின் பிரஜைகளாக பயமின்றி சான்று பகர்வதற்கான வழிகாட்டுதல் எமக்கு கிடைக்கின்றது.

திருமுழுக்கு யோவான் மனந்திரும்பி வந்த மக்களுக்கு யோர்தான் நதியில் திருமுழுக்கு கொடுத்துக் கொண்டிருக்கும்போது இயேசுவும் அங்கே வந்தார். அவர்

மனந்திரும்ப வேண்டிய அவசியம் இல்லாத போதும் இத்திருமுழுக்கில் கலந்து கொண்டது ஏன் என்பதை முன்னைய பாடங்களில் கற்றோம்.

இயேசு தாழ்மை உடையவராக தனது சொந்த சகோதரரான திருமுழுக்கு யோவானிடம் திருமுழுக்குப் பெற்றது, தனது பணியின் ஆரம்பத்திலே காட்டிய ஒரு முன்மாதிரியான செயலாகும். இயேசுவின் திருமுழுக்கு பற்றிய அறிக்கை மத்தேயு, மாற்கு, லூக்கா ஆகிய மூன்று நற்செய்திகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. (லூக்கா : 3-21) மக்கள் திருமுழுக்கு பெறும்போது இயேசுவும் அவர்களோடு சேர்ந்து திருமுழுக்குப் பெற்று, ஜெபித்தபோது தூயஆவியானவர் புறா வடிவில் அவர் மீது வந்து இறங்கினார்.

இவ்வாக்கியத்தினூடாக கீழே தரப்பட்டுள்ள கருத்துக்களை நாம் அறிந்து கொள்ள முடியும்.

- இயேசு தமது தூதுப்பணிக்கு ஆயத்தமானார். அதற்காக அவர் கலிலேயாவிலுள்ள நாசரேத்தில் இருந்து யூதேயாவின் யோர்தான் நதியருகில் வந்தார்.
- திருமுழுக்கு யோவானின் முன்தூதுப் பணியை அங்கீகரித்தார்.
- மனம் திரும்பிய அனைத்து மக்களோடும் ஒன்றிணைந்து இயேசு திருமுழுக்கு பெற்றதன் மூலம் தாழ்மையின் குணாதிசயத்தை வெளிக்காட்டினார்.
- திருமுழுக்கு யோவானின் பணிக்கும் தனது பணிக்கும் இடையே இருக்கும் தொடர்பை வெளிப்படுத்தினார்.
- புதுமை நிகழ்வுகள் இடம் பெற்றன.
- வானம் திறக்கப்பட்டது.
- தூய ஆவியானவர் புறாவின் வடிவில் வந்து இறங்கினார்.
- இறைவெளிப்பாடு
- இயேசு திருமுழுக்குப்பெற்று ஜெபத்திலிருந்தது போல திருமுழுக்கைப் பெற்ற கிறிஸ்தவரான நாம் நினைவில் கொள்ளவேண்டியது ஜெபத்தின் மூலம் இறைத்தொடர்பை வளர்த்துக் கொள்வது அவசியமாகும்.
- அவ்வேளையில் தூய ஆவியானவர் இறங்கினார்.
- எமது வாழ்வில் தூய ஆவியானவரின் பிரசன்னம் நிலவும்.
- தண்ணீர் வெளி வாழ்வை தூய்மைப்படுத்துவதோடு தூயஆவியானவர் எமது உள்ளத்தை தூய்மையாக்கி வாழ்நாட்கள் முழுவதும் அருள்பொழிவு செய்கிறார். திருமுழுக்கு யோவான் தன்னிடம் வந்த மக்களுக்கு அதைப்பற்றி விளக்கி இருந்தார். தூய ஆவியானவரால் பூரணமாக்கப்படும் திருமுழுக்கானது அனைத்திலும் புதிய வாழ்வை ஏற்படுத்தும் ஒளிக்கு பயமின்றி தைரியமாக சாட்சி பகிர்வோம்.

## தியானியுங்கள்

கிறிஸ்து இயேசுவின் மீது கொண்டுள்ள நம்பிக்கையினால் நீங்கள் அனைவரும் கடவுளின் மக்களாய் இருக்கிறீர்கள். அவ்வாறெனின் கிறிஸ்துவோடு இணைந்திருக்கும்படி திருமுழுக்கு பெற்ற நீங்கள் அனைவரும் கிறிஸ்துவை அணிந்து கொண்டீர்கள்.

**கலாத்தியர் : 3:26-27.**

## சிந்தியுங்கள்

தூய ஆவியின் திருமுழுக்கைப் பெற்ற கிறிஸ்தவ பிள்ளையாக தூய ஆவி யானவர் உங்களோடு பிரசன்னமாய் இருக்கிறார் என நம்பிக்கைக் கொண்டு அவரின் ஒளியைப் பிரகாசிக்கும் நல்வாழ்வை வாழ்வதற்கு நீங்கள் உங்களை சுற்றியுள்ள அனைவருக்கும் பிரகாசிக்கும் நட்சத்திரம் ஆகுங்கள்.

### செயற்பாடு

1. இயேசுவின் திருமுழுக்கின்போது கடவுள் கூறிய வார்த்தையையும் தோற்றம் மாறுதலின் போது கூறிய வார்த்தையையும் ஒப்பிடுக.

2. ‘‘தூயஆவியும்’’ நெருப்பும் இறை அடையாளமாக திருவிவிலியத்தில் முன்வைக்கப்பட்டுள்ள இன்னும் வேறு சந்தர்ப்பங்களை தேடிப்பா ருங்கள்.

3. திருமுழுக்கின் மூலம் தூயஆவியானவரால் முழுமையான கிறிஸ் தவரான நீர் அதற்கேற்றவாறு எவ்வாறு செயற்படுவீர்?

# 18 சோதனையில் வெற்றி

**லூக்கா** : 4: 1-13

கிறிஸ்தவப்பிள்ளை ஒன்று ஞாயிறு ஆராதனைக்கு செல்வதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தபோது தொலைபேசி மணி ஒலித்தது. அது தன் நண்பனிடம் இருந்து வந்த மிகவும் மகிழ்ச்சியான செய்தியாகும். அதாவது சந்தோசமாக சுற்றுலாப் பயணம் செல்வதற்கான அழைப்பாகும். இது அவன் முன்னால் வைக்கப்பட்ட சோதனையாகும். ஆலயம் செல்வதா? சுற்றுலா செல்வதா? அவனுக்கு திடீரென பாடசாலையில் கற்றுக் கொண்ட பாடம் நினைவில் வந்தது. இயேசு சோதனைகள் முன்னால் இறைவார்த்தையின் மூலம் செயற்பட்ட முறையை மனதிற் கொண்டு நன்மையான காரியங்களையே ஓய்வுநாளில் செய்யவேண்டும் என உடனடியாகத் தீர்மானித்தான்.

எமது வாழ்நாட்களில் நாம் முகம் கொடுத்த சோதனைகள் மிகவும் கவர்ச்சியான கருத்து உள்ளதாய் இருந்திருக்கும். அப்படியான சந்தர்ப்பங்கள் உங்களுக்கு நினைவில் இருக்கும். விளையாட்டு மைதானத்தில், பாடசாலையின் தவணைப் பரீட்சையில் சோதனைகள் மூலம் குழப்பம் ஏற்படும். வாலிபத்தைக் கடந்து செல்லும் நீங்கள் முகம் கொடுத்த சோதனைகள் வேறுபட்டவை என அறிந்திருப்பீர்கள். எதிர்காலத்தில் தொழிலில் ஈடுபடும்போது பலவிதமான சோதனைகளுக்கு முகம் கொடுக்க நேரிடலாம். வாழ்வில் எந்த சந்தர்ப்பத்திலும் சோதனைகள் எம் மத்தியில் பல வடிவங்களில் வரும் என்பதை அறிந்து கொள்ளவேண்டும். இவற்றின் முன்னால் நன்மையாக செயற்பட முயற்சிக்கும்போது, சாத்தான் ஆலோசிப்பது இலகுவான வழியைத் தெரிவு செய்வதே. அப்படியான தீமையான வழியில் செல்லும்போது நாம் சோதனைகள் முன்னால் தோல்வியுறுவோம்.

இயேசு யோர்தான் நதியில் திருமுழுக்குப் பெற்று தூய ஆவியால் நிரம்பி பாலைவனத்திற்கு சென்று நாற்பது நாட்கள் உபவாசமாய் இருந்து தனது பணிக்கு ஆயத்தமானார். இதைப்பற்றி நற்செய்திகள் கூறுகின்றன. மக்களுக்காக நற்பணி செய்ய முயற்சித்தபோது, அதற்கான இலகுவான வழி அலகை மூலம் முன்வைக்கப்பட்டது.

## இயேசுவுக்கு ஏற்பட்ட சோதனைகள்
**லூக்கா:** 4: 1-13.

### முதலாம் சோதனை லூக்கா 4:3

பாலை நிலத்தில் மனிதனாகிய இயேசு உணவருந்தாமல் நாட்களைக் கழித்தபோது அவருக்கு பசி ஏற்பட்டது. அவ்வேளையில் உணவை வழங்குவதன் மூலம் மக்களை தன்வசப்படுத்தலாம் என்று எண்ணிய அலகை அச்சந்தர்ப்பத்தை பயன்படுத்தியது. பாலை நிலமாகிய அப்பிரதேசத்தில் காற்றினால் வட்டமாக வடிவமைக்கப்பட்ட வெள்ளை நிறக்கற்கள் காணப்பட்டன. அதை அப்பமாக மாற்றி மக்களின் சரீரத் தேவைக்காக உணவை பெற்றுத் தருவதற்கும் இயேசு இறைமகனா என்ற சவாலையும் முன்வைத்தது மறை நூலை தியானித்து அறிந்திருந்த இயேசு அச் சோதனையில் வெற்றிபெற இறைவார்த்தையை உபயோகித்தார்.

### பதில்

மனிதர் அப்பத்தினால் மட்டுமன்று மாறாக கடவுளின் வாய்ச்சொல் ஒவ் வொன்றிலும் உயிர் வாழ்கின்றார். என இதன் மூலம் வெளிப்படுத்தினார். இணைச் சட்டம் 8-3 வசனத்தின் மூலம் அலகைக்கு பதில் அளித்து சவாலைவெற்றி கொண்டார். மனித வாழ்விற்கு சரீரத்தின் தேவைகள் மட்டுமல்ல ஆன்மீகபோசணை அத்தியாவசியம் என இதன் மூலம் வெளிப்படுத்தினார்.

**இறையரசின் அங்கத்தவர்கள் தமது சரீரத் தேவைக்காக செயற்படும்போது அதற்கு மேலாக ஆன்மீக உணவை பெற்றுக்கொள்வதற்கு முயற்சிப்போம்.**

### இரண்டாம் சோதனை லூக்கா 4:5-7

லூக்கா 4 : 6 - 7 அலகை அவரை உயர்ந்த இடத்தில் வைத்து அவர் முன்னால் வைத்த சோதனை உலகில் உள்ள அனைத்தையும் காட்டி 'இவற்றின் மேல் முழு அதி காரத்தையும் உமக்குக் கொடுப்பேன். இவையாவும் என்னிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கின்றன. நான் விரும்பியவாறு இவற்றைக் கொடுப்பேன் எனவே நீர் என்னை வணங்கினால் அனைத்தும் உம்முடையவையாகும்' என்றது.

இச்சோதனையில் அலகைக்கு பொருத்தமான உலக அரசு வல்லமை அனைத் தையும் இயேசுவுக்கு தருவதற்கு அலகை அவருக்கு ஒரு நிபந்தனையை விதித்தது அதாவது தன்னை வணங்கும்படி கூறியது.அதன் மூலம் தீமையின் சக்திக்கு கீழ்ப் படிந்து உலக அரசை நிலைநாட்டுவதற்கான சவாலை முன்வைத்தது. ஆனால் இயேசு இவ்வுலகத்திற்கு வந்தது உலக அரசை நிலை நாட்டுவதற்கல்ல இறையரசை

கட்டி எழுப்பு வதற்கும் இறை ஆட்சியை நிலை நாட்டுவதற்குமே வந்தார். இறையர சின் பெறுமதியானது கடவுளுக்கு கீழ்ப்படிந்து இறை பயத்தோடு வாழும் மக்களை ஒன்றிணைப்பதாகும்.

## பதில்

இயேசு இறைவார்த்தையின் மூலம் ''உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி அவர் ஒருவருக்கே பணி செய்வாயாக'' என பதில் அளித்தார். இணைச்சட்டம் 6:13 வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சொத்து செல்வம் வலிமை புகழ் யாவும் உலகைச் சார்ந்தவையாகும். இதற்கு முதல் இடம் அளிக்கும் சமுதாயத்தில் வாழும் கிறிஸ்தவர்களாகிய எமக்கு இயேசு அளித்த பதில் தெளிவுபடுகின்றது. எனவே கடவுளுக்கு அனைத்து காரியங்களிலும் நாம் முதலிடம் கொடுக்கவேண்டும். கடவுளுக்கு முன்பாக இறை பயத்தோடு வாழவேண்டும். இறையரசின் குணவியல்புகளோடு கடவுளை மட்டுமே வணங்கிக் கீழ்ப்படிவோம்.

## மூன்றாம் சோதனை லூக்கா 4:9-11

இந்த மூன்றாம் சோதனை மூலம் இயேசு முகம் கொடுத்தது புதுமைகள் மூலமாக மக்களை வெற்றிகொள்ளும் சவாலாகும். அதாவது எருசலேம் கோவிலின் உயர்ந்தபகுதியில் இருந்து கீழே குதித்து வீரசெயலை செய்வதற்காகும். இதற்காக அலகை இயேசுவை குழப்புவதற்காக திருமறையில் இருந்து ஒருபகுதியை எடுத்துக் கொண்டது.'' நீர் செல்லும் இடமெல்லாம் உம்மைக் காக்கும்படி தம் தூதர்களுக்கு அவர் கட்டளையிடுவார்'' திருப்பாடல் 91:1-12 என்ற வசனமாகும். ''உம் கால் கல்லின் மேல் மோதாதபடி அவர்கள் தங்கள் கைகளில் தாங்கிக் கொள்வர்'' அலகை சோதனைகளை முன்வைக்கும் போது இறைவார்த்தைகளை பயன்படுத்திக் கொள்வது இதன் மூலம் தெளிவாகின்றது. சில சந்தர்ப்பங்களில் நாமும் இவ்வாறு சோதனைகளுக்கு உட்பட்டிருப்போம்.

## பதில்

இயேசு இச்சோதனையை நிராகரித்து கொடுத்த பதிலானது''உன் கடவுளா கிய ஆண்டவரை சோதிக்க வேண்டாம்'' இணைச்சட்டம் 6:16 வசனத்தின்படி கடவுளில் மட்டுமே பூரணநம்பிக்கை வைத்து இயேசு இம் மூன்றாம் சோதனையை வென்றார் என்பது தெளிவாகின்றது. இயேசு சிலுவையில் இருக்கும் சந்தர்ப்பத்திலும் இவ்வகையான சோதனை ஏற்பட்டது. அதாவது புதுமை செய்யுமாறு விடப்பட்ட சவாலாகும். அவரோடு சிலுவையில் அறையப்பட்ட கள்வன் இவ்வாறான சவாலைக்

*கொடுத்தான். லூக்கா: 23:39 ''நீ மெசியா தானே உன்னையும் என்னையும் காப்பாற்று'' எனக் கூறினான்.*

*சோதனைகளின்போது இயேசு பயமின்றி இறைவார்த்தைகளைப் பயன் படுத்தி அலகையின் ஆலோசனைகளை நிராகரித்தார். இயேசு இறை விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக சிலுவைப் பாதையை தெரிவு செய்தார்.*

## சிந்தித்துப் பார்ப்போம்.

இயேசு உலகிற்கு வந்தது இறையரசைக் கட்டி எழுப்புவதற்காகும். ஆனால் சாத்தானின் நோக்கம் உலக அரசை இந்த பூமியில் நிலைநாட்டுவதே ஆகும். எனவே இதற்காகவே இயேசுவை சோதித்தது தீயசக்திகளை மேற் கொண்டு, வெற்றி பெற இறைவார்த்தையின் வழிகாட்டல் மிகவும் முக்கி யமானதாகும்.

எமது வாழ்க்கைப் பயணத்தில் பல சந்தர்ப்பங்களில் பல சோதனை களுக்கு முகம் கொடுத்து இருப்போம். கிறிஸ்துவைப் பின்பற்றும் நாம் தூய ஆவியானவரின் வழி காட்டுதலைத் தேடவேண்டும். இறை வார்த்தையை சரியாகப் புரிந்து கொண்டு அதனூடாக இறை வழி நடத்துதலைத் தேடு வதற்கு முயற்சி செய்ய வேண்டும் இறையரசின் பிள்ளைகளாக சோ தனைகளின் முன்னால் இறை விருப்பத்திற்குப் பணிந்து நடப்பதற்கு கற்றுக்கொள்வோம்.

### *செயற்பாடு*

1. *இயேசு சோதனைகளை வென்றது போல் நீங்களும் சோதனைகளுக்கு முகம் கொடுத்த சந்தர்ப்பங்களில் வெற்றி பெற உதவி நாடும் வழிமுறைகள் மூன்றை எழுதுக.*

2. *பத்து கற்பனையையும் இரண்டாம் சோதனையையும் ஒப்பிடுக.*

# 19 சிறந்த நோக்கமும் புதுவாழ்வும்

**இயேசு பூமியிலே தனது பணியை ஆரம்பிப்பதற்கு முன் தெளிவான விளக்கத்துடன் முன்னெடுத்த முறை பற்றி கடந்த பாடத்தில் விளங்கிக் கொண்டோம். அவருடைய பணியின் காலம் முழுவதும் அவர் கொடுத்த சிறந்த போதனைகளையும் செயல்களையும் கண்டு அனுபவித்தவர்கள் அவரால் அழைக்கப்பட்டு பயிற்சி பெற்றுக் கொண்ட சீடர் குழுவாகும். அவருடைய சுய பணியை முடிவிற்கு கொண்டு வருவதைப் பற்றி சரியான விளக்கத்தின் மூலம் சீடர்களை திடப்படுத்தும் ஓர் சந்தர்ப்பம் கிடைத்தது. அந்தச் சந்தர்ப்பத்தையும் அதனுடன் தொடர்பான நிகழ்வுகளையும் இந்தப் பாடத்தினூடாக விளங்கிக் கொள்ள முற்படுவோம்.**

**லூக்கா:** 9:28-36

*இறையரசைக் கட்டியெழுப்பும் பணியில் இயேசு ஈடுப்பட்டபோது யூத சமுதாயத்தில் அவரைப்பற்றி பலவிதமான கருத்துக்கள் எழுந்தன. அப்போது இயேசு தனது சீடர்களிடம் அவர்கள் என்னை யார் என்று கூறுகின்றார்கள் எனக் கேட்டார். சீமோன் பேதுரு கூறிய கருத்தை லூக்கா 9:18-10 வாசிக்கவும்.*

*கலிலேயாக் கடலில் ஏற்பட்ட புயலை இயேசு அமைதிபடுத்திய சந்தர்ப்பத்தில் அதைக் கண்ட சீடர்கள் ஆச்சரியமடைந்து அவர் யார் என்று வினவத் தொடங்கினர். இயேசு ஜெபம் செய்வதற்கும் தியானிப்பதற்கும் எப்போதும் அமைதியான சூழலைத் தெரிவு செய்தார். ஒரு நாள் அவர் பேதுரு, யாக்கோபு, யோவான் ஆகியோருடன் ஜெபம் செய்வதற்காக ஓர் மலைக்குச் சென்றார். அந்த இடத்தில் நிகழ்ந்தவைகளை வாசித்துப் பார்ப்போம்.*

**லூக்கா:** 9:28-36
**தோற்றம் மாறுதல் / மறுரூபமடைதல்**

*இயேசுவின் வாழ்விலே மிக முக்கியமான சம்பவமாகும். இது பிரதான சீடர்கள் மூவரும் கண்ட உயிருள்ள காட்சியின் அனுபவமாகும். இயேசு உயிர்த்தெழுந்ததும் வானத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பின்பு சீடர்கள் சாட்சி பகிர்ந்ததின் அடிப்படையானது இவ்வனுபவமே ஆகும்.*

**இந்த சந்தர்ப்பத்தில் வெளிப்படுத்தப்பட்ட**
**விசேட நிகழ்வினைப் பார்ப்போம்**

| | |
|---|---|
| * இயேசு ஒரு மலையில் ஏறி ஜெபம் செய்து கொண்டு இருக்கும்போது | * அவருடைய முகத்தோற்றம் மாறியது |
| * இயேசுவின் வஸ்திரங்கள் | * வெண்மையாகிப் பிரகாசித்தது. |
| * அவருடைய இருபுறமும் | * மோசேயும் எலியாவும் மகிமையுடன் காணப்பட்டனர். |
| * மோசேயும் எலியாவும் இயேசுவுடன் கலந்துரையாடல் | * எருசலேமில் நிறைவேற்றப் போகும் அவரின் மரணத்தைக் குறித்து பேசினார். |
| * தூக்கத்துடன் இருந்த சீடர்கள் விழித்துக் கொண்டனர் | * இயேசு மகிமையுடன் இருப்பதையும் அவருடன் இருவர் இருப்பதையும் கண்டார்கள் |
| * மோசேயும் எலியாவும் காணப் பட்டதன் நோக்கம் | * நியாயப் பிரமானமும் தீர்க்க தரிசனமும் கிறிஸ்துவுக்குள் நிறைவேற்றப்பட்டது என்பதை அடையாளப்படுத்தல் |
| * சீடர்கள் மூவரும் | * சரியாக விளங்கிக் கொள்ளுதல் |

இயேசுவினுடைய முகத்தோற்றம் வேறுபட்டு, வஸ்திரம் வெண்மையாகப் பிரகாசித்தது. இதன் மூலம் அவருடைய மகிமையான தெய்வீகத்தின் அடையாளத்தை விளங்கிக் கொள்ள முடியும்.

எலியா தீர்க்கதரிசிகளில் முதன்மையானவராக அடையாளப்படுத்தப்பட்டுள்ளார். மோசே நியாயப் பிரமானத்தின் முதன்மையானவராக யூதர்கள் ஏற்றுக் கொண்டனர். எனவே இந்த வேளையில் நியாயப் பிரமானமும் தீர்க்கதரிசனமும் இயேசுவின் மூலம் முழுமையடைந்துள்ளது என்பதை சீடர்களுக்கு அறிவிக்கப்பட்டது. இவர்கள் இருவரும் இயேசுவுடன் அவர் எருசலேமில் நிறைவேற்றப் போகும் பாடு மரணத்தை குறித்து பேசிக்கொண்டிருந்தனர்.

பரிசுத்த வேதாகமத்திலே ''மேகம்'' இறைவனுடைய பிரசின்னத்தை குறிக்கின்றது. எனவே சீடர்களுக்கு இயேசுவின் தெய்வீகத்தை விளங்கிக்கொள்ள சந்தர்ப்பம் கிடைத்தது.

இறைவனுடைய குரலினாலே இது மேலும் தெளிவாக்கப்பட்டன. ''இவரே என்னுடைய மைந்தன் நான் தேர்ந்துகொண்டவர் இவரே இவருக்கு செவி கொடுங்கள்'' சீடர்கள் இவ்வுண்மையான வாக்கின் மூலம் இயேசு இறைமகன் என உறுதி கொண்டார்கள்.

தோற்றம் மாறும் காட்சியைக் கண்ட சீடர்கள் மூன்று கூடாரங்களைக் கட்டி மலையிலே தங்கியிருக்க விரும்பினர். ஆனால் இயேசு அவருடைய இவ்வுலகப்பணி

பரிபூரணம் அடைவதற்கு எருசலேமிற்கு போகவேண்டும் என்று திட்டவட்டமாக கூறினார். மனிதனுடைய பாவத்திற்காக தன்னுடைய வாழ்வை அர்ப்பணிக்க வேண் டும் என்பதனையும், எதிர்காலத்தில் நடைபெறவிருக்கும் அவரின் வாழ்வின் தியாக பலியான அர்ப்பணிப்பு பற்றிய உறுதியைக் கொடுப்பதும் இச் சம்பவமே. இந்த இறைவார்த்தையை வாசிப்பதன் மூலம் கிறிஸ்துவுக்குள்ளே சரியான விளக்கத்தைப் பெற்றுக் கொள்வதற்கு வழிநடத்தப்படுவோம்.

இயேசுகிறிஸ்துவைப் பற்றி சீடர்கள் பெற்றுக் கொண்ட அனுபவம் உண்மையான அனுபவமாகும். அவர் அருள் பொழிவு பெற்ற மெசியா ஆவார். அவர் எமது மீட்பராவார். விசுவாசத்துடன் அவரை ஏற்றுக் கொள்வதற்கு நாங்கள் ஆயத்தமாக வேண்டும். உயிருள்ள இயேசுவைப் பற்றி சரியான கண்ணோட்டத்தோடு எங்களுடைய வாழ்வை ஒளியாக்குவோம். அவ்வாறே அவரைப் பின் தொடர்கின்றவர்களாக உலகத்திற்கு முன்மாதிரியாக வாழ முடியும்.

## செயற்பாடு

1. இயேசு மலையின் மேல் இருக்கும்போது சீடர்கள் மூவரும் கண்ட தோற்றம் மாறுதல் காட்சியை சுருக்கமாக எழுதுக.

2. சீடர்கள் இயேசுவை அறிந்து கொண்டதற்கு அமைய, நீர் இயேசுவை எவ்வாறு நோக்குகின்றீர்?

# 20 இறையரசின் வளர்ச்சி

கிறிஸ்தவர்களாகிய எமது வாழ்வில் பிரதான எதிர்பார்ப்பு இறையரசை உரிமையாக்கிக் கொள்வதாகும். இறையரசின் சுபாவமும் அதன் பெறுமதியும் அதன் பிரஜையாவதற்கும், இந்த உலக வாழ்விலே எவ்வாறு செயற்பட வேண்டும்? நம்மை எவ்வாறு அர்ப்பணிக்க வேண்டும்? என்பது பற்றியும் இயேசு தனது படிப்பினையின் மூலமாக வலியுறுத்தியுள்ளார். இறையரசின் பிரஜையாக உரிமைப்படுத்திக் கொள்வதற்கு நாங்கள் எவ்வாறு செயற்பட வேண்டும் என்பதைப்பற்றி இயேசுவின் மூலம் கொடுக்கப்பட்ட வழிகாட்டல்கள் இப் பாடங்கள் மூலமாக ஆராயப்படும்.

**பரி லூக்கா:** 13 : 18 - 19; 13 : 20 -21; 8 : 4 -5

*இயேசுவினுடைய போதனைகளின் பிரதானமான கருத்தாகிய ''இறையரசு'' பற்றி நற்செய்தி நூல்களிலே பல இடங்களில் இவ்வாறு குறிப்பிடப்படுகின்றன.*

**அவருடைய ஆட்சிக்கு**
**முடிவே இராது**
**லூக்கா:** 1 : 33

**''நான் மற்ற ஊர்களிலும் இறையாட்சியைப்**
**பற்றி நற்செய்தி அறிவிக்க வேண்டும்.**
**இதற்காகவே**
**நான் அனுப்பப்பட்டிருக்கிறேன்.''**
**லூக்கா:** 4 : 43

**இறையாட்சி பற்றிப் பறைசாற்றவும்**
**உடல் நலம் குன்றியோரின் பிணி**
**தீர்க்கவும் அவர்களை அனுப்பினார்.**
**லூக்கா:** 9 : 2

**''அவர்களை அவர் வரவேற்று**
**இறையாட்சியைப் பற்றி அவர்களோடு**
**பேசி குணமாக வேண்டியவர்களைக்**
**குணப்படுத்தினார்''**
**லூக்கா:** 9 : 11

இறையரசு   என்ற பதத்தில் உலக அரசு எனும் கருத்து உள்ளடங்கியுள்ளது. உலக அரசில் பின்வரும் தன்மைகள் காணப்படும்.




## இறையரசினுள்

ஆளுமை / அதிகாரம் - இறைவனைச் சார்ந்தது

அரசாட்சி / தலைமைத்துவம் - இறைவனின் அதிகாரத்திற்குட்பட்டது

மக்கள் / பிரஜைகள் - இன, நிற வேறுபாடு இல்லாமல் கடவுளின் விருப்பத்தைச் செயல்படுத்துபவர்கள்.

குறிப்பிட்ட பூமி எல்லை - எல்லை அற்றதாக, முழு உலகத்திலும் வாழும் மக்களின் உள்ளத்தில் இறையரசு முழுமையடையும்.

கோட்பாடும் சட்டதிட்டங்களும் - அன்பை அடித்தளமாகக் கொண்ட கடவுளின் போதனை

இவ்வுலகில் இறையரசைக் கட்டும் புனிதமான பணியை இறைவன் தமது ஒரே பேறான குமாரன் இயேசுவுக்கு வழங்கியுள்ளார்.

இயேசு தனது வாழ்வின் முன்னுதாரணத்தின் மூலம் தீமையையும் தன்னலத்தையும் அழித்து இறை விருப்பத்திற்கு தன்னை முழுமையாக அர்ப்பணித்தார். இறைவன் ஆளுகை செய்பவரும் முழு மனுக்குலத்துக்கும் சதாகால இரட்சிப்பை உரிமையாக்கிக்கொள்ள மகா உன்னத திட்டத்துடன் செயற்படுகின்றார் எனவும் இயேசு முன்வைத்தார்.

## அதன்படி இறையரசு

**இறைவனின் அதிகார ஆட்சிக்குள் அன்பின் அடித்தளம் மூலம் மனித உள்ளங்களிலே உருவாகும் ஆழமானதும் புதுமையுமான செயல்பாடாகும்.**

**இறைவனின் விருப்பத்தை நிறைவேற்றுபவர்கள் தேவ கடவுளின் பிள்ளைகள் ஆவார்கள்**

**அவர்கள் இறையரசின் பிரஜாவுரிமையைப் பெற்றுக் கொள்வார்கள்**

இயேசு "இறையரசை" அறிமுகப்படுத்துவதற்கு உவமைகளில் போதிக்கும் முறையைப் பயன்படுத்தினார்.

சாதாரண மக்களின் அன்றாட வாழ்க்கை அனுபவங்களை உவமைகளாகப் பயன்படுத்தி ஆழமான இறையியல் உண்மைகளை இலகுவான முறையில் இயேசு விளக்கியுள்ளார்.

உதாரணமாக - கடுகுவிதை, மந்தைகள், புளித்தமா போன்றவைகளைக் குறிப்பிடலாம்.

### இறையரசு வளர்ச்சியடைதல்

இறையரசின் வளர்ச்சி பற்றி மிகவும் இலகுவான உவமைகளைப் பயன்படுத்தினார்.

**கடுகு விதையின் உவமை**
**லூக்கா 13 : 18 - 19**

இந்த உவமையில் சிறிய கடுகு விதை மூலம் அடையாளப்படுத்தப்படும் இறையரசு மிகவும் சிறியதாகவே ஆரம்பமாகின்றது என்பதாகும். ஆனால் படிப் படியாக மிகவும் வேகமாக வளர்ச்சியடையும். கடுகானது பெரிய விருட்சமாக வளரும் வரை ஒரு மனிதன் அதன் வளர்ச்சிக்காக செயல்படுகின்ற முறை இவ் உவமையில் காணப்படவில்லை. அந்த செயல்பாடானது புதுமையானது. அதைச் செயல்படுத்துபவர் இறைவனே. படிப்படியாக புதுமையான பலன்கள் கொண்டுவரும் திட்டங்கள் மூலமாக இறைவனே இறையரசை வளர்ச்சியடையச் செய்கின்றார். இவ் உவமைக்கு ஏற்ப சிறிய கடுகுவிதை வளர்ச்சியடைந்து பெரிய மரமாகி பின் அந்த மரத்தின் கிளைகளிலே பறவைகள் வந்து தங்கும் என்று கூறப்படுகின்றது. இங்கே பறவைகள் என்று இயேசு குறிப்பிட்டது பரிசுத்தமான இறையரசின் ஆசீர்வாதத்தை எதிர்பார்கின்றதும், இறைவனின் விருப்பத்தைத் தொடர்ச்சியாகத் தேடுகின்றதுமான மக்களாகும். கடுகு மரத்திலும் பறவைகள் தங்கலாம் என்று கூறுவதன் மூலம்

இறையரசைப் பரப்புவதற்காக அவர் மூலமாகத் தெரிந்து கொள்ளப்பட்ட சிறிய மந்தையான சீடர்களுக்கு உற்சாகமும் தைரியமும் ஓர் குறைவும் இல்லாமல் கிடைக் கப்பட்டதென்றால் மிகையாகாது. மற்றொரு சந்தர்ப்பத்தில் இயேசு இறையரசை புளிப்பு மாவிற்கு ஒப்பிடுகின்றார்.

**புளிப்பு மாவைப் பற்றிய உவமை**
**லூக்கா** 13 : 20 -21

யூத வீடுகளில் புளிப்புமாவை கூடுதலாகப் பயன்படுத்துவார்கள். மாப்பொ ருள்களை ஆகாரமாகப் பயன்படுத்தும்போது அம்மாப்பொருள் புளிப்படைவதற்காக இப் புளித்த மா பயன்படுத்தப்படும் புளித்தமாவை புளிப்பில்லாத மாவுடன் கலக் கும்போது நடைபெறும் தாக்கத்தின் மூலம் புளிப்பில்லாத மா புளிப்படைந்து அதன் அளவு கூடுகின்றது. அதாவது உணவு தயாரிப்பதற்கு ஏற்ற பதத்தை அடைகின்றது. இது வீட்டிலே நடைபெறுகின்ற ஓர் நிகழ்வின் அனுபவத்தை இயேசு இறையரசின் வளர்ச்சிக்கு எடுத்துக் காட்டும் விசேட சம்பவமாகும்.

இப்புளித்த மாவின் செயற்பாடு வெளிப்படையாக தெரியாத ஓர் செயற்பாடாகும்.

புளித்த மாவிற்கு ஒப்பிடப்படுகின்ற இறையரசின் செயற்பாடு உள்ளார்ந்தமா னதாக நடைபெறும் ஒன்றாகும். அது இறைவனின் மூலமாக நடைபெறும் செயற் பாடாகும். இறைவன் மனிதனின் உள்ளத்தில் செயல்பட்டு அங்கே அற்புதமான மாற்றத்தை ஏற்படுத்துவார். அவ்வாறு நல்ல மாற்றத்தைக் காண்கின்ற நாங்கள், மற்ற வர்களின் வாழ்க்கையை மாற்றுவதற்காக புளித்த மாவை போல் செயற்பட வேண்டும். இறையரசின் வளர்ச்சி என்பது இந்த செயல்பாடாகும். அது சிறியதாக ஆரம்பித்தாலும் கண்ணுக்கு தெரியாத ஓர் அற்புத செயற்பாடாகக் விளங்குகின்றது.

இறையரசின் புதுமையான வளர்ச்சியைக் காண்பிக்கின்ற உவமைகளில் ஒன்றான விதைப்பவனின் உவமை ஓர் முக்கிய இடத்தைப் பெறுகின்றன.

**விதைப்பவனின் உவமை**
**லூக்கா** 8 : 4 - 15

தெரிந்த விடயத்தினூடாக கண்ணுக்கு தெரியாத மறைபொருளை அறிந்து கொள்ள இயேசு கேட்டோருக்கு வழிகாட்டினார். இறையரசில் மறைந்திருக்கும் ஆன்மீக மறை பொருளைத் தேடிக்கொள்வதற்கு இதனூடாக முடியும். இந்த உவமை மூலமாக இறையரசின் நற்செய்தியைக்கேட்டு அதற்கு பலவிதமான மாறுத் தரம் கொடுக்கின்ற நான்கு குழுக்கள் முன்வைக்கப்பட்டுள்ளன. அக்குழுக்கள்

நான்கும் இறையரசின் வளர்ச்சியைக் காண்பிக்கின்ற சந்தர்ப்பங்கள் இங்கே காண்பிக்கப்படுகின்றன.

| | |
|---|---|
| **முதலாவது குழு (1ம் சந்தர்ப்பம்) பலன்பெறுவதற்கு முயற்சி செய் யாது.** | இறையரசைப் பற்றிய நற்செய்தியைக் கேட் டாலும், உடனே பலன் கொடுக்க முடியாத நிலையில் சத்துருக்களின் இடையூறுகளுக்கு உட்படுபவர்கள். |
| **இரண்டாவது குழு (2ம் சந்தர்ப்பம்) துன்பம் / சோதனை இல்லாத காலத்தில் மாத்திரம் பலன் கொடுக்க முயற்சி எடுக்கப்படல்.** | நல்ல உள்ளத்தோடு இறையரசின் நற்செய் தியைக் கேட்டு ஏற்றுக்கொண்டு, சில நாட்க ளுக்கு மாத்திரம் அதன்படி நடந்து, துன்பங்கள் கஸ்டங்கள் வரும்போது அச் செய்தியை மறந்து, பழைய வாழ்வை வாழ்பவர்கள். |
| **மூன்றாவது குழு (3ம் சந்தர்ப்பம்) முழுமையாகப் பலன் கொடுக் காதிருத்தல்.** | இறையரசின் நற்செய்தியைக் கேட்டு அதன் படி வாழ்ந்து கொண்டு வருகையில் துன்பங் கள், வாழ்வின் கஸ்டங்கள், பொருள் ஆசை, உடல்நோய் போன்ற காரணத்தினால் நற்செய் தியை முழுமையாகச் செயல்படுத்தாமல் முழு மையாக பலன் கொடுக்காதவர்கள். |
| நான்காவது குழு (4ம் சந்தர்ப்பம்) **முழுமையாகப் பலன் கொடுக்கும்.** | தூய உள்ளத்தோடு இறையரசின் நற் செய்தியைக் கேட்டு, ஏற்றுக் கொண்டு, அதன்படி வாழ்ந்து தைரியத்துடன் பலன் கொடுக்கின்றவர்கள். |

விதைப்பவன் உவமையில் இயேசு கூறுவது போல இறையரசின் வளர்ச் சிக்கு எவ்வித தடைகள், கஸ்டங்கள், துன்பங்கள் வந்தாலும் முறையாக பலவித தடைகளையும் தாண்டி வளர்வதற்காக இறைவன் அற்புதமான விதத்தில் அதற்கு இட மளிக்கின்றார். அதனால் இறையரசின் விருத்திக்காக நேர்மையாக இறை விருப்பத்திற்கு கீழ்படிந்து, அர்ப்பணிப்போடு, நன்மையான பணிகள் மூலம் பலன் கொடுக்க வேண்டுமென்று இறைவன் விரும்புகின்றார்.

நாங்கள் இறையரசின் நற்செய்திக்கு சரியான மாறுத்தரம் கொடுப்பதோடு அவதானத்தோடும் விசுவாசத்தோடும் அதன் வளர்ச்சிக்காக செயற்பட வழிநடத்த வேண்டும். அடர்த்தியாக வளருகின்ற விதைகள் போன்று கூடுதலாக பலன் கொடுத்துக் கொள்வதும் இறையரசின் பிரஜாவுரிமையை பெற்றுக் கொள்வதும் இயேசுவானவர் எங்களிடமிருந்து எதிர்பார்கின்ற விடயமாகும்.

## மேலே கூறப்பட்ட உவமைகளின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்ற இறையரசு

- ★ மிகவும் சிறியதாக ஆரம்பித்து அதிக அளவான வளர்ச்சியை நோக்கிப் பயணம் செய்தல்
- ★ ஒருவருடைய செயற்பாடும் இல்லாமல் மறைபொருளாக வளர்ச்சி யடையும்
- ★ படிப்படியான முறையான வளர்ச்சியைக் காணலாம்
- ★ சுதந்திரமாக வளர்ச்சி அடையும்

**இறையரசின் வளர்ச்சியை அனுபவிப்பதற்குத் தேவைப்படுபவை**

- ★ இயேசுவினுடைய நோக்கம் எங்களுக்குள்ளே இருத்தல்
- ★ இயேசுவினுடைய அதிகாரத்திற்கும் அரசாட்சிக்கும் உட்படுதல்
- ★ இறைவசனத்தை தினந்தோறும் தியானித்து அதன்மூலம் கடவுளின் ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ளல்
- ★ தொடர்ச்சியாக ஜெபத்திலும் விசுவாசத்திலும் இருந்து இறைவனின் விருப்பத்தைத் தேடுதல்

### செயற்பாடு

01. இறையரசு என்றால் என்ன என்பதை விளக்குக.

02. கடுகு விதை, புளித்தமா, விதைப்பவனின் உவமைக்கூடாக முன்வைக்கப்படும் பிரதானமான படிப்பினைகளை வரிசைப் படுத்துக.

03. இறை அரசின் வளர்ச்சிக்காக உங்களால் செய்யக்கூடிய செயல்பாடுகளின் பட்டியலைத் தருக.

# 21 இறையரசின் அடையாளமும் அற்புதங்களும்

**உலக மக்கள் அனேகர் எதிர்பார்ப்புகளோடு அவர்களின் வாழ்வைக் கொண்டு நடத்துகின்றனர். நோயாளிகள் சுகத்தையும் வாழ்க்கைப் போராட்டத்தின் மத்தியில் வாழுகின்றவர்கள் அதற்கான செலவையும் தொடர்ச்சியாக எதிர்பார்க் கின்றார்கள். துன்பம், பிரச்சினை, போராட்டத்தின் மத்தியில் வாழ்க்கையைச் செலுத்துகின்ற மக்கள் அற்புதங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். இயேசுவானவர் இறையரசின் அடையாளமாகச் செய்த அற்புதங்கள் மூலம் அனேக மக்கள் இறை சக்தியைக் கண்டுகொள்ள உள்ள முறையைக் கற்ப துவே இப் பாடத்தின் நோக்கமாகும்.**

**பரி லூக்கா** 8 : 22 -25, **லூக்கா** 8 : 40 - 42, 49 - 56, **லூக்கா** 8 : 26 - 39
**லூக்கா** 4 : 31 -37, **லூக்கா** 11 : 14 - 23, **லூக்கா** 9 : 10 -17
**லூக்கா** 7 : 11 -17, **லூக்கா** 18 : 35 - 43, **லூக்கா** 7 : 1 - 10

இயேசு இவ்வுலகில் செய்த பணிகளில் அற்புதங்களுக்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டது. அவர் அற்புதங்களைச் செய்தது இறையரசின் அடையாளத்தின் வெளிப்பாடாகும். அவர் இவைகளைச் செய்தது தனிப்பட்ட முறையில் மகிமைப் படுவதற்கோ, கௌரவப்படுத்துவதற்கோ, மனிதரைத் தன்பக்கம் திருப்புவதற்கோ அல்ல. அற்புதங்களை எதிர்பார்த்துக்கொண்டு தம் பின்னே வரவேண்டாம் என்று மக்களுக்கு கடுமையாகக் கூறுவதன் மூலமும் (மாற்கு 1: 43, 5: 4, 7: 36) தம்முடைய பெயரை வெளிப்படுத்த வேண்டாம் என்று அசுத்த ஆவிகளுக்கு கட்டளை இடுவதன் மூலமும் (மாற்கு 1:25-34, 3: 12) அது திட்டவட்டமாகக் கூறப்பட்டுள்ளன. அவர் இறையரசின் அடையாளங்களைக் காண்பித்துள்ளது, அவரிடத்தில் வருகின்ற பாமர சமுதாயத்தில் ஒதுக்கப்பட்ட மக்களின் மேல் அவருக்கு இருந்த அளவில்லாத அன்பின் வெளிப்பாடே ஆகும்.

இயேசு அற்புதங்கள் பல செய்திருக்கின்றார் என்பதற்கு நற்செய்தி நூல்கள் சாட்சி பகிர்கின்றன. மத்தேயு, மாற்கு, லூக்கா போன்ற நற்செய்திகளில் இயேசு செய்த அற்புதங்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. கிரேக்க மொழியில் அற்புதங்களை ''டு நொமிஸ்'' என்று கூறினர். யோவான் நற்செய்தி நூலில் ''செமயோன்'' (அடையாளங்கள்) என்ற கிரேக்க பதத்தைப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதன் கருத்து இறைவனுடைய பெலம் அல்லது அடையாளம் என்பதாகும்.

இறையரசின் அடையாளம் எனக் கருதப்படுகின்ற அற்புதங்களை நான்கு வகைப்படுத்தலாம் அற்புதத்தின் அடையாளம்.

| சுகமளித்தல் | அசுத்த ஆவியை விரட்டுதல் | இயற்கைக்கு மேலான வல்லமை | மரித்தோர் உயிர் பெறல் |
| --- | --- | --- | --- |
| சரீர ரீதியான நோய்கள், குருடர், செவிடர், ஊமை, திமிர்வாதம், தொழுநோய் போன்ற நோய்களைக் சுகப்படுத்தல் | பேய்பிடித்தல் அசுத்த ஆவியை விரட்டுதல் | இயற்கை நியதிகளுக்கு மேலான அற்புத செயல்கள் | மரணத்திற்கு உட்பட்டவர்களுக்கு புதுவாழ்வைக் கொடுத்தல் |

நற்செய்தியில் குறிப்பிடப்பட்ட அற்புதங்கள்

| | |
| --- | --- |
| நோயாளிகளைச் சுகப்படுத்திய அற்புதங்கள் | 20 |
| தீய ஆவிகளைத் துரத்திய அற்புதங்கள் | 04 |
| இயற்கைக்கு மேலான அற்புதங்கள் | 05 |
| மரணத்திலிருந்து உயிர்ப்பித்தவை | 03 |

போன்றவை நற்செய்திகளில் குறிப்பிடப்பட்டுள்ளன.

அவ்வாறு சமநோக்கு நற்செய்திகளில் குறிப்பிடப்படாத அற்புதங்கள் யோவான் நற்செய்தியில் 20:30 இல் குறிப்பிடப்பட்டுள்ளன.

**சுகமளித்தலுக்குள் வெளிப்படுகின்ற இறையரசின் அடையாளம்.**
**லூக்கா 7:1-10, லூக்கா 18:35-43**

இயேசுவின் அனுதாபம் தொடர்ச்சியாக நோயாளிகளுக்கு கிடைக்கப்பெற்றது வித்தியாசமான நோயாளிகளை இயேசுவிடம் கொண்டு வரும்போது இறைபலத்தினால் அவர்கள் சுகம் பெற்றார்கள். பலவிதமான நோயாளிகள் சுகம் பெறும்போது இறையரசின் அடையாளங்கள் வெளிப்பட்டன.

## குணப்படுத்தலும் இறையரசின் அடையாளமும் லூக்கா 7:1-10, 18:35-43

- ★ கப்பர் நகூமில் நூற்றுக்கதிபதி தனது அதிகாரத்தை அறிந்திருந்தும் (லூக் 7:8) அவை எல்லாவற்றையும் பின்புறமாக வைத்து விட்டு தாழ்மையுடன் இறையரசின் அரசனான இயேசுவினுடைய அதிகாரத்திற்குள் பிடிக்கப்பட்டதன் மூலம் இறையரசின் குணாதிசியத்தை நூற்றுக்கதிபதி அறிந்து கொண்டார்.
- ★ அவ்வாறே அவர் பிற இனத்தவராக இருந்தபோதிலும் கடவுளின் வல்லமை பற்றி இருந்த அதிசயமான விசுவாசத்தை (லூக் 7:7) இயேசு பாராட்டினார்.

''முழு இஸ்ரயேல் மக்களிடத்திலாவது நான் இவ்வாறான விசுவாசத்தைக் காணவில்லை'' என்று இயேசுவானவர் கூறினார். இயேசுவிற்குள்ளே இருந்த அனுதாபத்தில் வளர்ச்சியடைந்த விசுவாசத்தின் மூலம் இறைவனுடைய பலத்தை அறிந்து கொண்ட நூற்றுக்கதிபதியின் பணியாளன் சுகம் பெற்றான்.

எரிகோவில் பார்வையற்ற மனிதன் சுகம் பெற்றதும் ஓர் முக்கியமான அற்புதமாகும். இந்த நிகழ்வின் முன் இயேசு தனது மரணத்தைப் பற்றி அறிக்கை செய்தவேளையில் (லூக் 18:31-34) சீடர்களின் ஆன்மீக குருடு காரணமாக சீடர்களுக்கு இறையரசிற்குள் சிலுவையின் மார்க்கத்தை விளங்கிக்கொள்ள முடியவில்லை. எரிகோவில் இருந்த குருடன் பார்வை பெற்ற சம்பவம் சீடர்களின் ஆன்மீகக் குருட்டுத்தன்மையை காண்பிக்கின்ற நிகழ்வின் அடையாளமாகக் காணலாம்.

எரிகோவில் இருந்த குருடன், தன்னுடைய தேவையை நன்றாக அறிந்திருந்தமை தெளிவாக விளக்கப்படுகின்றது. ''நாசரேத்து இயேசுவானவர் அவ்வழியே போகும் சத்தத்தைக் கேட்டு தாவீதின் புத்திரனே எனக்கு இரங்கும்'' என்று கூறி இறையரசின் அதிகாரத்திற்குள் பிடிக்கப்பட்டு அவரிடத்தில் எதிர்பார்ப்பு வைத்தான். இயேசுவிற்கு கிடைத்த இறையரசின் ஆட்சியை சீடர்கள் விளங்கிக் கொள்ள முடியாமல் போனாலும் இக் குருடன் அதை விளங்கிக்கொண்டு தேவ பெலத்தைக் காண ஈடுபடுவதைக் காணமுடிகின்றன. அவன் தன்னைச் சுற்றியிருந்த தடைகள் எல்லாவற்றுக்கும் அப்பால் போய் இயேசு தனக்குச் செய்த இறையரசின் அடையாளத்தை வெளிப்படுத்த சந்தர்ப்பம் கிடைத்தது. அவனுடைய விசுவாசத்தின் ஊடாக இயேசுவின் அனுதாபத்திற்கு உள்ளான அவன், இறைபெலத்தை அனுபவித்தது அதிசயமானதாகும். மக்கள் இறையரசின் அடையாளத்தைக் கண்டு கடவுளைப் போற்றும்படி குருடன் சாட்சியாக இருந்தான் என்பதை லூக்கா நற்செய்தியில் காணலாம்.

இதன்படி இறையரசு சுகமளிப்பது தொடர்பாக இறைவனுடைய பெலத்தின் அடையாளத்தை கண்டு கொள்வதற்காக.

- ★ இயேசுவின் அனுதாபத்திற்கு உள்ளாக்கப்படுதல்
- ★ இறை வல்லமையை காண்பதற்கு ஆயத்தமாதல்
- ★ இயேசுவினுடைய அதிகாரத்திற்கும் ஆளுகைக்கும் உட்படல்
- ★ இயேசுவினுடைய திடமான நம்பிக்கைக்குள்ளே தங்கியிருத்தல்

**அசுத்த ஆவியை விரட்டுவதன் மூலம் வெளிப்படுத்தப்படுகின்ற இறை அதிகாரம் லூக் 4:31 -37, லூக் 8: 25 - 39, லூக் 11:14 - 23**

இயேசுவினுடைய பணியிலே அசுத்த ஆவியை விரட்டுவதும், தீய சக்தியை தோல்வியடையச் செய்வதும் அநேகம் காணப்படுகின்றன. இறையரசிற்குள் இயேசுவின் அதிகாரம் எங்குள்ளதோ அங்கே தீமைக்கு எந்தவொரு இடமும் கிடைக்க மாட்டாது என்பதை இயேசு இங்கு உறுதிப்படுத்துகின்றார்.

**அசுத்த ஆவிகளுக்கு எதிரான இறை அதிகாரம் லூக்கா 4:31-37, 8:25-39, 11:14-23**

- ★ அலகை இயேசுவை நன்கு அறிந்திருந்தான்.
- ★ இயேசுவின் அதிகாரத்தை பற்றி ஓர் பயம் அலகைக்குள் இருந்தது.
- ★ இயேசுவின் அதிகாரத்தின் முன் சாத்தான் தோல்வி காணுதல்.
- ★ இயேசு இறையரசிற்குரிய அடையாளத்தை வெளிப்படுத்துவதன் மூலம் முழுமையான சுதந்திரத்தைப் பெற்றுக் கொள்ளுதல்.

இவை, இந்த சம்பவம் நமக்கு வெளிப்படுத்தும் உண்மையாகும்.

**லூக்கா** 8 : 25 -39

- ★ கடவுளின் வல்லமைக்கு முன் சாத்தானின் பெலம் ஒன்றுமில்லாமல் போகும்
- ★ தீய சக்தியினுடைய கட்டுகள் அவிழ்வதன் மூலமாக விடுதலை கிடைக்கும்
- ★ எதிர்பாராத விதத்திலே மக்கள் இறையரசின் உண்மைகளைத் தெரிந்து கொள்ள சந்தர்ப்பம் கிடைக்கும்
- ★ இறையரசின் அடையாளம் மூலம் கடவுளின் அதிகாரம் பரவுகின்றது.

இறைவல்லமை மூலம் தீய சக்திகளிடமிருந்து விடுதலை பெறுவதற்காக இறையரசின் அரசனான இயேசுவோடு நெருங்கிய உறவுக்கு உட்படுதல் வேண்டும். அதற்கு அத்தியாவசியமானவை

- ★ இயேசுவுக்கு கீழ்ப்படிதல்
- ★ இயேசுவின் சித்தத்திற்கு ஏற்ற பிரதிநடத்தையைக் கொண்டிருத்தல்
- ★ மனமாற்றம் அடைய ஆயத்தமாயிருத்தல்
- ★ இயேசுவில் தளராத நம்பிக்கை உள்ளவராதல்

தேவ பெலத்தோடு தீய பலத்தை அகற்றுகின்ற இறையரசின் அடையாளத்தைக் கண்டு சிலர் இயேசுவினூடாக வெளிப்படும் இறைசக்தியை விமர்சனம் செய்தார்கள்.

அதாவது சாத்தானின் சக்தியை சாத்தானால் விரட்ட முடியுமா?

- ★ இறையரசில் வீணான தர்க்கங்களுக்கு இடமளிக்கப்படாது
- ★ இறையரசின் அடையாளங்கள் மூலமாக தேவனுடைய பெலம் வெளிப்படும்
- ★ இறையரசினுள், இறைவனுடையபெலத்தை எல்லோரும் கண்டு கொள்வது மிகவும் முக்கியமாகும்
- ★ இறையரசில் நன்மை மட்டுமே அரசாளும்

இயற்கைக்கு அப்பால் தேவனுடைய பெலம் செயல்படும் அற்புதங்கள்

**இயற்கைக்கு மேலான இறை அதிகாரம்**
**லூக்கா** 8:22-25, 9:10-17

இயேசு, கடவுளின் அதிகாரத்தைப் பற்றியுள்ள சத்தியத்தை வெளிப்படுத்தினார். தமது பணியை அர்த்தமுள்ளதாக்கியதற்கு காரணம் இயற்கையை நோக்கி

அதிகாரத்தைக் காண்பிப்பதன் மூலமாகும். அவர் இயற்கையை நோக்கி அதிகாரம் செலுத்தும் ஒரே நபர் தாமே எனக் காண்பித்துள்ளார்.

- ★ இயற்கை இயேசுவின் அதிகாரத்திற்கு அடி பணிகின்றது
- ★ ஆண்டவரின் பணிக்கு வந்த சீடருக்கு இதை விளங்கிக் கொள்ள முடியாமல் போய்விட்டது
- ★ இறையரசில் இறைபெலத்தைக் கண்டு கொள்ள விசுவாசம் அத்தியாவசிய சாதனமாகும்
- ★ இறையரசின் அதிகாரத்தில் வாழ்வின் புயலை வெற்றி கொள்ள அமைதியாகத் இறைபெலத்தைக் கண்டுகொள்வதற்கு கடவுள் எல்லோரையும் அழைக்கின்றார்

இயேசு இயற்கைக்கு அப்பால் செயல்படும் இறை வல்லமையின் அடையாளத்தைக் காண்பிக்கும் முக்கியமான சம்பவம் ஐயாயிரம் பேருக்கு உணவளித்ததாகும். லூக்கா கூறுவதுபோல் இது நடைபெற்றது இயேசுவும் அவரது சீடர்களும் இளைப்பாறுவதற்கு பெத்சாயிதாவை நோக்கிப் சென்ற வேளையில் ஆகும். ஆனாலும் அவரை நோக்கி வந்த திரளான ஜனங்களை கண்டு, ஓய்வு எடுப்பதை நிறுத்தி விட்டு, இறையரசின் விழுமியங்களைப் போதிக்கத் தொடங்கினார். அங்கே மக்களுக்கு ஆகாரம் கொடுக்கும் தேவை ஏற்பட்டதனால், அவர்களின் பசியைப் போக்க வழி முறைகளைத் தேடினார்.

இயேசு அந்த செயலை செய்யும் முன் அதற்காக விசுவாசத்துடன் பங்களிப்புச் செய்யும்படி சீடர்களுக்கு அழைப்பு விடுத்தார். அவர்களுடைய விசுவாசமில்லாத தன்மையால் அந்த சவாலை அவர்களால் ஏற்க முடியவில்லை. ஆனாலும் அவர் மீண்டும் மறக்க முடியாத பாடத்தைக் கற்பித்தார். கடவுளின் அதிகாரத்தினால் இயற்கைக்கு அப்பாலான நம்பிக்கை குறித்து அடையாளத்தை எடுத்துக்காட்டினார்.

- ★ இறை அதிகாரத்தில் நம்பிக்கை வைத்தல்
- ★ சிறிய செயலால் பெரிய காரியம் செய்தல்
- ★ முறையாகவும் ஒழுங்காகவும் காரியங்களைச் செய்தல்
- ★ தொடர்ச்சியாக இறைவனுக்கு நன்றி செலுத்துதல்
- ★ வீண் விரயமாகாமல் செயற்படுதல்

இறைவல்லமையின் அடையாளம் மூலம் அவர் வழிநடத்தினார்

இந்த அடையாளத்தின் மூலம் அவருக்கு இயற்கை கூட அடிபணிந்து, அவர் இயற்கையின் படைப்பாளரும். இறையரசின் அதிகாரம் உள்ளவர் என்றும் எல்லாம் இறைபெலத்தாலே செய்ய முடியும் என்று காட்டினார்.

இறையரசின் அரசரான இயேசுவுக்கு எல்லாம் செய்யமுடியும் என்றும்

அவருக்குள்ளே எல்லாப் பிரச்சினைக்கும் விடை இருக்கின்றது என்பதை நாம் நம்புவோம்.

## மரணத்திலிருந்து உயிர்த்தெழச்செய்யும் இறைவல்லமையின் அடையாளம்

**லூக்கா** 7 : 11 - 17, **லூக்கா** 8 : 40 - 42, 49 - 56

இறை அதிகாரத்தைச் காண்பித்து இயேசு செய்த மிகப்பெரிய அதிசயங்களென மரணத்தில் இருந்து உயிர்த்தெழச் செய்த சம்பவங்களைக் குறிப்பிடலாம். அவற்றுள் இரண்டை லூக்கா நற்செய்தி நூலில் காணலாம்.

இறைவல்லமையின் அடையாளங்கள் இயேசுவின் மூலம் எடுத்துக் காண்பிக்கும்போது அந்த நபருடைய அல்லது அவருடைய நண்பர் மூலம் வேண்டுதல் செய்தலாகும். நயீன் ஊர் விதவையின் மகன் மரணத்திலிருந்து உயிர்த்தெழும்பியது அந்தக் குடும்பத்தின் ஒருவர் மூலமாகவோ அல்லது அவரது இனத்தார் மூலமாகவோ வேண்டுதல் செய்யப்பட்டது. ஆனாலும் ஒருவரும் எதிர்பாராத வேளையில் இயேசு தெரியாத ஒருவருக்கு இறைவல்லமையின் அடையாளத்தைச் செய்தார். அந்த விதவையின் மீது கொண்டிருந்த அனுதாபத்தின் மூலம் அவருடைய மகனுக்கு வாழ்வு கொடுத்தார்.

அழுதலை நிறுத்துங்கள் - கீழ்ப்படிதல்

இளைஞனே எழுந்திரு - எதிர்பார்ப்பு

கடவுள் தமது ஜனங்களை
விடுவிக்க வந்தார் - துதி செலுத்துதல்

நயீன் ஊர் விதவையின் மகன் மரணத்திலிருந்து உயிர்பெற்ற அற்புதம் மூலமாய் கடவுளின் அதிகாரத்தை, இயேசுவானவர் அதை எடுத்துக் காட்டும் விதம்.

லூக்கா முன்வைக்கும் இயேசு செய்த இரண்டாவது மரணத்திலிருந்து உயிர்த்தெழும்பும் அற்புதமானது யவீருவின் மகளை உயிர்ப்பித்த சம்பவம் ஆகும்.

- ★ சிறுமி இறந்து விட்டாள் என்று தெரிந்தும் வீட்டினுள் பிரவேசித்தல்
- ★ மரணமானது நித்திரைக்கு ஒப்பிடப்படல்
- ★ சிறுமியின் பெற்றோரைத் தைரியப்படுத்துதல்
- ★ அவிசுவாசிகள் இயேசுவை ஏளனம் செய்தல்

***''பயப்பட வேண்டாம், விசுவாசத்துடன் இருங்கள், அவள் சுகமடைவாள்''*** - அற்புதத்திற்கு தேவையான விசுவாசத்தில் பெலப்படுத்துதல்''

***''சிறுமியே எழுந்திரு''*** - *தற்காலிக மரண நித்திரையிலிருந்து இறைவல்லமை மூலம் திரும்பவும் வாழ்வுக்கு கொண்டு வருதல்''*

*யவீருவின் மகளை மரணத்திலிருந்து உயிரோடு எழுப்புதல்*

↑

*மூலம்*

↓

*யவீருவின்* *அவிசுவாசிகளின்* *சீடர்களின்*

*நம்பிக்கையை வலுப்படுத்த அவர் செயற்பட்டார்.*

**இறையரசில் இறைவல்லமை நிறைந்த இயேசுவை ஏற்றுக் கொள்கின்ற யாவருக்கும் அற்புதமான விதத்திலே புது வாழ்வு பெற்று இம் மரணத்திலிருந்து உயிர்த்தெழுதல் அடையாளப்படுகின்றது.**

*இறைபலத்தின் மகிமையைக் காண்பிக்கின்ற மக்கள் இறையரசிற்கு சமீபமாவதற்கு தேவையான அனுபவத்தை பெறுவதற்காக நாம் செய்ய வேண்டியவை*

- ★ *இறையரசின் அரசனாகிய இயேசுவின் அதிகாரத்தை விசுவாசத்தினூடாக ஏற்றுக்கொள்ளல்*
- ★ *அவருடைய இறைபலத்தை விசுவாசத்தினூடாகப் பற்றிக் கொள்ள முயற்சி செய்தல்*
- ★ *இயேசுவினுடைய அனுதாபத்திற்கு உட்படுவதற்கான செயல்பாடு*
- ★ *வாழ்க்கையின் ஒவ்வொரு நேரமும் இயேசுவிற்குள்ளே இறையரசின் அற்புதங்களைக் கண்டு கொள்ள நாங்கள் முற்படுவோம்.*

### செயற்பாடுகள்

1) *இயேசு செய்த அற்புதங்கள் பற்றி சிறிய புத்தகத்தைத் தயாரிக்கவும்.*

2) *உமது வாழ்வில் அற்புதங்களை அனுபவிப்பதற்கு நீர் செயல் பட வேண்டிய முறையையும் உம்மில் வளரவேண்டிய குணவியல்புகளையும் குறிப்பிடவும்.*

# 22 இறையரசின் கொள்கை

**இறையரசின் பிரஜைகள் இறையரசின் கொள்கைகளுக்கு அமையவே வாழ வேண்டும். அப்படியானால் இறைவனுடைய வேண்டுதலுக்கு ஏற்ற வகையில் வாழ வேண்டும் என்றும் கடவுளின் கோட்பாடுகளுக்கும் எதிர்பார்ப்புகளுக்கும் இணங்க இறையரசின் பிள்ளைகள் வாழ வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்படுகின்றன. தேவ இராட்சியின் பிரஜைகளினுடைய கொள்கைகளை கடைப்பிடித்து அதற்கு ஏற்ப வாழ்வது இந்தப் பாடத் தினூடாக முன்வைக்கப்படும் முக்கிய கருத்தாகும்.**

**லூக்** 14 : 15 - 24, **லூக்** 15 : 1 - 32

### ஒரு நாட்டிற்கு கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் மக்கள் அவசியம்

**கொள்கை உள்ள மனிதன் ஒழுக்கமுள்ளவனாவான்**

**அனைத்துப் பிரஜைகளுக்கும் வாழ்வைப் பற்றிய எதிர்பார்ப்பு உண்டு**

**கொள்கைகளை ஒரு போதும் காட்டிக் கொடுக்க கூடாது**

**சமூதாய எதிர்பார்புகளுக்கு ஏற்ப வாழ்வது அதன் அங்கத்தவர்களின் பொறுப்பாகும்.**

**பிள்ளைகள் கொள்கைகளை கடைப்பிடிக்கும் வழியில் வாழ்வதற்கு கற்றுக் கொடுக்க வேண்டும்.**

இவ்வாறான கூற்றுகளை அதிகம் கேட்டிருப்பீர்கள் என்றால் மிகையாகாது. எதிர்பார்க்கும் நிலையை அடைவதற்காக வகுக்கப்பட்ட வழிகாட்டல்களை கொள்கை எனலாம். பல்வேறு மக்களுக்கு பலவிதமான கொள்கைகள் உள்ளன. அவ்வாறே பல விதமான நாடுகளிலும் அவர்களுக்கு உகந்த கொள்கைகள் உள்ளன. கொள்கைக்குள் வாழ்வைக் கட்டியெழுப்பும்போது அதை ஒழுக்கமுள்ளதாக அமைத்துக் கொள்ளலாம்.

***இறையரசிற்கு கொள்கைகள் உள்ளனவா?*** இறையரசிற்கு ஏற்ற கொள்கைகள் பல உள்ளன.

***இறையரசின் கொள்கைகள் முன்வைக்கப்பட்டது யாரால்?***

இயேசு தமது பணியின்போது இந்தக் கொள்கைகளையும் எதிர்பார்ப்புகளையும் பற்றி சீடர்களுக்கு கூறியுள்ளார்.

## எந்த ஊடகத்தினூடாக இறையரசின் கொள்கைகள் வெளியிடப்பட்டது?

இயேசு போதனைக்காக பயன்படுத்திய முறைகளில் மிகவும் பிரபல்யமான ஊடகமான உவமைகள் மூலம் இறையரசின் கொள்கைகள், எதிர்பார்ப்புகள் முன்வைக்கப்பட்டன.

**பெரிய விருந்தைப் பற்றிய உவமையும் இறையரசின் கொள்கையும் எதிர்பார்ப்பும்**
**லூக்** 14 : 15 -24 (**மத்தேயு** 22 : 1 -10)

### பின்னணி

இயேசு பரிசேயர் ஒருவரின் வீட்டிலே உணவருந்திக் கொண்டிருந்த சந்தர்ப்பத்தில் பெரிய விருந்து உவமையைப் பற்றிக் கூறினார். (லூக் 14 : 1 -12) அந்த விருந்தில் பங்கு கொண்ட ஒருவன் ''கடவுளுடைய இராட்சியத்திலே உணவு உண்பவன் பாக்கியவான்'' என கூறிய வேளையிலே இயேசு பெரிய விருந்தைப் பற்றிய உவமையைக் கூறினார்.

இறையரசு முழுமை அடைகின்ற தினத்திலே விருந்து உபசாரத்திலே பங்கு கொள்ள ஓர் சந்தர்ப்பம் கிடைக்குமென யூத மக்கள் விசுவாசித்தார்கள். அப்படிப்பட்ட நம்பிக்கையில் இருந்த யூத மக்கள் மத்தியிலே இயேசு முன்வைத்த இந்தப் பெரிய விருந்து உபசாரம் பற்றிய உவமை பெரிய சவாலைத் தோற்றுவித்தது.

## உவமையின் பிரதான அங்கங்கள்




இந்த உவமையைக் கூறும் மத்தேயு, லூக்காவில் குறிப்பிடப்படாத ஒரு விடயத்தையும் முன்வைக்கின்றார். அவ்விடயமாவது,

திருமணப்பந்தல் விருந்தாளிகளால் நிறைந்திருந்தன. திருமண ஆடை அணியாத ஓர் விருந்தாளி அங்கே இருந்தார். அவர் தொடர்பாக அரசன் கடும் நடவடிக்கை எடுத்தார்.

அந்த காலத்திலே சாதாரண பழக்கம் அரசினால் அழைக்கப்படுகின்ற விருந்தினருக்கு திருமண ஆடை வழங்கப்படும். அவ்வாறு ''திருமண உடையை நிராகரித்தல் அவமானம் என்று குறிக்கப் படுகின்றது''.

## அதனூடாக கொடுக்கப்படும் உண்மைகள்

கடவுளுடைய திருமணவிருந்திற்கு அனேகர் அழைக்கப்பட்டிருந்தாலும், நீதி, இரட்சிப்பு என்ற திருமண உடையை அணியாத யாருக்கும் திருமண வைபவத்திலே பங்கு கொள்ள இடமளிக்க மாட்டாது.

திருமண விருந்து என்ற உவமையில் வெளிக்கொண்டுவரப்படும் கொள்கைகளை நாங்கள் இவ்வாறு ஒழுங்குபடுத்துவோம்.

1. இறையரசு எல்லாருக்கும் திறந்திருக்கும்
2. கடவுளுடைய தீர்மானத்திற்கு ஏற்ப இறையரசு முழுமை அடையும்
3. கடவுளால் மட்டுமே தேவராட்சியத்துக்கான அழைப்பு விடுக் கப்படுகின்றது
4. உலக பிரகாரமான காரணத்தினால் கடவுளுடைய அழைப்பை நிராகரிக்கும் மக்கள் சமூகம் உலகிலே வசிக்கின்றார்கள்
5. கடவுளுடைய அழைப்பை நிராகரிக்கின்றவர்களுக்கு அதனுள் பிரவே சிக்கும் உரிமை நிரந்தரமாக அற்றுப்போய்விடும்
6. சமூகத்தால் நிராகரிக்கப்பட்டதன் விளைவாக, தாங்கள் இறையரசிற்கும் பொருத்தமற்றவர்கள் என்று நினைத்தாலும் அதனால் கடவுளோடு சிறந்த உறவுக்குள் இருக்கின்றவர்களுக்கு இறையரசிலே விசேட அழைப்பு கிடைக்கப்பெறும்
7. இறையரசின் அழைப்பைப் பெற்றவர்கள் நீதியிலும், இரட்சிப்பிலும் அலங்கரித்து இருக்க வேண்டும்.

## இறையரசின் கொள்கைகள் , அபிலாசைகளை, வெளிப்படுத்தும் உவமைகள்

## காணாமல் போன ஆடு, காணாமல் போன காசு, காணாமல் போன மகன் பற்றிய உவமைகள்

### *உவமைகளுக்கான பின்னனி*

*ஆயக்காரனும் பரிசேயனும் பற்றிய உவமை*

*ஒரு நாள் ஆயக்காரர்களும் பாவிகளும் இயேசுவின் போதனையைக் கேட்க வந்தபோது பரிசேயர்களும் சதுசேயரும் அவர் பாவிகளை ஏற்றுக் கொண்டு அவர்களோடு உண்டு, குடிக்கின்றார் என்று குற்றம் சுமத்தியபோது இயேசு இந்த உவமைகளை அவர்களுக்கு கூறினார்.*

*(லூக் 15:1-2)*

| *ஆயக்காரர்* | *பாவிகள்* |
|---|---|
| ↓ | ↓ |
| *உரோம அரசுக்காக வரிவசூலித்ததன் மூலம் யூத இனத்தவரின் எதிர்ப்புக் குள்ளான, யூத சமுகத்தால் ஒதுக்கப் பட்ட ஓர் மக்கள் கூட்டம்.* | *பல காரணங்களினால் (ஏழ்மைத்தன்மை, நோய்) ஜெப ஆலயங்களுக்கு ஏற்றுக்கொள் ளப்படாத ஓர் மக்கள் கூட்டம்.* |

*இயேசு இந்த மக்கள் மத்தியில் மிகவும் பிரபல்யம் அடைந்திருந்ததாக நற் செய்தி நூல்களிலே கூறப்பட்டுள்ளது. அதற்குக் காரணம் அவர்களுக்கு தொடர்சியாக காட்டிய தயவும் கருணையும் அவர்களை ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு அவர்களு டைய போதனைகளைக் கேட்க இடமளித்ததே ஆகும். அவர் தம்மிடத்தில் வந்த ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் மனம் திருப்புதலுக்கான வழியைக் கூறியிருந்தார்.*

# காணாமல் போன ஆட்டின் உவமை




இந்தக் கதையிலே கூறப்படுகின்ற மனிதனுக்கு நூறு ஆடுகளைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு இருந்தது. ஆடுகள் புத்தியில்லாதவை எனக் கணிக்கப்பட்டன. அதனால் அன்றைய சமுதாயத்தில் மந்தைகள் தொழுவத்தில் இருந்து வெளியே வந்து முட்செடிகளில் சிக்கிக் கொள்வது, விழுந்து காயப்படுவது, காணாமற்போன மந்தையை தேடி அடைய முடியாமல் போவது போன்றவை சாதாரண நிகழ்வுகளாகும்.

இவ்வாறான நேரங்களில் ஆடு மேய்ப்பன் மற்றைய ஆடுகளை தொழுவத்தில் விட்டுவிட்டு, தொலைந்த ஆட்டைத் தேடிப் போவது வழக்கம். ஆகையால் தொலைந்த ஆட்டின் உவமையில் வெளிக்காட்டப்படுகின்ற இறையரசின் கொள்கைகள், எதிர்பார்ப்புகள் என்னவெனில் சமூதாயத்தில் தொலைந்து போயுள்ள அனைத்து பாவிகளான மனிதர்களையும் இறைவனுடைய அரவணைப்புக்குள் கொண்டுவந்து அதனூடாக இறையரசிக்குள் மனம் திரும்புகின்ற அனுபவம் பெறச் செய்தல் ஆகும்.

- ★ சகல பாவிகளும் உலகத்தினுள் பாவத்திலே விழுந்து விடாதபடி அவர்களைத் தேடிப்போய் அவர்களை மீண்டும் இறையரசுக்குள் சேர்ப்பதாகும்.

- ★ காணாமற்போன பாவிகள் மனம் திரும்பி மீண்டும் வருவதனால் பரிபூரண நிலைக்கு உள்ளாக்கப்படுவதோடு இறையரசிற்குள் களி கூரும் அனுபவத்தைப் பெறலாம்.

## காணாமற்போன வெள்ளிக்காசு பற்றிய உவமை (லூக்கா 15 : 8-10)




புராதன காலத்தில் இஸ்ரயேலின் சாதாரண பெண்களுக்கு வெள்ளிக்காசு பண ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் மிகவும் பெறுமதியான சொத்தாக காணப்பட்டது. அவர்களின் திருமணத்தின்போது வெள்ளிக்காசு (நெற்றிப் பட்டியாக) அணிவது வழக்கமானது. அவர்கள் வாழ்ந்த சாதாரண இருளான வீட்டிலே காசு தொலைந்தால் கண்டுபிடிப்பது இலகுவல்ல . அவ்வாறு தொலைந்த பொருளை தேடுவதற்கு நீண்ட நேரம் எடுக்கப்பட்டது. விளக்கைக் கொழுத்தி வீட்டின் ஓர் மூலையில் இருந்து அடுத்த மூலை வரைக்கும் வெள்ளிக் காசை தேடுவதற்கு அதிகமான நேரத்தை செலவிட வேண்டிவரும்.

இயேசுவின் பணி ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் தொடர்ச்சியாக திறந்தே இருந்தது. அவர்கள் அநேகமான நேரங்களில் அவரைத் தேடி வந்தார்கள், அவ்வாறான வேளைகளில் அவர் இறையரசின் விழுமியங்களை வெளிக்கொண்டுவர விசேட பணிகளை முன்னெடுத்தார். எப்பொழுதும் அவர்களுக்கு கடவுளுடைய அன்பையும், தயவையும் காட்டி, அதனூடாக அவர்களை மனம் திரும்பிய ஓர் வாழ்வை வாழ வழிகாட்டினார். இயேசு தொடர்ந்தும் இச்செயற்பாடுகளை முன்னெடுத்து இறையரசிற்குள் அவர்கள் யாவரும் மிகவும் பெறுமதியான சொத்துக்கள் என ஏற்றுக் கொள்ளப்பட்டனர். அத்துடன் தொலைந்து போன காசைப் பற்றிய உவமை மூலம் அவர் பின்வரும் கொள்கைகளையும் அபிலாசைகளையும் முன்வைத்தார்.

- ★ எல்லா நபர்களும் இறையரசிலே மிகவும் பெறுமதியான சொத்து என்று கணிக்கப்படுவர்.

- ★ யாதொரு மனிதரும் பாவமான வாழ்விலே விழுந்து விட்டாலும் திரும்பவும் மனம்திரும்பிய வாழ்வுக்குள் இட்டுச் செல்வதன் மூலம் இறையரசில் மிகுந்த சந்தோஷம் ஏற்படும்.

# காணாமல் போன மகனின் உவமை (லூக் 15 : 11 - 32)




காணாமல் போன மகனின் உவமையில் பிரதானமான சம்பவங்கள் பின்வருமாறு:-

★ இளைய மகன் தகப்பனை விட்டுப்பிரிந்து செல்வதும்

★ திரும்பவும் இளையமகன் தகப்பனிடம் வந்து சேர்வதும்

முதலாவது சம்பவத்துடன் இங்கே குறிப்பிடுகின்ற இளைய மகனுக்கு தகப்பனின் எதுவித உதவியும் இல்லாமல் தனது வாழ்வைக் கொண்டு நடத்த முடியும் என உணர்ந்தபோது அவனுக்கு இரண்டு தேவைகள் ஏற்பட்டன.

| பணம் | சுதந்திரம் |
|---|---|
| தந்தையிடமிருந்து தனக்குச் சொந்தமான சொத்தைப் பிரித்துப் பெற்றுக் கொண்டதன் மூலம் தனது பணத்தேவையைப் பூர்த்தி செய்து கொண்டான். இஸ்ரயேல் சமுதாயத்திலே மகனுக்கு தகப்பனிடமிருந்து உரித்தான சொத்தைப் பெற்றுக் கொள்வதற்கு தகப்பன் மரிக்கும் வரை காத்திருக்க வேண்டியதில்லை. | சுதந்திரத்தைப் பெற்றுக் கொள்ளுவதற்கு தகப்பனிடமிருந்து பிரிந்து செல்ல வேண்டும். அதற்காக அவன் தூர தேசத்திற்குச் சென்றதாக குறிப்பிடப்படுகின்றது. சுதந்திரத்துடன் வாழ்க்கையின் அதிக சந்தோஷத்தை அனுபவிப்பதே அவனுடைய அபிப்பிராயம் எனக் கூறப்படுகின்றது. |

ஆனாலும் அவன் எதிர்பார்த்த வாழ்க்கையின் சந்தோஷம் அவனுக்கு கிடைக்கவில்லை. அதற்கு மாறாக தடைகளுக்கு முகம் கொடுக்க நேர்ந்தது. அப்படி யானால் எல்லாம் தொலைந்து பஞ்சத்திற்கு முகம் கொடுக்க நேரிட்டது. தனது வாழ்க்கையின் கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டான்.

பாவத்தின் சுபாவத்திலிருந்து விடுபட்டு, மனம்திரும்பி வரும் இந்த நிலமை யுடன் அவனுடைய மனம் திரும்புதல் வாழ்க்கைக்கு அடித்தளமாய் அமைகிறது.

★ சரியான உணர்வு மனம் திரும்புதலாகும்

★ அவன் தான் இருக்கின்ற நிலையை உணர்கிறான்

★ தகப்பனிடம் சென்று மன்னிப்பைப் பெற்று தமது வாழ்வை மாற்றிக் கொள்வதற்குத் தீர்மானிக்கின்றான். இரண்டாவது கட்டம் ஆரம்ப மாகின்றது. இளையமகன் திரும்பி தகப்பனுடைய வீட்டிற்குப் பயணம் செய்கிறான்.

இளைய மகன் திரும்பவும் வரும்வரை வழியில் பார்த்துக் கொண்டிருக்கும் தகப்பனுடைய அளவில்லாத அன்பின் நிமித்தம் மகனை ஏற்றுகொள்கிறார். பெரிய ஓர் விழாவை ஆயத்தப்படுத்துகிறார். ஆனால் இந்த செயலைக் கேட்டவுடனே அதிக கோபத்திற்கு ஆளான மூத்த மகனுடைய செயற்பாடு தகப்பனுக்கு வேதனையைக் கொண்டு வந்திருக்கலாம்.

ஒருவன் கொடூரமான பாவப் பாதையில் பயணித்து திரும்பவும் இறையரசிற் குள் வரும்போது இறைவன் அளவில்லா அன்போடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பதை இந்த உவமை மூலம் இயேசு போதிக்கிறார்.

அன்பை மறந்துவிட்டு, சட்டதிட்டங்களை மட்டும் கடைபிடிப்பதன் மூலம் தங்களைப் பரிசுத்தவான்கள் என்று கருதுவோர் பாவிகள் மீண்டும் மனம் திரும்பி வரும்போது அவர்களை இறையரசிற்குள் ஏற்றுக் கொள்ளும் இந்த செயற்பாட்டிற்கு எதிர்ப்பைத் தெரிவிக்க சந்தர்ப்பம் உள்ளது. ஆனால் செய்ய வேண்டியது தொடர்ந்தும் சரியானதைச் செய்வதே இறையரசிற்குள் கடவுளுடைய அளவில்லா அன்பை அனுபவித்தலாகும்.

காணாமல் போன மகனின் உவமைக்கூடாக வெளிப்படுகின்ற இறையரசின் கொள்கைகள், அபிலாசைகள் அதிகம் உண்டு.

* எங்களுடைய பாவத்தினாலும் கீழ்படியாமையாலும் நாங்கள் எவ்வளவோ தூரம் கடவுளிடமிருந்து விலகிப் போனாலும் சதா காலமும் அவர் எங்களின் பிதாவாகவும் நாங்கள் அவரின் பிள்ளைகளாகவும் இருக்கின்றோம்.

* பாவத்திலிருந்து மீண்டு அவரிடத்திற்கு வருகின்றபோது கடவுள் நாம் வரும்வரை காத்திருக்கின்றார்.

* கடவுளுடைய அளவில்லாத அன்பை எல்லாப் பாவிகளும் அனுபவிப்பதும் இறையரசின் எதிர்பார்ப்பாகும்.

* நாங்கள் கடவுளுடைய அன்பு பற்றி தொடர்ச்சியாக மாறுத்தரம் காண்பிப்பதோடு, அந்த அன்பை அனுபவித்து பிறருக்கு அந்த அன்பின் நற்செய்தியைக் கொண்டு செல்ல வேண்டும்.

இறையரசிலே எங்களுக்கு கொடுக்கப்படும் செயற்பாடுகளாவன கடவுளுடைய அன்பை தொடர்ந்து அனுபவித்து நாங்கள் வாழுகின்ற சமுதாயத்திலே தொலைந்தவர்களிடத்திலே தயவைக்காட்டி மனம் திரும்புதல் மூலம் மீண்டும் இறையரசிற்குள்ளே கொண்டு வருவது, எம் யாவருக்கும் கொடுக்கப்பட்டுள்ள பொறுப்பு என்பதை மறந்துவிடக் கூடாது.

**செயற்பாடுகள்**

1. கிறிஸ்தவ பிள்ளையாக
2. கிறிஸ்தவ சபையின் அங்கத்தவராக
3. கிறிஸ்தவ சமூகப் பிரஜையாக
   (நீர் கடைப்பிடிக்கக் கூடிய இறையரசின் கொள்கைகள் ஐந்தை ஒவ்வொன்றுக்கும் எழுதுக).

# 23 இறையரசின் பிரஜைகள்

இந்த உலகில் வாழ்கின்ற எல்லா நபர்களும் தாம் பிறந்த நாட்டிலே பிரஜைகள் என்று கணிக்கப்படுவார்கள். அவ்வாறே ஒரு நாட்டில் பிரஜையாக இருக்கின்ற எல்லா நபர்களும் அந்த அரசின் மூலம் தமக்கு உரித்தாகின்ற சில சில வரப்பிரசாதங்களுக்கு உரிமை கூறலாம்.

அவ்வாறே எல்லா பிரஜைகளும் தங்கள் அரசுக்கு செய்ய வேண்டிய கடமைகளும் பொறுப்புகளும் உள்ளன. அரச சட்டத்திட்டங்களுக்கு மதிப்பளிக்கவும் அவற்றைக் கடைப்பிடிக்கவும் அவர்கள் கட்டாயமாக கட்டுப்பட்டுள்ளார்கள்.

இறையரசின் பிரஜாவுரிமையை பெற்றுக் கொள்வதே கிறிஸ்தவர் களாகிய எமது அபிலாசை. அது நாங்கள் பெற்றுக் கொள்ளக் கூடிய உயர்ந்த வரப்பிரசாதமாகும். இவ்வாறான உயர்ந்த வரப்பிரசாதத்தை உரிமையாக்கிக் கொள்ள நாங்கள் செய்யவேண்டிய பணிகள் உண்டு. இந்தப் பாடத்தின் மூலம் நாங்கள் முயற்சி எடுப்பது இறையரசின் பிரஜை என்ற உயர்வான வரப்பிர சாதத்தை உரிமையாக்கிக் கொள்ள நாங்கள் செய்யவேண்டிய பணியை கண்டு கொள்வதாகும்.

**லூக்** 22 : 24 - 30, **லூக்** 10 25 - 37, **லூக்** 16 1-9, **லூக்** 19 11-27




***இறையரசின் பிரஜைக்கான முன்மாதிரியான தலைமைத்துவம்***

*சாதாரண உலகத்தில் தலைமைத்துவத்தின் அமைப்பு*




- தலைவர் கட்டளை இடுபவர்
- அதிகாரம் உள்ளவர்
- கீழ் உள்ளோர் தலைமைத்துவத்திற்கு சேவை செய்வர்
- தலைவர், பணியைப் பெற்றுக் கொள்வர்

## இறையரசின் பிரஜைக்கான தலைமைத்துவத்திற்கான அமைப்பு




- ஒற்றுமையுடன் செயல்படுவர்
- அன்பின் அதிகாரத்தை ஏற்பர்
- தலைவர், இருப்போருக்கு பணி செய்ய கட்டுப்பட்டுள்ளார்
- கீழே உள்ளோர் பணியைப் பெறுவர்

இயேசு கூறியவாறு பிறஇன தலைவர்கள் கடைப்பிடித்தது, முதலாவதாக குறிப்பிடப்பட்ட சாதாரண உலகத்திலே நடைமுறையில் இருக்கின்ற தலைமைத்துவ அமைப்பு. இதற்கு மாறாக வித்தியாசமான செயற்பாட்டிற்கு ஈடுப்படுவதற்கு இயேசு தமது சீடர்களுக்கு அழைப்பு விடுத்தார். இறையரசின் தலைமைத்துவம் சம்பந்தமான ஆலோசனைகள் சில பின்வருமாறு.

- சிரேஷ்ட நபர் சிறியவனாவான்
- தலைவராக இருப்பவர் பணியாளராக செயல்படுவார்
- மற்றவர்கள் மேல் அதிகாரத்தை செலுத்த அனுமதியில்லை

இயேசுவினுடைய சீடர்கள் தங்கள் மத்தியிலே பெரியவன் யார் என்று தெரிந்துக்கொள்ள விவாதித்தபோது இயேசு மேலே கூறிய ஆலோசனையை அவர்களுக்கு எடுத்துரைத்தார். (லூக் 22:24) அதனூடாக இறையரசில் தலைமைத்துவம் வகிப்பதை யிட்டு சரியான நோக்கமும் சிந்தனையும் அவர்களுக்கு கிடைத்திருக்கும். அவ்வாறு இறையரசின் பிரஜைகள் எல்லோருக்கும் சேவக தலைமைத்துவம் வகிக்கவேண்டும். அவர்கள் சேவக தலைமைத்துவ அமைப்பில் பங்காளர்களாவார்.

## இயேசு சேவக தலைமைத்துவ முன்மாதிரியை காட்டும் சந்தர்ப்பங்கள்

- சிறிய பிள்ளையை மெச்சுதல் (லூக்கா 9:48)
- பணி தேவைப்படுவோர் தம்மிடம் வரும்வரை இருக்காமல் அவர்களின் வீடுகளுக்கு தேடிச் செல்லுதல் (லூக் 8 : 42, 51, 7 : 6)
- சீடர்களின் பாதம் கழுவுதல் (யோவா 13:4-5)
- அனைவரின் விடுதலைக்காக தாழ்மையுடன் தன்னுடைய வாழ்வை அர்ப்பணித்தல் (மாற் 10:45)

இறையரசின் பிரஜைகள் சேவக தலைமைத்துவத்தைப் பற்றி பிரவேசித்து தொடர்ந்தும் நன்மையானதையும் சரியானதையும் செயல்படுத்த எதிர்பார்க்கப்படு கின்றார்கள் அவ்வாறு இறையரசின் பிரஜைகள் தமது வாழ்க்கை முறை மூலம் சிறப்பான குணாதிசயங்களை வெளிப்படுத்த வேண்டும்.

# இறையரசின் பிரஜைகளிடம் எதிர்பார்க்கும் குணாதிசயங்கள்

மற்றவர்களுக்காக தம்மை அர்ப்பணித்து செயல்படுவது இறையரசின் பிரஜைகளின் சிறப்பான குணாதிசயமாகும். அதற்காக எல்லா தடைகளையும் கடந்து செயற்பட வேண்டும். (அடுத்தவர் / அயலவர் என்றால் யார்? என்பதை முதலாவதாக விளங்கிக் கொள்ளவேண்டும்) இயேசுவிடம் வந்த திருச்சட்ட அறிஞர் தமது அயலவன் யார் எனக் கேட்டபோது இயேசு நல்ல சமாரியனுடைய உவமையைக் கூறினார். (லூக். 10:25-37) யூதருக்கும் சமாரியருக்கும் இடையில் காணப்பட்ட இடைவெளி அதிகமாக இருந்தபோது ஒருவரால் எழுப்பப்பட்ட கேள்விக்கு பதிலாக இயேசு கூறிய இந்த உவமை மிகவும் முக்கியமானதாகும். இங்கு நல்ல அயலவனாக ஒரு சமாரியனை இயேசு முன்வைத்தது விசேட தன்மையாகும். உவமையில் மரணத் தருவாயில் இருந்த யூத மனிதருக்காக அர்ப்பணிப்பதற்கு யூதசமய சமுதாயத்திலே பெரிய நிலையில் இருந்த ஆசாரியருக்கும் லேவிக்கும் முடியவில்லை. தமது இனத்தை சேர்ந்த ஆபத்துக்குள்ளான மனிதனுக்காக தம்மை அர்ப்பணிக்க அவர்கள் முன்வரவில்லை (தம் சமய கடமைகளுக்கு முன் இரத்தத்தால் தாம் தீட்டுப்படுவதை தவிர்த்துக்கொள்வதற்காக) அவர்கள் நினைத்த விதம்

| | | |
|---|---|---|
| ★ நிறைய நேரம் செலவிடுகின்ற<br>★ நிறைய வேலையுள்ள<br>★ நிறைய பணம் செலவாகும்<br>★ அளவில்லாத பிரச்சனைகளை உருவாக்கும். | செயற்பாடாக | இருக்கலாம் |

ஆனாலும் யூதர்கள் கடும் வைராக்கியத்தில் இருக்கின்ற ஒழுக்கமற்ற சமயத்திற்கு உரித்தானவர்கள் என்று கூறப்படுகின்ற, யூத இனத்தின் சத்துரு என கணிக்கப்படுகின்ற சமாரியன் ஒருவன் விழுந்து மரண தருவாயில் இருக்கும் யூத மனிதனுக்காக தன்னை அர்ப்பணிப்பதற்கு முன் வந்த விதம் ஆச்சரியமானது. சமாரியன் யூதேய மனிதனுக்காக தன்னை தாழ்மையுடன் அர்ப்பணித்தான்.

அவன் யூத மனிதனுக்காக

★ தான் போன பயணத்தை அர்ப்பணித்தான்
★ தனது நேரத்தை அவனுக்காக அர்ப்பணித்தான்
★ தனது சொத்தை (சரீர உதவி, எண்ணெய், திராட்சை ரசம், மிருகம், முதல்) அர்ப்பணித்தான்

இறையரசின் பிரஜைகளான நாங்கள் இனம், சமயம், குலம், வகுப்பு பேதமில்லாமல் தேவையில் உள்ளவர்களுக்கு எப்போதும் வரையறை இல்லாமல் அர்ப்பணிப்போடு செயல்பட வேண்டும்.

இறையரசின் பிரசைகளாக நாம் செயற்படும்போது எப்போதும் இடத்திற் கேற்ற ஞானத்தோடு செயற்பட வேண்டும். தமது உலகப்பிரகாரமான இலாபத்தைக் கருதி அதைப் பாதுகாப்பதற்காக அல்ல இறையரசின் வளர்ச்சிக்காக இடத்திற்கு ஏற்ற ஞானத்தோடு செயற்படுவது வஞ்சகமான உக்கிராணக்காரனின் உவமையில் உள்ள சத்தியமாகும். (லூக் 16 :1-19) இறையரசின் பிரஜைகளாக வஞ்சகமான செயல்களை நாங்கள் ஒருபோதும் அனுமதிக்காவிட்டாலும் தீர்க்கமான அறிவினாலும் ஞானத் தினாலும் செயல்பட்டு இறையரசின் விழுமியங்களை பரப்புவதற்கு எடுத்த முயற்சி பராட்டக் கூடியது. இறையரசின் பிரஜைகள் அதன் உக்கிராணக்காரர்கள் அங்கே இருக்கும் எல்லாவற்றையும் பற்றி தமது உரிமையாளருக்கு பொறுப்புக் கூற வேண்டும். ஆகையால் உக்கிராணக்காரர் ஞானத்தோடு செயல்பட்டு அங்கே உரிமையாளரை மகிழ்ச்சிப்படுத்துவதற்கு ஏற்ற விதமாய் செயல்பட வேண்டும்.

அடுத்தவர்களின் வாழ்வை நல்ல முறையில் வளர்ச்சியடையச் செய்வதற்கு தமது திறமைகள், தாலந்துகள் முடியுமான அளவு அர்ப்பணிக்க இறையரசின் பிரஜைகள் முயற்சி எடுக்க வேண்டும். பத்து வெள்ளிக் காசு உவமையின் மூலம் காட்டப்படுவது இறையரசின் பிள்ளைகளுக்கு கிடைக்கப்பட்டிருக்கின்ற ஆற்றல்கள், தாலந்துகள் இறையரசின் வளர்ச்சிக்காக எவ்வாறு பயன்படுத்த வேண்டுமென (லூக் 19 : 11-27) கூறப்பட்டுள்ளது. இறையரசின் பிரஜைகள் தங்களுக்கு கடவுளின் கிருபையாக கிடைக்கப் பெற்று இருக்கின்ற தாலந்துகளைக் கண்டுபிடித்து அதை இறையரசின் வளர்ச்சிக்காக பயனுள்ள விதத்திலே செயற்படுத்தக்கூடிய வழிகளை கண்டுபிடித்து அதன்படி செயல்பட வேண்டும்.

பத்து வெள்ளிக்காசு (பத்து தாலந்து) பற்றிய உவமையிலே பத்துக்காசு கிடைத்த பணியாளன் மேலும் பத்துக் காசும் மற்றவன் தான் பெற்ற பணத்தில் இன்னும் ஐந்து காசும் சேர்த்துக் கொண்டதுபோல தமது தாலந்துகளை முடிந்தளவுக்கு இறையரசின் பணிக்காக அதை பயன்படுத்த பிரஜைகள் முன் வர வேண்டும்.
ஒரு வெள்ளிக் காசைப் பெற்றவன்

- ★ அதை புதைத்து வைத்தது போல
- ★ தனது காரியத்தை நன்றாக செய்யாமல் அதற்கு எஜமானின் நியாயத் தீர்ப்பை காரணம் காட்டியது போல்

இறையரசின் பிரஜைகள் எந்த விதத்திலும் செயற்படக் கூடாது

அதற்காக இறையரசின் பிரஜைகள்

- சிறிய காரியத்திலும் விசுவாசம் இருக்க வேண்டும்
- தமது அழைப்பிற்கு சரியான மாறுத்தரம் கொடுக்க வேண்டும்
- தாம் பெற்றுக்கொண்ட பலவித ஆற்றல்களை மற்றவர்களின் நன்மைக் காக பயன்படுத்திக்கொண்டு இறையரசின் அபிவிருத்திக்காகத் தொடர்ந்து அர்ப்பணிக்க வேண்டும்
- இயேசு மகிழ்ச்சி அடையும் விதத்தில் முழு உள்ளத்தோடு அர்ப்பணித்து பணி செய்யவேண்டும்

- தமது பொறுப்பை இன்னொருவருக்கு பாரம் கொடுக்காமல் தமக்குப் பாரம் கொடுக்கப்பட்ட பணியை சரியாகச் செய்துவிட்டு கடவுளின் பொறுப்பிற்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும்.
- ஒருபோதும் கடவுளை நியாயம் தீர்க்க முன் வரக் கூடாது. அத்துடன் அவரிடமிருந்து பெற்றுக் கொண்ட காரியங்களுக்கூடாக இறைவனை மகிமைப்படுத்த வேண்டும்.
- எப்பொழுதும் இறைவனுக்கு மகிமையைக் கொண்டுவரும் வகையில் செயல்பட வேண்டும்.

அவ்வாறே இறையரசின் பிரஜைகள் ஆவதற்கு நல்ல பண்புகளையும் குணாதிசியங்களையும் தம்முடைய வாழ்விலே வளர்த்துக் கொண்டு தாழ்மையுடன் கடவுளின் மகிமைக்காக அர்ப்பணித்து சேவை செய்ய வேண்டும்.

**செயற்பாடு**

1. இயேசு முன்வைத்த தலைமைத்துவத்தின் அமைப்பு சாதாரண உலகத்தின் தலைமைத்துவ அமைப்பைப் பார்க்கிலும் முற்றாகவே மாறுபட்டிருப்பதை விளக்குக.

2. இறையரசின் பிரஜைகளின் வாழ்க்கைக் கூடாக வெளிவருகின்ற நற்செய்தியின் குணாதிசியங்கள் ஐந்தைப் பட்டியல்படுத்தி அவற்றை வளர்த்துக்கொள்ள செய்யக் கூடியவற்றை விளக்குக.

# 24 இறையரசின் சவால்கள்

**இறையரசைப் பற்றியும் அதன் வளர்ச்சியை பற்றியும் அடையாளங்கள் பற்றியும் தேடி அறிந்தோம். இறையரசின் பிரஜைகளாக மாறுவது ஒரு வரப்பிரசாதமாகும். அதற்காக பல சவால்களுக்கு முகம் கொடுக்கவேண்டும் என்று இயேசு பல சந்தர்ப்பங்களில் விளக்கம் கூறியிருக்கிறார். அந்த சவாலுக் கூடாக இறையரசின் பிரஜைகளுக்கான பொறுப்புகளை விளங்கிக் கொண்டு அதற்கு உகந்த மாறுத்தரம் காண்பிப்பதற்கு வழிநடத்துவது இப்பாடத்தின் நோக்கமாகும்.**

**லூக்கா:** 9 : 57 - 62, 12 : 13 -34, 18 : 18 -30, 16 : 19 -31, 14 : 25 - 33, 18 : 9 - 14

வாழ்வின் பயணத்தில் மனிதனுக்கு பல்வேறு சவால்களில் வெற்றி பெற நேரிடும். இவ்வாறான சவால்களில் வெற்றி பெறுவதற்கு அர்ப்பணிப்போடும் தகுந்த ஆயத்தங்களுடனும் செயல்பட வேண்டும்.

இறையரசின் பிரஜாவுரிமையைப் பெற்றுக் கொள்வது, பொறுப்புள்ள சவாலாகும். அந்தப் பெரிதான சவாலை வெற்றி பெறுவதற்கு இயேசுவினுடைய போதனையில் தங்கியிருந்து செயல்படுவது எதிர்பார்க்கப்படும். அத்தோடு அந்த சவால்களை வெற்றி பெறுவது சம்பந்தமாக இயேசு கொடுத்த முன்னெச்சரிக்கை தொடர்பான கூடுதலான அவதானத்தைச் செலுத்துவது மிக முக்கியமாகும்.

இறையரசின் பிரஜாவுரிமையை எதிர்பார்த்து வாழ்வது நாங்கள் மேற்கொள்ளும் நீண்ட பயணத்திற்கு சமானமாகும். இந்தப் பயணத்தில் நாம் பல இடையூறுகள் / சவால்களுக்கு முகம் கொடுப்பது கட்டாயமாகும் பயணத்தின் இறுதியை அடைவதற்கு அந்த தடைகளைத் தாண்டி முன்னேற வேண்டும்.

### இறையரசு



இறையரசின் பிரஜாவுரிமையைப் பெற்றுக்கொள்வதில் தடையாக, முதலாவதாக சந்திப்பது அழைப்பின் சவாலாகும். அது இரண்டு விதத்தில் அமையும்.

**அழைப்பின் சவால்**

| இயேசுவை சுய விருப்புடன் பின் செல்லுதல் | | இயேசுவின் அழைப்பிற்கு ஏற்ற விதத்தில் பின் செல்லுதல் | |
|---|---|---|---|
| பின் செல்லுவதற்கு விருப்பத்தைத் தெரிவித்த நபர் → | நீர் போகும் எல்லா இடத்திற்கும் உம்மைப் பின்தொடர்ந்து வருவேன் | (அ) ''என்னைப் பின் தொடர்ந்து வாருங்கள்'' (ஆ) ''முதலாவதாக எனது தகப்பனை அடக்கம் செய்ய அனுமதி தாருங்கள்'' | ← அழைப்புப் பெற்றவர் |
| இயேசு → | ''நரிகளுக்கு குகையும் பறவைகளுக்கு கூடும் உண்டு, மனித குமாரனுக்கோ தலைசாய்க்க இடமில்லை | (அ) இறந்தோர் அடக்கம் செய்யப்படுவார்கள். நீ இறையாட்சியைப் பற்றி அறிவி | ← இயேசு |
| | | (ஆ) ''நான் உம்மைப் பின் தொடர்ந்து வருவேன், முதலாவதாக வீட்டாரிடமிருந்து விடை பெற்றுவர அனுமதி தாருங்கள்'' | ← அழைப்புப் பெற்றவர் |
| | | ''கலப்பையில் கையை வைத்து பின்னிட்டுப்பார்ப்பவன் இறையரசிற்கு உகந்தவன் அல்ல'' | ← இயேசு |

சுய விருப்பத்துடன் இயேசுவைப் பின்பற்ற அனுமதியைக் கேட்டவருக்கு இயேசு தன்னை பின்பற்றுவதில் உள்ள பாரதூர தன்மையை சுட்டிக்காட்டினார். அழைப்பை பெறாமல் சுய விருப்பத்துடன் அவரைப் பின் தொடர அவன் அனுமதி கேட்டது பல உள்நோக்கங்களுக்காக இருக்கலாம். இயேசு அந்தக் காலத்திலே பெற்றிருந்த பிரபல்யம், அவர் செய்த அற்புதங்கள் போன்றவற்றால் கவரப்பட்டு

அவரைப் பின்பற்ற விரும்பியிருக்கலாம். அதனால் அவருக்குக் கிடைத்தது உற்சா கமற்ற பதிலாகும். இப்பதிலால் இயேசு தெளிவாகக் கூறுவது தமது பணி இலகுவானது அல்ல அது கடினமான பணியாகும் என்பதாகும். இதனால் இறையரசின் பணிக்கு தம்மை சுயவிருப்போடு அர்ப்பணிக்கின்றவர்கள், தம்மை அலசி ஆராய்ந்து பார்க்க வேண்டும். இப் பணி இலகுவானது, வரவேற்பு பெறுவது போன்ற உலகப்பிரகாரமான வரப்பிரசாதங்கள், பாதுகாப்பு ஆகிய எண்ணங்கள் போன்றவற்றை இயேசு ஒருபோதும் வரவேற்கமாட்டார். அப்படியாக பின்பற்றுவதன் மூலம் பலன் கொடுக்கும் பணியை எதிர்பார்க்க முடியாது. அது தியாகத்துடனும் அர்ப்பணிப்புடனும் விசுவாசத்துடனும் ஆரம்பிக்கும் பணியாகும்.

ஒரு முறை இயேசு தமது சீடர்கள் 12 பேரை அனுப்பும் போதும் (லூக் 9 : 1 -4) 72 பேரை ஊழியத்திற்கு அனுப்பும் போதும் (லூக் 10 : 4 - 7) கூறிய வசனங்களுக்கூடாக அதை உறுதிப்படுத்துகின்றார். அப்படியானால் எங்களுடைய விருப்பத்திற்கு ஏற்ப எங்களுடைய அபிப்பிராயங்கள், நோக்கங்களை செயல்படுத்துவதற்காக எங்களுக்கு இயலுமான, எங்களுக்கு விருப்பமான நேரத்திலே அவரைப் பின்பற்றுவது தகுந்ததல்ல. அதற்காக அவருடைய உகந்த அழைப்பு கிடைக்கும் வரை ஜெபத்தோடும் விசுவாசத்துடனும் காத்திருக்க வேண்டும்.

இயேசு என்னைப் பின் தொடர்ந்து வாரும் என்று ஒரு நபரை அழைத்தபோது, தகப்பனை அடக்கம் செய்ய வேண்டும் என்று கூறி அந்த நபர் சரியான மாறுத்தரத்தைக் கொடுக்கவில்லை. உலகப்பிரகாரமான தேவையின் நிமித்தம் அழைப்பை தாமதிப் பதற்கு அவன் அனுமதி கேட்டான். ஆனால் அவர் கூறியது, ‘‘மரித்தோர் தங்களை அடக்கம் செய்யட்டும்’’ என்பதாகும். ஆனால் இயேசுவிடமிருந்து விசேட நேரத்தில் அழைப்புக் கிடைப்பது இறையரசின் பணிக்கு அவசியமான நேரத்திலே ஆகும். அதை நாம் தாமதிக்க கூடாது. அதை மிகவும் உயர்ந்த முறையிலே செயல்படுத்துவதே இறைவனின் விருப்பமாகும். அதனால் நாங்கள் அதற்காக அர்ப்பணிக்க வேண்டும். அவரின் அழைப்பு கிடைகின்றவர்கள் இறையரசின் பணிக்காக உடனடியாகப் பதில் கொடுக்க வேண்டும். பின்நோக்கிப் பார்க்காமல் முன்னோக்கிப் பார்க்க வேண்டும், இல்லாவிட்டால் கிடைத்த சந்தர்ப்பம் கைவிடப்பட்டு போகலாம். இயேசுவினுடைய அழைப்பைப் பெற்ற இன்னொருவர் ‘‘ஆண்டவரே நான் உம்மை நோக்கி வருகின்றேன் ஆனால் முதலாவதாக என்னுடைய வீட்டாரிடமிருந்து விடைபெற அனுமதி தாரும்’’ என்று கூறி அவன் இரண்டு தீர்மானங்களுக்கிடையிலே அகப்பட்டவனாக இருப்பதைக் காணக்கூடியதாக உள்ளது. இறையரசின் பணிக்காக தீர்மானத்தை எடுக்குமுன் உலகப்பிரகாரமான காரியத்தை நிறைவு செய்வது அவனுக்குத் தேவையாக இருந்தது. இறையரசின் பணியிலே தேவைப்படுவது வரையறை இல்லாத கீழ்ப்படிவாகும். அதிலே அழைப்பிற்கு முன்னுரிமை கொடுப்பது எதிர்பார்க்கப்படும். ‘‘ கலப்பையில் கை வைத்து பின்னிட்டுப் பார்ப்பவன் இறையரசிற்கு உகந்தனவல்ல’’ என்பது இயேசு வின் போதனையாகும்.

குறித்த ஒரு சந்தர்ப்பத்தில் இறையரசின் அழைப்புக்கிடைக்கும்போது, அதற்காக மற்றவற்றை அர்ப்பணிப்பது எதிர்பார்க்கப்படும். இயேசுவை மாத்திரம் நோக்கிப் பார்த்து, எல்லா தடைகளுக்கும் முகம் கொடுத்து, இறையரசின் பிரஜை யாவதை எதிர்பார்த்துக் காத்திருப்பது நம் ஒவ்வொருவரின் பொறுப்பாகும்.

## இறையரசு




இறையரசின் பிரஜாவுரிமையைப் பெற்றுக்கொள்ள முயற்சி செய்யும் ஒவ்வொருவரும் முகம் கொடுக்கும் சவால் மாறுத்தரம் கொடுக்கின்றபோது ஏற்படும் சவாலாகும். ''என் பின்னே வாருங்கள்'' என்று இயேசு கொடுக்கும் அழைப்பிற்கு தகுந்த பதில் கொடுப்பது இறையரசின் பிரஜாவுரிமையை எதிர்பார்க்கும் எல்லா நபருக்குமுரிய பொறுப்பாகும். அப்படி செய்வதன் மூலம் கைக்கொள்ள வேண்டிய அறிவுறுத்தல்களை இயேசு முன்வைத்துள்ளார்.

***எல்லா உலகப்பிரகாரமான காரியங்களுக்கும் காண்பிக்கின்ற மாறுத்தரங்களைப் பார்க்க இறையரசின் அழைப்பிற்கு மேன்மையான மாறுத்தரத்தை காண்பித்தல்***

எங்களுக்கு மிகவும் நெருங்கிய அன்பார்ந்த குடும்பத்தினர் உற்றார், உறவினர்கள், நண்பர்கள் எல்லோரையும் பார்க்க மிகவும் மேலான அன்பான இடத்தை இறையரசின் அரசனான இயேசுவிற்கு கொடுப்பது இதன் அர்த்தமாகும்.

***எமக்கு நாம் காண்பிக்கும் அன்பைவிட மேலான அன்புடன் இயேசுக்கு மாறுத்தரம் கொடுத்தல்.***

அப்படியானால், எங்களுடைய நிலைமை, தகுதி, பலன் , வசதி, சந்தோஷம், பாதுகாப்பு போன்றவற்றை பின்னாலே வைத்து இறையரசின் அழைப்பிற்கு முதலிடம் கொடுத்தலாகும். அதை இலகுவாக செய்ய முடியும் என்று நினைத்து இறையரசின் பணிக்குள் பிவேசிப்பதை இயேசு எம்மிடமிருந்து எதிர்பார்க்கமாட்டார்.

***சிலுவை சுமந்து இறையரசின் அழைப்பிற்கு மாறுத்தரம் கொடுக்க வேண்டும்.***

உரோம சட்டத்திற்கு ஏற்ப ஒரு நபரைச் சிலுவையில் அறைவதற்கு நியமித்திருந்தால் அவர் தான் அறையப்படும் சிலுவையைத் தனது தோளிலே சுமந்து செல்லச் செய்வது உரோம போர்வீரர்களால் கடைப்பிடிக்கப்படும் வழக்கமாகும். அது மிகவும் கடினமான செயலாகும் அதை ஒரு உதாரணமாக பயன்படுத்தி இயேசு கூறியது இறையரசின் அழைப்பிற்கு ஏற்ற மாறுத்தரத்தைக் காண்பிப்பதற்கு, நாங்கள் எமது நாளாந்த சிலுவையை அதாவது துக்கம், வேதனை, பிரச்சினைகள், அடுத்தவர்கள் செய்யும் கசப்பான செயல், குரோதங்கள், எமக்குள் உள்ள பெருமை போன்றவற்றை இயேசுவினிடத்தில் கொண்டு வந்து, அவற்றை சிலுவையில் அறைய வேண்டும். அப்படிச்செய்வதன் மூலம் அதிலிருந்து விடுதலை பெற வேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம் இறையரசின் அழைப்பிற்கு அர்த்தமுள்ள மாறுத்தரம் கொடுக்க எம்மால் முடியும்.

**அழைப்பிற்கு மாறுத்தரம் காண்பிக்கும்போது அதன் பாரதூரதன்மையை விளங்கிக் கொள்ள வேண்டும்.**

அதற்காக இயேசுவினுடைய அழகிய உதாரணம் இரண்டு விளக்கப்படுகின்றன.

- ★ ஒரு காவல் அரணை அமைக்குமுன் அதற்கு தேவையான முழுச் செலவை கணக்குப் பார்த்து ஆயத்தமாக வேண்டும்.
- ★ ஓர் அரசன் யுத்தத்திற்கு செல்வதற்கு முன் தனது எதிரிக்கு முகம் கொடுக்கக் கூடிய விதத்தில் தனது சேனையை ஒழுங்கமைக்க வேண்டும்.

மிகவும் பாரதூரமான தீர்மானமாக இறையரசின் பிரஜாவுரிமைக்கு முன் வரும் போது அதன் மூலம் கிடைக்கக் கூடிய பிரதிபலன்களை புரிந்து கொண்டு அப்பணியை நாம் மேற்கொள்ள வேண்டும்.

**தங்களுடைய அனைத்தையும் விட்டுவிட்டு பணியின் அழைப்பிற்கு மாறுத்தரம் கொடுப்பதாகும்.**

அதாவது தன்னலமற்ற முழு உள்ளத்தோடு இறையரசின் அழைப்பிற்கு மாறுத்தரம் காண்பித்தல் அப்போது தங்களுக்கு சொந்தமான உலக வரப்பிரசாதங்கள், சுக போகங்கள் எல்லாம் இல்லாமல் போகலாம். ''இந்த உலகத்திலே தனது வாழ்வைக் காத்துக் கொள்பவன் அதை இழந்துபோவான், அதை இழந்தவன் பெற்றுக் கொள்வான்'' என்று இயேசுவினுடைய வார்த்தை மூலம் தெளிவுபடுகின்றது.

அதன்படி இறையரசின் பிரஜையாவதற்கு நாம் அழைப்பைப் பெறும்போது அதன் பொறுப்புகளை நன்றாகப் புரிந்து கொண்டு ஏற்ற தீர்மானங்களுக்கு நாம் வர வேண்டும்.

# இறையரசு




இறையரசின் பிரஜாவுரிமையைப் பெற்றுக்கொள்ள எதிர்பார்க்கின்றவர்கள் தமது வாழ்விலே முகம் கொடுக்கின்ற மூன்றாவது முக்கிய சவால் தாழ்மையாகும். இயேசு கூறிய மிக அருமையான உவமையான ஜெபம் செய்வதற்குப்போன பரிசேயன், ஆயக்காரன் உவமை மூலம் இறையரசின் பிரஜைகளுக்கு பெரியதோர் சவாலுக்கு முகம் கொடுக்க நேரிடுகின்றது. உவமையில் குறிப்பிடப்பட்டுள்ள இருவரின் நோக்கம், திருக்கோவிலில் இருந்து இறை வேண்டல் செய்தலாகும். பரிசேயனுடைய இறைவேண்டல் மூலம் தான் பரிசுத்தவானென்று கூறுவதற்கு முயற்சி எடுத்துள்ளான்.

## அவர்

| | |
|---|---|
| விபச்சாரம் செய்பவரல்ல<br>கொள்ளையர் அல்ல<br>நேர்மையற்றவர் அல்ல | வரி தண்டுபவர் போல் அல்ல பத்தில் ஒன்று கொடுப்பவர் வாரத்தில் இருமுறை நோன்பிருப்பவர் |

அவர் நினைக்கும் விதத்திலே அவன் ஒரு நீதிமான் ஆனாலும் தாழ்மைக்கூடாக கடவுளுடைய பார்வையில் நீதிமானாக ஏற்றுக்கொள்ளப்படும் சந்தர்ப்பம் அவனுக்கு கிடைக்கவில்லை. வானத்தை அண்ணாந்து பார்க்கத் துணிவில்லாமல் தன்னுடைய மார்பிலே அடித்துக் கொண்டு, தனது பாவத்தின் சுபாவத்தை தாழ்மையுடன் கடவுளுக்கு முன்பாகக் கூறிய ஆயக்காரன் கடவுளுடைய இரக்கத்திற்கு ஆளானார். இறையரசின் பிரஜாவுரிமையைப் பெற்றுக்கொள்ள எதிர்பார்க்கும் ஒருவர் ஆயக்காரனுடைய தாழ் மையைக் கொண்டிருக்கவேண்டும். ஒரு சந்தர்ப்பத்தில் இயேசு கூறியது போல் இறையரசின் பிராஜாவுரிமையைப் பெற்றுக் கொள்வதற்கு குழந்தையைப் போல் தாழ்மையாக இருக்க வேண்டும். (லூக் 18 : 16 - 17) இறையரசின் பிரஜைகள் எப்படியாவது இந்த சவாலை வெற்றி பெற வேண்டுமென்பதை உறுதிப்படுத்துவதற்கு இயேசு தாழ்மை சம்பந்தமாக, முன்மாதிரியாக இருந்தார். அவர் சீடரின் பாதங்களைக் கழுவினார். (யோ 13 : 4 - 9) தன்னலத்தை அகற்றி தாழ்மையுடன் கடவுள் மைய வாழ்வை வாழ்வதற்கு இதன் மூலமாகக் கிடைக்கின்ற முன்மாதிரி மிகவும் அருமையானது.

# இறையரசு




இறையரசின் பிரஜாவுரிமையைப் பெற்றுக்கொள்வது மிகவும் கடினமான ஒன்றாக நாம் விளங்கிக் கொண்டோம். அது மிகவும் கடினமான சவால் நிறைந்த பயணமாகும். அந்தப் பயணத்திலே முகம் கொடுக்க வேண்டிய சவாலைப்பற்றி இயேசு கடுமையான அறிவுறுத்தலைக் கொடுத்திருக்கின்றார். உலகப்பிரகாரமான செல்வங்களுக்கு நாம் அளவில்லாமல் சார்ந்து நிற்கும் சவாலாகும். இங்கே உலகப் பிரகாரமான செல்வம் என்று கூறும்போது பலவித விமர்சனங்களை முன்வைக்கலாம். செல்வம் / பணம் / சொத்துக்கள், தோட்டங்கள், வாகனங்கள் போன்ற எல்லா உலக சொத்துக்குள்ளும் அடங்கும். வாழ்வதற்கு மனிதனுக்கு அனேக தேவைகள் பூரணப்படுகின்றன. நிகழ்கால உலகிலே அந்தத் தேவைகள் மிகவும் தேவையாக உள்ளன. ஆனாலும் இத் தேவைகள் பெரிதானாலும் இறையரசின் பிரஜைகள் அதைப்பற்றிக் கவலைப்படத் தேவையில்லையென இயேசு கூறுகின்றார்.

**'' என்னத்தை உண்போம், எதை உடுப்போம் என்று கவலை கொள்ளாதீர். உணவைவிட உயிரும் உடையை விட உடலும் விசேஷித்தவை அல்லவா? லூக்கா** 12 : 22 - 23

இறையரசின் பிரஜைகள் தமது தேவைகளில் ஒன்றியிருப்பது பற்றிக் கவலைப்படுவது அநாவசியம் என்று காண்பிப்பதற்கு இயேசு இரண்டு காரணங்களை முன்வைத்தார்.

| **காகம்** | **காட்டுப்புஸ்பம்** |
|---|---|
| விதைப்பதில்லை | நூற்பதுமில்லை |
| அறுப்பதில்லை | பின்னுவதுமில்லை |
| களஞ்சியத்தில் சேர்ப்பதுமில்லை | |

ஆனாலும் கடவுள் காகங்களைப் போஷிக்கிறார்
காட்டுப்புஷ்பங்களை அழகாக்குகின்றார்
புற்களை அலங்கரிக்கின்றார்
அதற்கும் மேலாக அவரின் பிள்ளைகளின் தேவைகளைச் சந்திக்கின்றார். அதனால் இறையரசின் பிரஜாவுரிமையை எதிர்பார்க்கின்றார்கள்.

***பயப்படாதே சிறுமந்தையே, உங்களுக்கு ராஜ்ஜயத்தைக் கொடுக்க உங்கள் பிதா பிரியமாக இருக்கிறார்.***

*லூக்கா 12 : 32*

*உலகப் பிரகாரமான சொத்துக்குக் கவலைப்படாமல் நீதியைச் சேகரித்துக் கொள்வதற்கு*

''போதகரே, சொத்தை என்னோடு பங்கிட்டுக் கொள்ளுமாறு
என் சகோதரனுக்குச் சொல்லும்''

*லூக்கா* 12 *:* 13

லூக்கா 12 : 13 -21
அறிவற்ற செல்வனின் உவமை

*எல்லாவிதமான பேராசைகளிலும் இருந்து கவனமாக இருக்கவும்*

*வாழ்க்கையின் உரித்தை கடவுளுக்கு மாத்திரம் கொடுப்பதற்கு*

*இயலுமான அளவு ஆன்மீகச் சொத்துகளைச் சேகரிப்பதற்காக,*

***உங்கள் உடைமைகளை விற்று தர்மம் செய்யுங்கள்***

***லூக்கா*** 12 ***:*** 33

**இற்றுப் போகாத பணப்பைகளையும் விண்ணுலகில் குறையாத செல்வத்தையும் தேடிக்கொள்ளுங்கள்** ***லூக்கா*** 12 ***:*** 33

**ஆனால் செல்வர்களே ஐயோ! உங்களுக்குக் கேடு** ***லூக்கா*** 6 ***:*** 24

**எந்த வீட்டு வேலையாளும் இரு தலைவர்களுக்குப் பணிவிடை செய்ய முடியாது; ஏனெனில் ஒருவரை வெறுத்து மற்றவரிடம் அவர் அன்பு கொள்வார்.**

***லுக்கா*** 16 ***:*** 13

**செல்வந்தர் ஒருவர் இறையாட்சிக்கு உட்படுவதைவிட ஊசியின் காதில் ஒட்டகம் நுழைவது எளிது** ***லூக்கா*** 18 ***:*** 25

**ஆன்மீக வளங்களை கட்டுப்பாடுகளின்றி அனுபவிப்பதற்கு அழிந்து போகாத விண்ணுலக செல்வங்களில் நம்பிக்கை வைக்கவும்.**

## தனவந்தனும் லாசருவும் பற்றிய உவமை
**லூக்கா 16 : 19 - 31**

இருவிதமான வாழ்க்கையின் முறையைப் பற்றி வழிநடத்துகின்ற இறையரசின் பிரஜாவுரிமையை தேடுகின்றவர்கள் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன?

**1வது வாழ்கை முறை - செல்வந்தனுடைய வாழ்க்கை முறையில் எல்லா செல்வங்களும் கிடைக்கும்.**

செல்வந்தனை மையமாகக் கொண்ட சொத்து நிறைந்த வாழ்க்கை முறை

விலை உயர்ந்த உடைகளை அணிவது

சுபபோக உணவு உண்ணக்கிடைத்தல்

சுக போகமாக வாழ்வது

**2வது வாழ்க்கை முறை - ஏழ்மையான வாழ்க்கை முறை**

லாசருவை மையப்படுத்தப்பட்ட துக்கமான வாழ்க்கைமுறை

சுகவீனராகவும் நோயாளியாகவும் இருத்தல்

உயிர்வாழ வீடு கூட இல்லாதிருத்தல்

பசியில் இருத்தல்

மிகவும் கவலையுடன் வாழ்வை கழித்தல்
ஒருவிதமான சினேகிதமும் இல்லாமல்

செல்வந்தராகின்றது தீமையோ, ஏழ்மையாவது நன்மையோ இல்லை இவை இரண்டிற்கும் பொது யதார்த்தம் உள்ளது. அது என்னவென்றால் மரணம் ஆகும்.

ஆனாலும் முதலாவது வாழ்க்கை முறைக்கு உடன்பட்டவர்கள் இறையரசின் பிரஜாவுரிமையை எதிர்பார்த்தால் பொது தர்மத்திற்கு முகம் கொடுப்தற்கு முன் தமது வாழ்விலே ஓர் வித்தியாசத்தைக் காணவேண்டும். அல்லாவிட்டால், பணமும் உலகப்பிரகாரமான சுகமும் சொத்துக்களும் தடையாகவிருந்து அவர்கள் இறையரசின் வழியிலிருந்து தவற நேரிடலாம்.

*ஆகையால்*
*இயேசுவின் போதனைக் கூடாக நடக்க வேண்டியது.*

*முதலாவது வாழ்க்கை முறைக்கு உட்பட்டவர்கள் பரிதாபத்தோடு இரண்டாவது வாழ்க்கை முறைக்கு உட்பட்டவர்களைப் பாதுகாத்துக் கொள்ளுதல், அவர்களுக்கு உதவி செய்தல் நீதியோடும் அன்போடும் அவர்களைப் பற்றிக் கரிசனை கொள்ளுதல் வேண்டும்.*

*அவர்களுக்கு சொத்து சுகம் கிடைத்தாலும் உள்ளத்தாலே ஏழ்மையாதால், அவர்களுக்கு அதைச் செய்வது இலகுவாக இருக்கும். அப்போது*

**சதாகால தீ என்னும் பாதாளத்திற்குப் பதிலாக என்றுமுள்ள நிலைவாழ்வு என்னும் விண்ணுலக சுகம் கட்டாயமாக அவர்களுக்கு உரித்தாகும் அப்படி செயல்படுத்துவதற்கு தினம் தோறும் இறை வார்த்தையை வாசித்து இடை விடாது இறை வேண்டல் செய்து மனம் திரும்புதலுக்குகூடாக இயேசுவுக்கு சமீப மாக வருவர்.**

*அதனால், இறையரசின் பிரஜாவுரிமையை எதிர்பார்க்கின்ற எல்லோரும் அதன் பாரதூரத்தை விளங்கி*

*அழைப்புக்கு சரியான மாறுத்தரத்தைக் கொடுத்து*

*தமது சிலுவையைச் சுமந்து உலக செல்வங்கள் மீது தங்கியிருக்காமல் தாழ்மையுடன் வாழ்ந்து ஆன்மீகத்தில் பரிபூரணப்பட்டு,*

*இயேசுவினுடைய பெலனும் சக்தியும் பெற்று, எல்லாவிதமான வாழ்வின் சவால்களை வெற்றி கொள்வதற்கு திடமாக இருக்க வேண்டும்.*

*அப்போது, பெரிய சவால்களினால் நிறைந்த கடினமான நீண்ட பயணத்தில் சதாகால சந்தோஷம் கிடைத்தது என்பதற்கு வேறு அறிகுறி ஒன்றுமில்லை*

## செயற்பாடு

1. பின்வரும் சந்தர்ப்பங்களில் இறைவார்த்தை மூலம் நீங்கள் பெறும் வழிகாட்டல்களையும் எடுக்கும் தீர்மானங்களையும் விளக்குக.

   i) ஞாயிறு காலையில் ஓர் வினோத பயணத்திற்குச் செல்ல சந்தர்ப்பம் கிடைத்தல்

   ii) வேலை ஒன்றைத் தெரிவு செய்யும்போது

2. இயேசுவினால் கூறப்பட்ட பின்வரும் வசனங்களுக்கூடாக உங்களுக்கு கிடைக்கும் செய்திகளை விளக்கி எழுதுக.

   i) ''கலப்பையில் கை வைத்த பின் திரும்பிப் பார்ப்பவர் இறையரசிற்கு உரியவர் அல்ல''

   ii) ''இற்றுப் போகாத பணப்பைகளையும் விண்ணுலகில் குறையாத செல்வத்தையும் தேடிக் கொள்ளுங்கள்''.

# 25 இறையரசிற்கான அர்ப்பணிப்பு

**கடந்த பாடத்தில் கற்றுக் கொண்டதுபோல் இறையரசின் பிரஜைகளாகுவது பெரியதோர் நிகழ்வாகும். அவ்வாறான கடமைகளினுள் இறையரசின் இறுதித் திருப்புமுனை பற்றி நல்ல விளக்கத்தோடு இருப்பதே எதிர்பார்ப்பு எனப்படும். பாவத்தைவிட்டு மனம் திரும்பி கிறிஸ்துவின் இரண்டாம் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது இறையரசின் பிரஜைகளுடைய பொறுப்பாகும். அதற்காக இறைவனின் விருப்பத்தை நிறைவுசெய்து பொறுப்புடனும் விசுவாசத்துடனும் செயல்படுவது எதிர்பார்க்கப்படுகின்றது. இறையரசிற்குள் பிரவேசித்து சதாகால ஜீவனை பெற்றுக் கொள்ள உரிமையாக்கிக் கொள்ள தகுந்த ஆயத்தங்களோடு செயல்பட இப் பாடத்தின் மூலமாக வழியமைக்கப்படுகின்றது.**

**பரி லூக்** 12 : 35 - 40, 42 - 48, 13 : 1 - 9, 22 - 30

ஆசிரியர் : எங்கே நீங்கள் இன்னும் ஆயத்தமில்லையா?

சத்தியா : சேர், இன்னும் குழுவில் உள்ளோர் ஆயத்தமாகின்றனர். சிலர் இன்னும் வரவில்லை

ஆசிரியர் : (நான் உங்களுக்கு கூறியிருக்கிறேன்). நான் வரமுன்னே நீங்கள் வந்து ஆயத்தமாய் இருக்க வேண்டும் என விளையாட்டு வீரர் என்றால் தகுந்த ஆயத்தத்தோடு அர்ப்பணிப்பு தேவை. நல்லது, வந்திருப்போர் ஆயத்தமாகுங்கள். நாம் பயிற்சிகளைத் தொடங்குவோம்

மாணவர் : நாங்கள் ஆயத்தமாகிவிட்டோம் சேர்.

ஆசிரியர் : இப்போ அந்தச் சுண்ணாம்புக் கோட்டிற்கு நேரே நில்லுங்கள். தகவல்களுக்கு செவி கொடுங்கள். வெற்றிக்கம்பம் என்னும் இலக்குக்கு அருகே ஓட வேண்டுமாயின் நல்ல அவதானத்தோடு ஆயத்தமாகுங்கள். ஒன்று, இரண்டு, மூன்று

ஒரு போட்டி நடைபெறும் திகதி வரும்போது எல்லா வீரர்களும் முன் பயிற்சியும், தகுந்த ஆயத்தமும் பெற்றிருக்க வேண்டும். அவ்வாறே இறையரசிற்கு தகுந்த ஆயத்தத்தோடு இருப்பதற்கு இறையரசின் பிரஜைகள் யாவருக்கும் இயேசு ஆலோசனை வழங்கியுள்ளார்.

## **இறையரசின் உச்சகட்டமானது இயேசுவினுடைய மீண்டும் வருகையாகும்.**

*அவர் அதைப் பற்றி இவ்வாறு கூறியிருக்கிறார்.*

**''இதோ நான் விரைவில் வருகிறேன்'' அவரவர் செயலுக்கு ஏற்ப அவரவருக்கு நான் அளிக்கவிருக்கின்ற கைம்மாறு என்னிடம் உள்ளது''**

**(தி.வெ 22 : 12)**

அதற்கான முதற்படி

**லூக்கா** 12 : 35 - 40

இறையரசின் பிரசைகள் இயேசுவின் வருகைக்கு ஆயத்தமாக இருக்க வேண்டும். ''**உங்கள் இடையை வரிந்து கட்டிக் கொள்ளுங்கள். விளக்குகளும் எரிந்து கொண்டிருக்கட்டும்**''. அவ்வாறு இயேசு பழங்கால சமூதாயத்தின் ஓர் படத்தை இங்கு கொண்டு வருகின்றார். அந்த சமூகத்தின் மக்கள் நீண்ட உடை அணியும் பழக்க மிருந்தது. ஏதாவது செயலில் ஈடுபடும்போது அவர்கள் அந்த உடையை இடுப்பில் வரிந்து கட்டிக் கொள்வார்கள். அதன் அர்த்தமானது அவர்கள் செயல்பட ஆயத்த மாகியுள்ளனர் என்பதாகும்.

இந்த சிறிய பாடத்தின் மூலம்

- ★ இறையரசின் பிரஜைகள் அவர் மீண்டும் வரும்வரையில் பொறுமையுடனும் ஆவலுடனும் காத்திருக்கின்றனர்.
- ★ இறையவனுடைய செயலிலே அதாவது இறையரசின் செயலிலே தங்கியிருப்பது எதிர்பார்க்கப்படுகின்றது.

என்பது உணர்த்தப்படுகின்றது.

| விழித்திருத்தல் | எதிர்பார்த்திருத்தல் | ஆயத்தமாக இருத்தல் | பொறுமையற்றிருத்தல் |
|---|---|---|---|

ஆயத்தமாக இருக்கின்ற இறையரசின் பிரஜைகளுக்கு

## **இயேசுவினுடைய விசேட கிருபையும் அன்பும் கிடைக்கின்றது**

ஆனாலும் அவர் வருகின்ற நேரத்தைப் பற்றிய முன்னறிவித்தல் இல்லை. அவர் மாத்திரமே அறிந்திருந்தார். வீட்டை உடைத்து வரும் கள்வனைப் போல் வருவார். (லூக் 12 : 39)

அவருடைய விசுவாசமுள்ள தாசர்களுக்கு அவர் வரும் நேரத்தைப் பற்றி பயமில்லை. ஏனெனில் அவர்கள் எவ்வேளையும் ஆயத்தமாக இருப்பார்கள் எதிர்பார்க்காத நேரத்தில் இயேசு திரும்பவும் வரும்போது கடவுளுடைய விருப்பத்தைச் செய்து, விசுவாசத்துடன் ஆயத்தத்தோடும் பார்த்துக்கொண்டிருக்கின்ற இறையரசின்

*பிள்ளைகள் பாக்கியவான்கள். நீங்கள் ஆயத்தமா? மீண்டும் வருகின்ற இயேசுவை ஏற்றுக் கொள்ள ஆயத்தமா?*

இரண்டாம்படி

**லூக்கா** 12 : 42 - 48

*இயேசு மீண்டும் வரும் வரைக்கும் இறையரசின் பணிக்கு அர்பணித்தவர்களிடத்திலிருந்து அவர் எதை எதிர்பார்க்கின்றார்*

- *அவர்கள் அவரின் பணியில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதை எதிர்பார்க்கின்றார்.*
- *எப்போதும் அவருக்கு தகுந்த விதத்தில் பணியாற்றுதல்*
- *அவருடைய தாசர்களை தகுந்த விதத்தில் கவனித்தல்*
- *தமது உலக ஆசையை அவருக்காக தியாகம் செய்தல்*
- *இயேசுவினுடைய விருப்பப்படியும் அவருடைய வார்த்தைக்கு இணங்கவும் ஒழுங்கமைப்போடும் பொறுப்புடனும் பணி செய்தல்*

*அதற்காகப் பெறுகின்ற வரப்பிரசாதங்கள் இயேசுவினுடைய நம்பிக்கைக்கு உட்பட்டு பொறுப்புகளைச் செய்வதற்கு தகுந்தவர் ஆதல்.*

***''ஒருவருக்கு அதிகம் கொடுக்கப்பட்டால் அவரிடம் இருந்து அதிகம் எதிர்பார்க்கப் படும்''.***

## *அவர் மீண்டும் வரும்போது;*

- ★ *நமது புத்தியீனத்தால் கடவுளுடைய விருப்பத்தை நிறைவேற்றாதிருத்தலை இயேசு விரும்புவதில்லை கடவுளின் ஞானத்தைத் தேடிக் கொள்வதற்கு இறையரசின் பிரஜைகளுக்கு அவர் பல வழிகளைத் திறந்தார்.*

- ★ *அப்படியே கடவுளுடைய விருப்பத்தை அறிந்து அதைச் செய்யாமல் இருப்பது மிகவும் பெரிய தவறாகும். அது தேவ இராட்சியத்தின் சேவகருக்கு உகந்தது அல்ல.*

*ஆகையால் இறையரசின் பிரஜைகள் விசுவாசமாகவும் பொறுப்புள்ள தாசர்களாகவுமிருந்து இறைவனுடைய விருப்பத்தை செய்து, இயேசுவினுடைய காலம் வருவதைக் சந்தோஷத்துடன் எதிர்பார்த்து, இறை பணியில் ஈடுபடுவது அவசியமாகும். உங்களுக்கு முடியுமா அந்தப் பொறுப்பைத் தகுந்த முறையில் செய்து முடிப்பதற்கு?*

**லூக்கா** 13 : 1 - 9

***''இறையரசு சமீபமாயிக்கிறது, மனம் திரும்பி நற்செய்தியை ஏற்றுக் கொள்ளுங்கள்''*** மாற்கு 4:5 என்று கூறி இயேசு இறையரசிற்குள் செல்ல எதிர்பார்க்கின்றவர்கள் தமது பாவத்திலிருந்து மனம் திரும்ப வேண்டுமெனப் போதித்தார்.

***''பாவ மன்னிப்புக்காக மனம் மாறி திருமுழுக்கு பெற்றுக் கொள்ளுங்கள்''*** (லூக் 3 : 3) என்று கூறி திருமுழுக்கு யோவான் மக்களை யோர்தான் நதியில் மனம்மாறுதலின் திருமுழுக்கிற்கு ஈடுபடுத்தினார். அந்த செயற்பாட்டிற்கூடாக இறையரசின் பிரஜைகள் மனம்மாற வேண்டுமென்பது வலியுறுத்தப்படுகின்றது.

அது பின்வரும் அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது.

பாவத்திற்கான மனம் திரும்புதல்
|
ஆண்டவருடன் உறவு
|
நித்திய ஜீவன்

''ஒருவர் வேதனைப்படுவது தமது பாவத்தின் நிமித்தமே'' என்பது இஸ்ரயேல் சமூகத்தின் அடிப்படைக் கருத்தாகும்.

| | |
|---|---|
| **ஏரோதினால் கொல்லப்பட்ட கலிலேயர்கள்**<br>**லூக்கா** 13 : 1 | **சிலோவாம் கோபுரம் விழுந்து இறந்து போன பதினெட்டுப் பேர்**<br>**லூக்கா** 13 : 4 |

''அவர்கள் அநியாயத்தினாலும் பாவத்தினாலும் இறந்து போனதாக''
யூதமக்களின் கருத்தாக இருந்தது.
ஆனால்
இயேசுவினுடைய போதனை என்னவென்றால் அவர்களின் துன்பம், செய்த தீமையால் ஏற்படாத ஒன்று என்பதாகும்.

இயேசுவின் போதனை → மனம் திரும்பாமல் இருப்பது அதைவிடப் பாரதூரமானது

‘‘மக்கள் மற்றவர்களுடைய வாழ்க்கையின் சம்பவங்களுக்கு விளக்கம் கொடுப்பார்கள். ஆனால் தமது வாழ்விலே மனம்திரும்பாமல் இடம்பெறும் அழிவை உணர்ந்து கொள்ளமாட்டார்கள்.

எருசலேமிலும் சிலோவாமிலும் மக்களுக்கு நடந்த விபத்து அவர்கள் ஏற்றுக் கொண்ட தண்டனை இல்லை. அது வாழ்ந்து கொண்டிருப்பவர்களுக்கு அச்சுறுத்தலாகும். ஆனால் அவர்கள் மனம் திரும்பாவிட்டால் அழிந்து போவார்கள் என்பதற்கு அடையாளமாகும்.

அதிசயமாக நடைபெற்ற இவ்வாறான நிகழ்வு மனம்திரும்புதலுக்கு கிடைக்கின்ற அழைப்பாகும். விசேடமாக எமது வாழ்விற்கூடாக பலன் கொடுக்காததையிட்டு மனம் திரும்ப வேண்டும். அடுத்தவர்களின் வாழ்வின் சம்பவங்களைப் பற்றி தொடர்ந்தும் விமர்சனம் செய்து கொண்டு அதைப்பற்றிப் பேசி, காலத்தை அநியாயமாக்குகின்றவர்கள், மனம் திரும்புதலுக்குக் கூடாக அவர்களுடைய வாழ்வின் எண்ணங்களை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும், அன்றைய எருசலேம் மக்களைப் போன்றிராமல் விரைவில் மனம்மாற வேண்டும்.

பலன் கொடுக்காத அத்தி மரத்தைப்போல் இருக்காமல் பலன் கொடுக்கின்றவர்களாவதற்கு, இறையரசின் பிரஜைகளாவதற்கு, இயேசு எம்மை அழைக்கின்றார். அவர் மனம் திரும்புதல் ஊடாக எமது வாழ்வை மாற்றிக்கொள்ள எமக்கும் சந்தர்ப்பத்தைத் தருகின்றார். அந்தக் காலத்தை முடியுமானவரை அதைப் பாவனைக்கு எடுத்து மனம் திரும்புதலின் பலனை எமது வாழ்வினூடாக எடுத்துக் காண்பிப்பது அவசியமாகும். சதாகால ஜீவனின் உரிமையாளர் ஆவதற்கான சந்தர்ப் பம் மனம் திரும்புதலின் பலனை எமது வாழ்வுக்கூடாக எடுத்துக் காண்பித்தால் மாத்திரமே கிடைக்கும். அதனால் மனம் திரும்புவதை தாமதம் செய்யகூடாது.

நான்காவது படி

**லூக்கா** 13 : 22 - 30

அனேகர் உள்ளே செல்லாத, ஒடுக்கமான கதவுக்கூடாக செல்ல முயற்சி செய்வர். இறையரசின் பிரஜைகள் இரட்சிப்பு அல்லது நிலை வாழ்வை உரிமையாக்கிக் கொள்வதற்கு இயேசு அழைக்கின்றார்.

நிலை வாழ்வுக்குரிய வழி

ஒடுக்கம் அனேக துன்பம் கடினம்

ஆனால் இறுதியில் கிடைப்பது அழிந்து போகாத பெரிய விருந்து பசாரம் அதுதான் நிலைவாழ்வு

தெய்வீக வாழ்வின் சக்தியை அனுபவிப்பதற்காக இறையரசின் பிரஜைகள் ஒடுக்கமான வழியினூடாக உட்பிரவேசிக்க வேண்டும். அனேகமானோர் முயற்சி செய்தாலும் அவர்களுக்கு அதற்கான சந்தர்ப்பம் கிடைக்காது.

இறையரசின் பிரஜைகள் அந்த 'அனேகரை' பின்பற்றக் கூடாது. எஜமான் கதவை மூடும் முன் ஒடுக்கமான வழியினுள் போக முயற்சி செய்ய வேண்டும். எஜமான் தன்னுடன் உள்ளே செல்வதற்கு பின்வருவோருக்கு அனுமதி கொடுக்க மாட்டார்:

- ★ அவருடைய அன்பின் உறவுக்குள் உட்படாதவர்களுக்கு
- ★ அநியாயங்கள் செய்கின்றவர்களுக்கு
- ★ அவரைச் சரியாகப் புரிந்து கொள்ளாதவர்களுக்கு,

ஆனாலும்,

இறையரசின் பிரஜைகள் அவரை நன்றாக அறிந்து கொண்டு அவரோடு ஆழமான உறவுக்குள்ளே சென்று அவருக்கு தமது வாழ்வை முழுமையாக அர்ப்பணிக்க வேண்டும்.

''கடைசியானோர் முதன்மையாவர்; முதன்மையானோர் கடைசியாவர்.''

நிலைவாழ்வு என்ற இறையரசின் உணவை உருசி பார்ப்பதற்கு ஒன்று கூட்டப்படுபவர்கள் இவ்வுலகில் எந்த ஓர் பெறுமதியும் பெறாத ஒடுக்கப்பட்டவர்கள், வேண்டப்படாதவர்கள். ஆனால் அவர்கள் ஒடுக்கமான வாசல் வழியாய்ச் செல்வதனாலே, ''முதன்மையாகப் பிரவேசித்தவர்கள்'' என்று கணிக்கப்படுவார்கள்.

அவர்கள் இறையரசின் மகிமையைப் பெறுவார்கள். இவர்களே விடுதலை பெற்றவர்களுமாவார்கள்.

எனவே இறையரசின் பிரசைகள்,

- ★ கிறிஸ்து மீண்டும் வரும் வரை
- ★ தொடர்ச்சியாக ஆயத்தமாகவும் விசுவாசமுள்ளவர்களாகவும் பொறுப்புள்ள வர்களாகவும் பணி செய்ய வேண்டும்
- ★ உண்மையாகவே மனம் திரும்ப வேண்டும்
- ★ தொடர்ச்சியாக இயேசுவோடு ஆழமான உறவுக்குள்ளே உட்பட வேண்டும்.

அப்போது,

அவர்கள் இரட்சிப்புப் பெறுவார்கள். நிலைவாழ்வு என்ற பெருவிருந்தில் ருசிபார்ப் பார்கள்.

**செயற்பாடு**

1. பின்வரும் அடையாளங்கள் மூலமாக இறையரசின் பிரஜைகளுக்கு இயேசு முன்வைத்த வழிகாட்டல்களை விளக்குக.

    i) ''இடுப்புப் பட்டியை அணிந்து விளக்கைக் ஏற்றிக்கொள்ளல்''

    ii) ''அத்தி மரம்''

    iii) ''ஒடுக்கமான வாசல்''

2. ''இறையரசின் பிரசைகள் விசுவாசமுள்ள, பொறுப்புள்ள, பணியிலே ஈடுபடவேண்டும்'' விளக்குக.

# 26 இறைவார்த்தையின் ஒளி

**இந்த உலகிலே இறையரசை ஸ்தாபித்து, அதை நிறைவு செய்வதற்கு, மக்களை அறிவூட்டுவதற்கு இயேசு பலவிதமான கற் பித்தல் முறைகளை உபயோகித்தார். அவற்றுள் போதனைகள் மூலமாக அறிவூட்டுவது ஒரு முறையாகும். இன்று நாம் லூக்கா முன் வைத்துள்ள சமவெளிப் பொழிவு பற்றிக் கற்போம்**

மத்தேயு 5ம், 6ம், 7ம் அதிகாரங்களில் இருக்கின்ற மலைப்பொழிவினூடாக போதிக்கப்பட்ட செய்தி லூக்கா நற்செய்தியிலே 6ம் அதிகாரத்திலே சமவெளிப் பொழிவாக தரப்பட்டுள்ளது.

விசேட ஆசிரியராகக் கருதப்படுகின்ற இயேசு இறையரசின் ஆழமான குணாதிசயங்களை பொதுமக்களுக்கு அரமேய மொழியில் விளக்கிக் கூறினார். இயேசு வின் போதனையைக் கேட்க வந்தவர்களிடம் அவர்கள் வாழும் சுற்றாடல், கடற்கரை, மலை சார்ந்த சம்பவங்களை உவமைகளாகக் கூறி கற்பித்தார். இன்று நாம் இயேசு சமவெளியில் கொடுத்த போதனையைக் கற்போம்.

**வாசிப்போம்**
**லூக்கா 6:20-26**

செல்வத்தை கடவுளின் ஆசீர்வாதத்தின் அடையாளமாகவும் ஏழ்மையை கடவுளின் சாபத்தின் அடையாளமாகவும் யூதர்கள் நம்பியிருந்தார்கள். ஆனால் இயேசு ஏழ்மையை முன்மாதிரியாகக் கொண்டு அதன் ஆன்மீக சத்தியத்தை எடுத்து கூறினார்.

''ஏழைகளே, நீங்கள் பேறு பெற்றோர்; ஏனெனில் இறையாட்சி உங்களுக்கு உரியதே'' ஏழ்மையானவர்களுக்கு அவர்களின் நிலை புரியும். ஆனால் இறை வார்த் தையின் ஆழம் புரியாவிட்டாலும் இறைவனுடைய கருணையும் இரக்கத்தையும் பெற்றுக் கொள்ளவும் அவருக்குள்ளே தங்கி இருப்பதற்கும் ஏழைகள் பேறுபெற்ற வர்கள் இறைவனுக்காக ஏழ்மையாக்கப்பட்டவர்கள் பேறுபெற்றவர்களே. இவ்வுலக வாழ்விலே இறைவனுக்குள்ளே தங்கியிருப்போர் அனைவருக்கும் இறையரசுக்கு உரித்தாகும்.

''இப்பொழுது பட்டினியாய் இருப்போரே, நீங்கள் பேறு பெற்றோர்.

ஏனெனில் நீங்கள் பேறு பெறுவீர்கள்'' தங்களுடைய ஆன்மீகத் தேவைக்காக ஏற்படும் பசி நல்லதொரு வாழ்வின் இரகசியமாகும். இந்தக் குறைபாடு முழுமை அடைவதன் மூலம் திருப்தியடைவார்கள்.

''இப்பொழுது அழுது கொண்டிருப்போரா, நீங்கள் பேறுபெற்றோர் ஏனெனில் நீங்கள் சிரித்து மகிழுவீர்கள்.'' தம்முடையது போல பிறரின் குறைபாடுகளைச் செவி மடுத்து தயவும் கருணையும் காண்பிப்பதன் மூலம் திருப்தியடைவார்கள்.

இறையரசிற்காக துன்பமும் வேதனையும், புறக்கணிப்புக்களுக்கும் ஆளான வர்களும் பேறுபெற்றோர்.

## பேறுபெறாதோர்

''செல்வர்களே, ஐயோ! உங்களுக்குக் கேடு! ஏனெனில் நீங்கள் எல்லாம் அனுபவித்துவிட்டீர்கள்'' செல்வமற்றவர்களை எழுப்பிவிட தன்னலமற்றவர்களாக அதைச் செலவு செய்யாமல் செல்வத்தைப் பற்றி ஆடம்பரமாக எண்ணுவது ஓர் துர்ப்பாக்கியமாகும். கடவுளுடைய உதவி தேவையில்லை என்று செல்வந்தர்கள் நினைக்குமளவுக்கு சாபம் பெற்றவர்களாவார்.

''இப்போது உண்டு கொழுத்துதிருப்போரே, ஐயோ! உங்களுக்கு கேடு! பட்டினி கிடப்பீர்கள்''. தன்னலத்தின் மிகுதியால் ஆட்கொள்ளப்பட்டு, உலக போக்கிற்கு அடிமையாகி வாழுகின்றவர், அவ்வாழ்வின் வெறுமையை அனுபவித்தல் துர்பாக்கியமாகும்.

''இப்போது சிரித்து இன்புறுவோரே, ஐயோ! உங்களுக்கு கேடு! ஏனெனில் துயருற்று அழுவீர்கள்''. தங்களுடைய வாழ்விலே ஒரு குறையுமில்லை என நினைத்து, கடவுள் தேவையில்லை என நினைத்து வாழ்பவர்கள் துர்பாக்கியத்தை அனுபவிக்க நேரிடும்.

நேர்மையற்ற வாழ்வு வாழ்ந்து, வெளியரங்கமான மேன்மையை முன் வைத்து, புகழ்ச்சியை விரும்புகின்றவர்கள். சாபம் பெற்றவர்கள், தொடர்ச்சியான சுகத்தைத் தேடுகின்ற முறையிலே பாவத்தைச் சுமந்து திரியும் வழியைப்பற்றி இயேசு எச்சரித்துள்ளார்.

**அன்பினாலே சத்துருக்களுக்கு கருணை காட்டல்**

## **லூக்கா** 6:27-36

அன்பு, கிறிஸ்தவ போதனை, ''அகாபே'' என்ற கிரேக்க சொல்லின் அர்த்த மானது எல்லாத் தடைகளையும் கடந்து பிறருக்கு நன்மை புரிகின்ற அன்பாகும். அது பலனுள்ள செயற்பாடாகும். எங்களுடைய சினேகிதருக்கு அன்பு செலுத்துவது சாதா ரணமாகும். ஆனால் பகைவர்களுக்கு அன்பு செலுத்துவது இலகுவில் காணப்படாத குணாதிசியமாகும். உண்மையான அன்பின் மூலமாக சத்துருக்கருக்கும் அன்பு செய்யக் கூடியதாக இருக்கும். தெரியாதவர்களுக்கு செல்ல வேண்டிய வழியைக் காண்பிப்பது பொருத்தமானதாகும். அன்பின் ஊற்று எமது இறைவனாவார்.

இயேசு கூறிய பொன் விதி லூக்கா 6:31

**''பிறர் உங்களுக்கு என்ன செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்களோ அதையே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்''.**

இயேசுவின் இந்த உயர்ந்த வார்த்தைகளுக்கு அமைய நாங்கள் நன்மையை வளர்ச்சி அடையச் செய்து, முன்னோக்கிப் பயணித்து, ஒருவருக்கிடையே அன்பினாலே இணைந்து வாழ அழைக்கப்படுகின்றோம்.

நியாயத் தீர்ப்பைப்பற்றி இயேசு இறையரசின் பிரஜைகளுக்கு சாதாரண அளவுகோல் ஒன்றைக் கொடுத்தார். அதற்குக் காரணம் மற்றவர்களை நியாயம் தீர்ப்பதற்கு எமக்கு உரிமை இல்லாததாகும்.

## **லூக்கா** 6:37-42

இயேசு கூறிய போதனைக்கு ஏற்ப மற்றவர்களை நியாயம் தீர்ப்பதற்கு முன் எமக்குள்ளே இருக்கின்ற நன்மையற்ற காரியங்களை அகற்ற வேண்டும். அது பிறருடைய சிறிய சிறிய குறைபாடுகளை விடப் பெரிதாக இருக்கலாம். அதனால் இறையரசின் பிரஜைகளின் குணாதிசியங்களுக்கு அமைய இறைவன் எம்மை மன்னித்திருக்கின்றபடியால் நாங்களும் நியாயம் தீர்க்காமல் மன்னிப்பு வழங்க வேண்டும்.

பழங்களின் மூலம் மரத்தை அறிந்து கொள்வது போல எமது செயல்பாட்டின் மூலமாக எமது தனித்துவம் வெளிக்காட்டப்படும். லூக்கா 6:43-45 எமது வாழ்வின் முறை, நடத்தை, பேசும் விதம், ஆகியவற்றை சிறப்பாகப் பேணி, பிறரது கருத்துக்களுக்கு மதிப்பளித்து செயற்பட வேண்டும். லூக்கா 6:45ம் வசனத்தை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்.

***‘‘நல்லவர் தம் உள்ளமாகிய நல்ல கருவூலத்திலிருந்து நல்லவற்றை எடுத்துக் கொடுப்பார். தீயவரோ தீயதினின்று தீயவற்றை எடுத்துக் கொடுப்பார். உள்ளத்தின் நிறைவையே வாய் பேசும்’’.***

வீட்டிலே, பாடசாலையிலே பேசுகின்ற, செய்கின்ற அனைத்தும் பற்றி கவனமாக செயல்பட வேண்டும்.

## லூக்கா 6:46-49
## இருவகை அடித்தளங்கள்

***எங்களுடைய வாழ்வின் அடித்தளமாவது என்ன?***

எமது வாழ்வின் அடித்தளமாக அமைவது இயேசுவின் சமவெளிப் போதனைகளாகும். இப்போதனையைக் கேட்டுத் கொண்டிருந்த மக்களின் உள்ளத்தினுள்ளே ஆழமாகப் பதிவு செய்வதற்கு இயேசு இருவகை அடித்தளங்கள் பற்றிய அர்த்தமுள்ள உவமையைக் கூறினார். ‘‘ஆழமாக நிலத்தைத் தோண்டி அத்திவாரம் போடுவதாகும்.’’ அது இலகுவான காரியமல்ல புத்தியுள்ளவன் நிலத்தை ஆழமாகத் தோண்டி அத்திவாரம் போட்டது தனது வீட்டைப் பெலப்படுத்திக் கொள்வதற்காகும்.

எமது வாழ்க்கைப் பயணத்திலே விழுந்துவிடாமல் முன்னோக்கிச் செல்ல இறை வார்த்தையான அடித்தளம் மிகவும் அத்தியாவசியமாகும். வாழ்க்கைப் பாதையில் எமக்கு ஏற்படும் சவால்களை தயங்காமல் முகம் கொடுப்பதற்கு தேவவசனம் சக்தி கொடுக்கின்றது. இச்சமவெளிப் போதனை இறையரசின் பிரஜைகளின் வாழ்வின் தொடர்ச்சிக்கு அர்த்தமுள்ளதாக விளக்கப்படுகின்றது. இதற்கு ஏற்றதாக இயேசு எம்மிடம் எதிர்பார்ப்பது நல்லதொரு வாழ்க்கை முறையை நாம் பின்பற்றுவதாகும். உலகம் மெச்சுகின்ற பெறுமதிகளுக்கு அப்பால் சென்று இந்த மேலான போதனையை எல்லா யுகங்களில் வாழுகின்ற பிரஜைகள் பின்பற்றுவது கடினமாக இருந்தாலும் அதன்படி வாழ முயற்சி செய்தல் சவால் நிறைந்த ஒன்றாகும்.

### செயற்பாடு

1. செல்வம் மற்றும் ஏழ்மை குறித்து இயேசு முன்வைத்த இறையரசின் விழுமியங்கள் என்ன?

2. சிறியவர்களுக்கு தீங்கு செய்பவர்கள் குறித்து இயேசு கொடுத்த எச்சரிக்கையை நாம் எவ்வாறு செயல்படுத்த வேண்டும்?

# 27 நாளாந்த வாழ்விற்கு வழிகாட்டி

**''நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன்'' என்று கூறிய இயேசு எங்களுடைய வாழ்வை இறைவனுக்கு அர்ப்பணிக்க அவருடைய வாயினாலே வெளியிடப்பட்ட வார்த்தைகளுக்கூடாக வழிநடத்தியுள்ளார். அவ்வார்த்தைகள் திருவிவிலியமாகிய பரிசுத்த புத்தகத்தினுள் அடங்கியுள்ளது. இந்தப் பாடத்தினூடாக நாங்கள் இதை அறிந்துகொள்வோம்.**

**லூக்கா** 11:1-13, 18:1-8, 8:16-18, 14:7-11, 21:1-4, 17:5-19, 12:22-32, 14:34-35

## திருவிவிலியத்தின் உள்ளடக்கம்

இறை வார்த்தை எமது வாழ்வின் பயணத்திற்கு ஒளியாக உள்ளது. அவ்வாறே எமது வாழ்வினூடாக பிறருக்கும் அந்த ஒளி பிரகாசிக்கப்பட வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. திருவிவிலியத்திற்கூடாக இறை வெளிப்பாடும் இறையரசின் மனப்பாங்குகளும் எமக்கு வெளிப்படுத்தப்படுகின்றன. திருவிவிலியத்தை தினந்தோறும் வாசிப்பதால் இறையரசின் பிரஜைகளாக, கிறிஸ்துவுக்காக மேன்மையான பணியைச் செய்வதற்கு எமக்கு ஊட்டம் கிடைக்கின்றது.

கிறிஸ்துவைப் பின்பற்றும் வாழ்க்கையைக் கட்டியெழுப்புவதற்கு வழி காட்டும் சில திருவிவிலியப் பகுதிகளை ஆராய்வோம்.

**லூக்கா** 11: 1-13

இறை வேண்டல் கிறிஸ்தவ உறவைக் கட்டியெழுப்புவதற்கு கிறிஸ்தவர்களுக்கு உள்ள பிரபலமான ஆயுதமாகும். இயேசுவினுடைய இவ்வுலக வாழ்வின் போது இறைவேண்டலின் முக்கியத்துவத்தைப்பற்றி எமக்கு வெளிப்படுத்தினார். அவர் தமது பணியை ஆரம்பிக்குமுன் பாலைநிலத்தில் 40 நாட்கள் உபவாசமாக இருந்து ஜெபித்து தனது பணிக்காக ஆயத்தமாகினார்.

தமது சீடர்களைத் தெரிந்து கொள்ளும் முன் முழுஇரவு இறைவேண்டலில் ஈடுபட்டிருந்தார் என்று திருவிவிலியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறே பல அற்புதங்களைச் செய்யுமுன் அவர் இறைவேண்டலில் ஈடுபட்டார். 5000, பேரைப் போசிக்கும் சம்பவம், சிலுவையிலே அறையப்படும் முன், கெத்சமனே தோட்டத்தில்

ஜெபத்தின் மூலமாக கடவுளின் விருப்பத்தைத் தெரிந்து கொண்டார். அவ்வேளையிலே இயேசு தமது சீடர்களுக்கு அறிவுரை வழங்கி சோதனைக்குட்படாதபடி விழித்திருந்து இறைவனிடம் வேண்டும்படி கூறினார்.

ஜெபத்துக்கூடாக கடவுளுக்கும் எமக்கும் இடையிலான தனிப்பட்ட உறவு வளர்ச்சியடைகின்றது என்பது தெளிவாகத் தெரிகின்றது. இயேசுவிடம் தமது சீடர்கள் ஜெபம் செய்வதற்கு கற்றுத்தாரும் என்றபோது, அவர் இறைவேண்டலை கற்பித்தார். குடும்ப ஜெபமாக அழைக்கப்படுகின்ற இந்த ஜெபத்தில் முக்கியமான கருத்துகள் முன்வைக்கப்படுகின்றன.

- எங்களுடைய பிதாவாகிய கடவுளுக்கு கனமும் துதியும்
- இறையரசை இவ்வுலகில் நிலைநிறுத்துவது - ''உமது பெயர் தூயதெனப் போற்றப் பெறுக''
- இறைவிருப்பத்திற்கு முழு உலகையும் அடிபணித்தல்
- அன்றன்றைய தேவைகளை மாத்திரம் கேட்டல் - ''எங்கள் அன்றாட உணவை நாள்தோறும் எங்களுக்குத் தாரும்''
- பாவமன்னிப்பின் அவசியம் வரையறையுடன் தரப்பட்டுள்ளது எங்களுக்கு எதிராக குற்றம் செய்வோர் அனைவரையும் நாங்கள் மன்னிப்பதால் எங்கள் பாவங்களையும் மன்னியும்
- சோதனை வேளைகளிலும் தீங்கு வரும்போதும் பாதுகாப்பு வேண்டும் ''எங்களைச் சோதனைக்கு உட்படுத்தாது தீயோனிடமிருந்து எங்களை விடுவித்தருளும்''

மேலும் இயேசு ஜெபத்தின் மூலம் வேண்டுதலின் முக்கித்துவத்தை எடுத்துக் காட்டினார். ''கேளுங்கள் உங்களுக்கு கொடுக்கப்படும்''. எங்களுடைய உலகப் பிரகாரமான தேவைகள் மாத்திரமல்ல தூய ஆவியானவருக்குள்ளே முழுமை அடைவதற்கு பெலத்தை வேண்டி ஜெபத்தின் மூலம் வேண்டுதல் செய்வதற்கு வழிகாட்டினார்.

**''பரம பிதாவானவர் தம்மிடத்தில் வேண்டிக் கொள்கின்றவர்களுக்கு பரிசுத்த ஆவியைக் கொடுப்பது அதிக நிச்சயமல்லவா'' (லூக் 11:13)**

துக்கத்திலும், துன்பத்திலும், குறைவிலும், பிரச்சனைகள் மத்தியிலும் ஜெபத்தில் தரித்திருப்பதன் மூலம் ஆறுதலை எதிர்பார்க்க முடியும். கிறிஸ்தவர்களாகிய எமக்கு ஜெபமானது தைரியம், ஆறுதலைத் தரும் வழிமுறையாகும்.

### வாழ்வை ஒளிமயமாக்கிக் கொண்டு எமது சமூதாயத்திற்கும் ஒளியை வழங்குதல் (லூக் 8:16-18)

நாங்கள் கடவுளுடைய ஒளிக்கு சாட்சிபகரும் பிள்ளைகளாவோம். அவரிடத்திலிருந்து எமது வாழ்விற்கு கிடைக்கும் ஒளிமூலம் நன்மையும், பரிசுத்

தமும் உண்மைக் கூடாக எமது வாழ்வை பரிபூரணப்படுத்தி கொள்வது மிக முக்கியமானதாகும். அந்த நல்ல குணாதிசியங்களை சமூகத்தில் நிலைநாட்ட முயற்சி செய்யவேண்டும். பழைய யூதர் வீடுகளிலே ஓர் விளக்கை கொளுத்தி விளக்குத்தண்டின் மேல் வைப்பார்கள். இதன் மூலம் முழு வீடுமே ஒளியைப் பெறும். இதனை இயேசு அடையாளமாக எடுத்து எங்களுடைய வாழ்வில் நாம் ஒளி கொடுக்கும் விளக்கு என்று கூறினார். அந்த ஒளியில் இருந்து ஒன்றையும் மறைக்க முடியாது. தேவ வசனத்தினூடாக கிடைக்கின்ற வழிநடத்துதலின் ஒளி எமது வாழ்வைச் சுத்தப்படுத்தும். பாவம், தீமையான செயல்களிலிருந்தும் விடுபட அது உதவியாக இருக்கும். பரிசுத்தமான, நன்மையான வாழ்வை வாழ்வதற்கு கிறிஸ்தவர்களுக்கு அவர்களைச் சுற்றியிருக்கின்ற சமுதாயத்திற்கு நற்குணங்களை பரப்புவதற்கு சந்தர்ப்பம் கிடைக்கின்றது. நாங்கள் பெற்றுக் கொள்ளும் ஒளியைச் சமுதாயத்திலே பரப்புவது இயேசு எம்மிடம் எதிர்ப்பார்க்கும் ஒன்றாகும்.

**தனிப்பட்ட தேவைகளுக்காக கவலைப்படுவது பிரயோசனமற்றது. லூக்கா** 12:22-32

அன்றன்று வாழ்விலே பல தனிப்பட்ட தேவைகளுக்காக நாங்கள் கவலைப்படுவது தொடர்ச்சியாக இடம் பெறுவது அல்லவா? இயேசு தமது சீடருக்கு கூறிய எச்சரிக்கைகளை ஆராய்ந்து பார்ப்போம். திருவிவிலியத்தில் அந்த பகுதிகளை வாசியுங்கள். உணவு, உடை போன்றவற்றுக்காக கவலைப்படுவதிலிருந்து விலகியிருக்க வேண்டுமென்று இயேசு கூறியுள்ளார். இறைவன் எல்லாவற்றையும் எங்களுக்கு கொடுப்பார் என்று உறுதி அளித்துள்ளார். அவர் காட்டு செடிகளையும் ஆகாயத்துப் பறவைகளையும் அடையாளப்படுத்தி அவற்றைப்பற்றி கரிசனையுள்ள ஆண்டவர் மனிதராகிய எங்களை அதை விட மேலாக கரிசனைக் கொள்வார் எனக் கூறுகின்றார். ''எதை உண்பது என்றோ, உடலுக்கு எதை உடுத்துவது என்றோ கவலை கொள்ளாதீர்கள்''.

இவை உங்களுக்கு தேவையென்பது இறைவனுக்குத் தெரியும். முதலாவதாக அவருடைய ஆட்சியைத் தேடுங்கள் அப்போது இவை உங்களுக்கு சேர்த்துக் கொடுக்கப்படும் என்று இயேசு கூறினார். இவை எவ்வளவு ஆறுதலான வார்த்தைகளாகும். நிறையக் காரியங்களைப் பற்றி கவலைப்படும் எமக்கு மிகவும் ஆறுதலான செய்தியாகும்.

## பிறரை உபசரித்தல் லூக்கா 14:7-17

யூத சமூதாயத்தை போன்று இலங்கையரும் பிறரை உபசரிக்கின்ற மக்கள் என்று ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. உபசரிக்கும் போதும் உபசரிக்கப்படும் போதும் நாம் எவ்வாறு செயற்பட வேண்டுமென்று இயேசு தெளிவுபடுத்தியுள்ளார். ஓர் விருந்திற்கு அழைக்கப்படும்போது நாங்கள் முதன்மையான இடத்தில் அமரக் கூடாது என்று இயேசு கூறியுள்ளார். அதை ஓர் அறிவுரை மூலமாகத் தெளிவுபடுத்தினார்.

அழைக்கப்படும்போது தாழ்மை உடையோராக, கடைசி இடத்தில் போய் அமருங் கள். அழைத்தவர் உங்களை நண்பனே! முதல் இடத்திற்கு வாருங்கள் என்று கூறினால் அது உங்களைக் கனப்படுத்தும். தங்களை அளவுக்கதிகமாக நினைப்பதிலிருந்து விலகி இருக்க வேண்டுமென்று விளக்கினார். தங்களைத் தாழ்த்திக் கொள்பவன் உயர்த்தப்படுவான் என்று கூறினார். தாழ்மையுடன் செயல்படுவது ஓர் விசேட குணவியல்பு.

அவ்வாறே நாங்கள் அடுத்தவர்களை உபசரிக்கும்போது, யாரை அழைப் போம் என்பதை சிந்திப்போம். பணக்கார அயலவர்களையும் உறவினர்களையும் அழைக்கின்றபோது நாங்களும் அவர்களால் உபசரிக்கப்பட இடமுண்டு மீண்டும் எம்மை உபசரிக்க முடியாத ஏழைகளை விருந்திற்கு அழைக்கின்ற முக்கியத்துவத்தை இயேசு இங்கு எடுத்துக்காட்டியுள்ளார். இவ்வாறு கருணையுடன் செயற்பட்டால் எமக்கு மாறுத்தரம் கிடைப்பதாக இயேசு கூறியுள்ளார். பலவிதமான விருந்துப சாரம் செய்யும்போது இதை தியானியுங்கள். கொடுத்ததற்கு நிகராக மீண்டும் பெற்றக்கொள்ளும் ஆசை பணிசெய்வது இறையரசின் எதிர்பார்ப்பாகும்.

## நிலத்தின் உப்பு லூக்கா 14:34-35

உப்பு எமது உணவிற்கு சுவையைத் தருகின்றது. இயேசு உப்பை உருவகப் படுத்தி கிறிஸ்தவ வாழ்வின் உள்ளார்ந்த எண்ணங்கள் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். நாங்கள் வாழும் சமூதாயத்திலே அடுத்தவர்களின் வாழ்வைச் சுவையூட்ட அவர்களின் வாழ்வை நன்மையாக்க, நாங்கள் பரிசுத்த ஆவியால் பூரணமாக்கப்பட்டு தேவ வசனத்தைச் சரியாகக் கடைப்பிடிக்க வேண்டுமென்று இயேசு கூறுகின்றார். உப்பு சாரமற்று போனால் அது குப்பையிலே வீசப்படும். இதனால் எதைக் கூற விளைகின்றார். கிறிஸ்தவ வாழ்வு அர்த்தம் அற்றுப்போனால் இறையரசின் பிரஜாவுரிமை பலனற்றதாகும்.

## நம்பிக்கை லூக்கா 17:5-10

இயேசுவின் போதனைகளில் இன்னும் ஒரு முக்கியமான குணாதிசயம் விசுவாசம் அல்லது நம்பிக்கை ஆகும். சீடர்கள் இயேசுவினிடத்தில் கேட்டுக் கொண்ட இன்னோர் விடயமென்னவென்றால் தமது விசுவாசத்தைக் கூட்டிக் கொள்வது எவ்வாறு என்பதாகும். அதற்கு அவர் தெரிந்துகொண்ட சுருக்கமான உருவகம் கடுகு விதையாகும். கடுகு விதையைப் போன்ற அளவு விசுவாசம் இருந்தால் பெரிய காரியங்களைச் செய்யலாம் எனக் கூறினார். கடுகுவிதைபோல விசுவாசம் என்று இயேசு கூறியது சிறிய விசுவாசம் இருந்தால் பெரிய காரியத்தைச் செய்ய முடியும் என்பதாகும்.

இறையரசின் ஓர் காரியத்தை எம்மால் செய்யக்கூடுமானால் அந்தப் பணியைக் கீழ்படிவுடன் செய்வது எமது பணியாகும். அதற்காக எந்தவிதமான புகழையும் எதிர்பார்க்கக்கூடாது என்பதை இயேசு எடுத்துக் காட்டினார். லூக்கா 17:7-8 வசனங் களை வாசியுங்கள். தாழ்மையுடன் எங்களது பொறுப்பை இறை அர்ப்பணிப்புடன் எந்தவித நன்மையையும் எதிர்பார்க்காது செய்ய வேண்டும் என்பதைத் தெளிவுப டுத்தியிருக்கின்றது.

## நன்றியறிதல் லூக்கா 17:11-18

பத்து தொழுநோயாளர்களை குணப்படுத்திய அற்புதத்தின் மூலம் நன்றி கூறுவதன் முக்கியத்துவம் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. 10 பேரும் குணமடைவதற்காக இயேசுவிடம் வந்து அவருடைய கருணையை வேண்டிக் கொண்டார்கள். குணமடைந்த பின் ஒருவர் மாத்திரமே வந்து நன்றி கூறினார். யூதன் அல்லாத சமாரியன் பெற்றுக் கொண்ட சுகத்திற்காக கூக்குரலிட்டு கடவுளைக் போற்றிப் புகழ்ந்து இயேசுவுக்கு நன்றி கூறினான். ஆனால் ஏனைய 9 பேரும் அவர்கள் சுகமடைந்தபின் நன்றி செலுத்த மறந்து விட்டார்கள், இயேசு அவனிடம் கேள்வி கேட்ட விதத்தில் நன்றி செலுத்துவதன் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டினார். கிறிஸ்தவர்களாகிய நாங்களும் தினந்தோறும் மன்றாடலில் எமது தேவைகளை கடவுள் முன்வைக்கின்றோம். உதாரணமாக சுகத்திற்காக, ஆறுதலுக்காக, படிப்புக்காக சோதனைகளை மேற்கொள்வதற்காக கடவுளின் விருப்பிற்கு ஏற்ப கிடைக்கும் பதிலுக்கு நன்றி கூறுவது எமது பொறுப்பாகும். அப்படிச் செய்யாமல் சுகத்தைப் பெற்ற 9 பேரைப் போன்று நன்றி மறந்தவர்களாக காணப்படுகின்றோமா? தினந்தோறும் எமக்கு நன்மை செய்யும் கடவுளுக்கு நன்றியையும் துதியையும் கூறுவதற்கு நாம் இந்த சம்பவத்தின் மூலம் உந்தப்படுகின்றோம்.

## காணிக்கையின் முக்கியத்துவம் லூக்கா 21:1-4

யூத சமூதாயத்திலே சமய சட்டதிட்டத்தின்படி வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை கடவுளுக்கு கொடுக்கவேண்டும். இவ்வாறு செய்வதில் அவர்கள் திருப்தி அடைந்தார்கள். ஆனால் இயேசு இந்த சிந்தனையைத் தெளிவுபடுத்துவதற்கு ஆலயத்திலே காணிக்கை போட்ட ஏழைப் பெண்ணின் செயற்பாட்டை தெரிவு செய்தார். அவளின் கொடையை இயேசு பாராட்டினார். மற்றவர்கள் தமது ஆதாயத்திலிருந்து கொடுத்தாலும் ஏழை விதவை தனக்கு உள்ள முழுவதையும் திருப்தியான உள்ளத்துடனே காணிக்கையாக கொடுத்தாள். கிறிஸ்தவர்களாகிய எமக்கு இது பெரிய முன்மாதிரியும் சவாலுமாக உள்ளது. எங்களுக்குரிய எல்லாம் அப்படியானால் காலம், பணம், தாலந்து போன்றவற்றை ஒப்புவிப்பது எமது பொறுப்பாகும். அவை அனைத்தும் கடவுளுடைய கொடைகள் ஆகும். பணத்தை கொடையாகச் செலுத்திவிட்டு திருப்தியடைய முடியாது. தியாகமாகக் கொடுக்கும் கொடைகள் கடவுள் முன்னிலையிலே அங்கீகரிக்கப்படும்.

## செயற்பாடு

1) அ. கெத்சமனே தோட்டத்தில் இயேசு செய்த ஜெபத்தின் முக்கியத்துவத்தையும் சீடர்களுக்கு அந்த வேளையில் கொடுத்த போதனைகளையும் எடுத்துக்காட்டுக.

ஆ. கிறிஸ்தவர்களாகிய நீங்கள் ஜெபத்தை முக்கிய ஆயுதமாகப் பயன்படுத்திய மூன்று சந்தர்ப்பங்களைச் சுருக்கமாக முன்வைக்கவும்.

2) அ. நீங்கள் மற்றவர்களுக்கு விருந்தளித்த சந்தர்ப்பங்கள் எவை? அவ்வாறான சந்தர்ப்பத்திலே நீங்கள் எப்படிப்பட்டவர்களை அழைத்தீர்கள்?

ஆ. இயேசுவின் போதனையின் மூலம் மனப்பாங்கில் மாற்றம் ஏற்படுத்த உங்கள் சமூதாயத்திலே எப்படிப்பட்டவர்களை உபசரிக்க நீங்கள் எதிர்பார்க்கின்றீர்கள்?